ஸ்ரீ:
ஸ்ரீ ஆண்டாள் ஸஹாயம்.



ஸமேஸாரத்ரு: காமாநாம்ஸ மேஷாமஸமேசுவா : I
ஸமேதோகோதயா தேவ்யா ஸமேதயதாசேமுஷீம்II.

# முன்னுரை.

ஸ்ரீய; பதியான ஸர்வேசுவரன் திருவருளால் பெருகன்பி னரான பெரியோர் பன்னிருவர் நம் நாட்டின்கண்ணே அவ தரித்து நாலாயிரம் பாயிரங்கள் நமக்கு நல்கிப் போந்தனர். இப்பன்னிருவரில் ஸ்ரீ ஆண்டாளும் ஒருவராவர். பக்தியின் முதிர்ச்சியால் ஸர்வசக்தனை ஈசுவரனுக்கும் என்ன வரு கிறதோ என்று பயப்படும் இவர்கள்தமக்கு ஸ்ரீ ஆண்டாளை ஒரு சந்ததியாகக் கூறுவது ஸ்ரீவைஷ்ணவஸம்பிரதாயம். "அஞ்சு குடிக்கு ஒரு சந்ததியாய், ஆழ்வார்கள் தஞ்செயலை விஞ்சி நிற்கும்தன்மையளாய்" என்னும் உபதேச ரத்தினமாலைச்செய்யுளை நோக்குக. அஞ்சுகுடி என்பது வினைத்தொகை. அஞ்சுகிற குடி என விரியும். ஸ்ரீ ஆண்டா ளின் தந்தையரான பெரியாழ்வார் ஈசுவரனுக்கு என்ன வரு கிறதோ என்று அஞ்சிப் பல்லாண்டு பாடினர். மற்றைய ஆழ்வார்களும் இவரைப்போல்வராதலின் அவர்களெல்லோர்க் குமே ஸ்ரீ ஆண்டாளைத் திருமகளாகக் கூறுவராயினர். அவர் கள் எல்லோருக்கும் சந்ததியானதுபற்றியே அவர்களின் சொத் தாகிய பக்தியை இவள் முழுதுமடைந்துவிட்டனள்போலும்! எல்லோருடைய பக்தியும் இவளுக்கு ஒருங்கே சேர்ந்தது பற்றியே ஆழ்வாருக்கும் ஆண்டாளுக்குமுள்ள வித்யாஸம் பர்வதத்திற்கும் பரமாணுவுக்கும்போலே என்பர் பூர்வர்கள். "காதல் கடலின் மிகப் பெரிதால்" என்றும், என்தன் அள வன்றால் யானுடைய வன்பு" என்றும் தனித்தனியே அள

வில்லாத பக்திச்செல்வம் எல்லாம் ஓர் இடத்தில் திரண்டால் ஸ்ரீ ஆண்டாளின் பக்தி அதிசயத்தை என்னென்பது! "ஒரு சந்ததியாய் தஞ்செயலை விஞ்சி நிற்குந்தன்மையளாய்" என்பதில் இக்கருத்து சொருகிக் கிடப்பதைக் காண்க.

இத்தகைய பக்திமதியான ஸ்ரீ ஆண்டாள் திருவாய்மலர்ந்தருளிய திருப்பாவையின் கருத்துத்தான் நாடக வடிவமான இச்சிறு நூலாய் வெளிவருகிறது. வைஷ்ணவர்கள் மாத்திரமன்றி ஏனையோரும் பக்திரஸத்தைப் பெருக்கும் இந்நூலின் கருத்தைக் கண்டுகளிக்க வேண்டும் என்பதே எமது அவா. எம்மதத்தினருக்கும் ஸம்மதமாகவே இந்நாடகம் அமைந்துள்ளதென்றே நான் கருதுகிறேன்.

நாடகத்தமிழிலாக்கப்பட்ட திருப்பாவையின் கருத்தை நாடக வடிவமாக வெளியிடுவது பொருத்தமானதுதான். ஆனால் அரிய அந்நூலின் ஆழ்ந்த உயரிய கருத்துக்களை இச் சிறு நாடகம் எப்படி வெளிப்படுத்தும்? என்று சிலர் எண்ணக்கூடும். இதற்கு நாமளிக்கும் விடை இதுதான்:— சுவையறியும் சில வண்டினங்களுக்கு (ஆராய்வாளருக்கு) தேனிருக்குமிடத்தைத் தெரிவிக்கவே இந்நாடகம் வெளிவருகின்றது.

நோன்பைப்பற்றிக் கூறுவதால் முதல் நூல் திருப்பாவை என்று பேர்பெற்றதுபோல இந்நூலுக்கும் "மார்கழி நோன்பு" என்று பெயர் சூட்டியிருக்கிறது. அரங்கனை ஆண்டாள் கண்ணனாகச் சேவிப்பவள். ஆதலின் கண்ணனை நோக்கிய நோன்பு நோற்று அரங்கனை அடைதல் கூடும்.

நோன்பின் பலனாக அரங்கனை ஆண்டாள் அடைந்து விடுவதாகக் காட்டி இந்நூல் முடிவடைகிறது. அரங்கனை ஸ்ரீ ஆண்டாள் பங்குனி உத்தரத்தில் கைப்பிடித்தனள். இவ்

வுத்ஸவம் இன்றும் ஸ்ரீவில்லிபுத்தூரில் கொண்டாடப்பட்டு வருகிறது. சீதை ஸ்ரீராமனை மணம் புணர்ந்ததும் இந்நாளில் தான். பாற்கடலில் பிராட்டி இன்றுதான் தோன்றினள். இத்தகைய சுபதினத்தில் — அதாவது ஸ்ரீ ஆண்டாளுக்குத் திருக்கல்யாணம் நடந்த இந்நன்னாளில் — நிகழும் பங்குனி உத்தரம் பௌர்ணமிதிதி வெள்ளிக்கிழமை கூடிய சுபதினத்தில் அரங்கனை ஸ்ரீ ஆண்டாள் அடைவதாகக் கூறி, அன்றே இந்நூல் வெளிவருவது பெரிதும் எமக்கு மகிழ் ஒட்டுகிறது.

இந்நூலினை வெளியிடுவதற்குப் பொருளுதவி புரிந்தவர் ஸ்ரீமான், உ. வே. பெரிய தம்பு திருவேங்கிடத்தய்யங்கார் அவர்கள். பரம்பரையாகத் திருவருளும், தரும சிந்தையும் தழைத்துவரும் உயர்குடும்பத்தில் தோன்றிய அன்னார், தனது இயற்கையான வள்ளல் தன்மையையும், ரஸிகத்தன்மையும் காட்டித் தமிழுலகிற்கு மகிழ்வூட்டிவிட்டனர். அவர் புரிந்த பேருதவியை நான் என்றும் பாராட்டக்கடமைப்பட்டுள்ளேன்.

இந்நூலுக்கு அபிப்பிராயம் கொடுத்துதவிய பெரியார்களுக்கும் என் நன்றி உரித்தாகுக. நிறையறிவிலாத யான் இந்நூலில் உள்ள குற்றங்குறைகளை எடுத்துக் காட்டினால் மகிழ்வுடன் ஏற்றுக்கொள்வேன். இந்நூலை யாரும் வாங்கி படிப்பதற்கேற்ப, ஸ்ரீமான் தம்பு திருவேங்கடத்தய்யங்காரின் கருத்துப்படி, விலை மிகவும் குறைவாகவே ஏற்படுத்தப் பட்டிருக்கிறது. தமிழன்னையின் திருவடிகளில் பரிவுடன் ஸமர்ப்பிக்கப்பட்ட இந்நூலை அறிவுளோர் ஆதரிப்பார்களாக.

ஆசிரியன்,

திருமலைநல்லான் T. ராமகிருஷ்ணய்யங்கார்
சிரோமணி.

ஆழ்வார்திருநகரி,
26—3—37.

---

# இடம்.

ஸ்ரீவில்லிபுத்தூர் ... ... ...
திருவாய்ப்பாடி ... ... ...
ஸ்ரீரங்கம் ... ... ... ...

---

# பாத்திரங்கள்.

| | |
|---|---|
| கண்ணன் | ... தலைவன் - பின் ரங்கராஜன். |
| கருடன், நற்செல்வன் | நண்பர்கள். |
| விதூஷகன். | |
| பெரியாழ்வார் | ... தலைவி தந்தை. |
| ஆதிநாராயணகோபர், அனந்தகோபர், கேசவகோபர் | திருவாய்ப்பாடிக் கிழவர்கள். |
| பர்ஜந்யன் | ... மழைத்தேவன். |
| திருவேங்கிடாச்சாரியார் கிழவர் | ஸ்ரீவில்லிபுத்தூர்க் கிழவர்கள். |
| வஸிஷ்டர் சுகர், வியாஸர் நாரதர் | திருவாய்ப்பாடிக்கு வந்த முனிவர்கள். |

## பெண்கள்.

| | |
|---|---|
| ஸ்ரீஆண்டாள் | ... கதாநாயகி. |
| அநுக்கிரகை, சுசீலை | ... தோழிகள். |
| விரஜை | ... தலைவியின் தாய். |
| நப்பின்னை | ... ரங்கராஜன் மனைவி. |
| ரங்கநாயகி | ... ரங்கராஜன் மனைவி. |

மற்றும் ஆய்ச்சியர்கள்.



ஸ்ரீ ஆண்டாள் திருக்கல்யாணம்.

ஸ்ரீ ஆண்டாள் சகாயம்.

# மார்கழி நோன்பு

அல்லது

# ஸ்ரீ ஆண்டாள் திருமணம்.

## முதல் அங்கம் - முதற்களம்.

நேரம் - மாலை. இடம் - சோலை.

### ஸ்ரீ ஆண்டாளும் அனுக்கிரகையும் வருகின்றனர்.

ஆண்டாள்:— சகி! இச்சோலையைப் பார். என்ன நேர்த்தி! எத்துணை வனப்பு! அதிலும் மாலை நேரம். தங்கத்தை உருக்கியதுபோன்ற தன் செங்கிரணங்களை, ஏழைகள் குடிசைகளிலும் உத்யானத்திலும் பரிதி பரப்பிக்கொண்டிருக்கிறான். எங்கு பார்த்தாலும் தங்கக் கொடிகள், தங்கப்புஷ்பங்கள், தங்கப்பறவைகள். இவ்வுலகம் அழியக்கூடியதாதலால் வெறுக்கத்தக்கதென்று வேதாந்திகள் கூறுகின்றனரே. அது இயற்கைச் சுவையறியாதார் வாதம் என்பதெனது அபிப்ராயம். தினந்தோறும் தங்கதிரிணைக் கதிரவன் இங்ஙனம் வீசவில்லையா? ப்ரளயகாலத்திலும் இவைகளை யழிக்க மனமில்லாமல் ரஸிகக்கடவுள் தன் வயிற்றில் வைத்துக் காப்பாற்றுகிறான்.

அநுக்கிரகை:— ஆம். இயற்கையினில் எவர் மனந் தானீடுபடாது? இவ்விதமிருப்பது வழக்கந்தான் என்று அலக்ஷ்யம் செய்யும் மூடர்கள்தான் இதை வெறுக்கின்றனர். முற்றும் துறந்த முனிவர்கள்கூட இயற்கையினில் தம் திடமனதைக் கொள்ளை கொடுத்துவிடுகின்றனர். இஃது அவர்கள் இன்மொழியை ஆராய்ந்தால் நன்கு புலனும். என்? நின் தந்தையும்கூட இயற்கையன்னைக்கே தங்கவி முழுதும் கப்பம் கட்டிவிட்டனரன்றோ? இக்கொடியைப் பார். இக்கொள் கொம்பை எவ்வளவு இறுகத் தழுவுகிறது. இதில் வைத்த நாட்டத்தைத் திருப்ப யாரால் முடியும்?

ஆண்டாள்:— (ஆச்சரியத் தோற்றத்துடன் அதைப் பார்த்தவண்ணம்) சகி! நெடுநாள் பிரிந்த மணாளனை யணையும் பெண்மணி போன்று, இக்கொடி கொம்பைச் சுற்றிக்கொண்டிருக்கிறது. அம்மடந்தையரின் மந்தஹாஸத்தை மலர்ந்த மலர்கள் பரிஹஸிக்கின்றன. மலர்களில் ததும்புந் தேனைப் பருகும் வண்டினங்கள் இனிது முரல்கின்றன. தென்றலுக்கசையும் அசைவு அதைத் தலையசைத்துப் புகழ்வதையொக்கும். இக்கொம்பை விட்டுப்பிரிந்தால் "பிரியிற்றரியேன்" என்னும் உத்தமநாயகிகள்போல இக்கொடி என்னபாடு படும்? பிரியேன் என்ற பெருமையால் அன்றோ இது அந்தமில் பேரின்பத்தை யநுபவிக்கிறது. உயரிய தம்பதிகளின் காதலின் மேம்பாட்டை யிக்கொடி நன்கு விளக்கிக் காட்டுகிறது.

அநுக்கிரகை:— (புன்னகையுடன்) நீ கூறுவது முற்றிலும் பொருந்தும். ஆனால் உன்னுடைய வார்த்தை நீ யிதைக்கண்டு பொறாமைப்படுவதை விளக்குகின்றது.

ஆண்டாள்:— இல்லை சகி! நான் பொறாமைப்படவில்லை. உண்மையிலேயே இவ்வுலகினில் காதலுக்கிணை கிடைக்கவே கிடையாது. அதனால்தான் கவியரசர்கள் அதனையே கையாளுகின்றனர். உலகிற் சிறந்தவையெல்லாம் கவிவாணர்களதின் மொழிகட்கிடமாவதியல்பேயன்றோ? ஸ்வாமியான பரமாத்மாவிடம் தாஸர்களான ஜீவாத்மாக்கள் செலுத்தும் பக்திக்குக் காதல்தான் தகுந்த திருஷ்டாந்தம். "ஞானிக்கு நான் பிரியன் எனக்கவன் பிரியன்" என்றான் கீதாரியன். இக்காதலின் உண்மையை அறிந்தே முற்றுந் துறந்த முனிவர்களும் மறு ஜன்மம் கோபிகைகளாகப் பிறந்து கண்ணனை யநுபவித்தனர். முனிவரினும் பன்மடங்கு ஞானதிகரான "பராங்குசர்" முதலிய நம் பெரியோரும் மறுபிறவி வரையிலுங்கூடத் தாங்க இயலாமல் அதே பிறவியில் ஆணாயிருந்தும் உண்மைப்பெண்டிர் நிலைமை எய்தி பரமாத்மாவிடம் காதல்கொண்டு உருகி நைந்தனர் எனின் காதலின் மேம்பாட்டை யான் இயம்பவும் வேண்டுமா?

அநுக்கிரகை:— ஆணாயிருந்தும் பெண்மையுற்ற பெரியோரினும் நீ பெரியை. ஏனெனில் உண்மையிற்

பெண்மகளாகவே தோன்றிய நின் காதல் அவர்களுடைய காதலிலும் சிறியதா மன்றோ?

ஆண்டாள்:— (சிறிது கோபத்துடன் தலை குனிந்து) நான் காதல்கொண்டேனோ? யாரிடம்? இஃதென்ன விந்தை? நானறியாமல் என் காதலை நீ தெரிந்துகொண்டுவிட்டனைபோலும். இனியிதுபோன்ற அடுக்காத சொற்களை விடுக்காதே.

அநுக்கிரகை:— ஏன் மறைக்கின்றனை? நீ நின் காதலனைக் காணாமற் படும்பாடுகளையெல்லாம் நான் நன்கறிவேன். நின் முகம் வெளுத்திருக்கிறது, ஒளி மழுங்கவில்லை. இதன் காரணம் விரஹத்தைத்தவிர வேறு எதாகவிருக்கமுடியும்? நோயில்லாமல் உன் உடம்பு இளைக்கக் காரணம் யாது? நீ அடிக்கடி பெருமூச்சு விடுகின்றனையே, எதற்காக? நீ ஏன் இப்பூஞ்சோலைக்கு அடிக்கடி வர விரும்புவதில்லை. குயிலோசையிலும் தென்றற்காற்றிலுமுள்ள பயந்தானே? அழகிய மணவாளனைப்பற்றிப் பேசும்போதெல்லாம் நின் மேனியிற் றோன்றும் மயிர்க்கூச்சலை யான் பன்முறை கண்டிருக்கிறேன். எனவே நின் மனதைக் கவர்ந்த கள்வன் அவனேயென நான் நன்கு அறிவேன். மேலும் இலக்குமன்போல் பிள்ளைப்பருவத்திலேயே பெருமாளிடம் பற்றுக்கொண்ட நீ அவன் திவ்ய வைபவங்களைப் பாடினால்மட்டுமே உறங்குவாயென்று உன் தந்தை கூறநாம் கேள்விப்படவில்லையா? பாலியத்திலேயே இவ்விதமாயின் இப்பொழுது—அதாவது இந்த யௌவன

தனையில் அவனிடம் பற்றுக்கொள்ளவில்லை என்பது ஏற்கற்பாலதாமோ?

ஆண்டாள்:- (தலை குனிந்து) சகி! நீ யென்னை இவ்வாறு பரிஹஸிக்கவோ இங்குவந்தனை? பரிஹஸிக்கும் ஆற்றுன் இல்லாத பழியைச் சுமத்துவதில் நீ கொஞ்சமும் அஞ்சுவதில்லை. நான் மறுத்திடிலோ ஒன்றுக்குப் பத்து வார்த்தை! அம்மா! போதும். நிறுத்திக்கொள்.

அநுக்கிரகை:— (புன்னகையுடன்) நீ யென்ன கூறினும் உண்மையை மறைக்க முடியுமோ? பிரிவாற்றுமை முற்றிய பின்னர் நீயே வலியக்கூறவேண்டியிருக்கும். அப்பொழுது பார்த்துக்கொள்கிறேன் (சிறிது தூரம் சென்று பூக்கொய்கின்றனள்).

ஆண்டாள்:— (தனக்குள்) சகியை நான் சினந்து கூறிவிட்டேன். வேறு வார்த்தையாடி என் சகியின் உள்ளமுவக்கச் செய்கிறேன் (வெளியில்) சகி! இச்சோலைக்கு ஈடு இவ்வுலகினிலேயே இல்லையென்கின்றனரே! இது உண்மைதானு? உன்னபிப்பிராயம் என்ன?

அநுக்கிரகை:— இச்சோலையைவிடப் பன்மடங்கு வனப்புவாய்ந்த மற்றுமோர் சோலை யிருக்கிறது.

ஆண்டாள்:— அஃதெங்கே யுளது? அதை நான் காண அவாவுறுகிறேன்.

அநுக்கிரகை:— அச்சோலை வெகு தூரத்திலில்லை. ஆழ்ந்த நாவியெனும் வாவியுடன் கூடியதும், மூன்று

மடிப்புக்களாகிய படிக்கட்டுக்களுடையதும், தோள்க ளென்னும் கொடிகளுடன்கூடியதும், கண்களென்னும் வண்டினங்களுடையதுமான நினது வடிவமே அச் சோலை. நின் வடிவச்சோலைக்கும், இச்சோலைக்கும் நெடுவாசியுண்டு என்பதெனதபிப்பிராயம்.

ஆண்டாள்:— பரிஹஸிப்பது உன் பிறவிக்குணம் போலும்.

அநுக்கிரகை:— சகி! இங்கே என் பக்கம் வா. மணமலிமலர்களிங்கு மிகுந்திருக்கின்றன. பொற்கொடி யாளான வுன்னையிக் கொடி, தன் வண்டொலியால் அழைக்கின்றது.

ஆண்டாள்:— இங்கில்லாவிடிலன்றோ அங்கே வர வேண்டும்.

அநுக்கிரகை:— ஆமா சகி! வரவேண்டாம். வந் தால் வண்டினங்கள் இம்மலர்களைவிட்டு நின் முகமல ரின்கண் வீழ்ந்து "அதாமதுவைப்" பருகிவிடும். தேவர் கட்கெல்லாம் கடல் கடைந்தமுதமெடுத்தீந்த வள்ள லுக்கெனச் சேமித்துவைத்திருக்கும் மதுவைக் கேவலம் வண்டினங்கள் பருகக் கொடுப்பது நியாயமாகுமா?

ஆண்டாள்:— சகி! உனக்கென்றெற் பதிற்கூற வியலாது. (என்று வேறோர் இடம் சென்று) சகியின் சாமர்த்தியந்தானென்ன! எவ்வளவு புத்திக்கூர்மையும் ஊஹமும் அவளுக்கு! என் விரஹவேதனையை அவள் எவ்வாறோ அறிந்துகொண்டனளோ? நான் எவ்வளவு

மறைத்தாலுமவள் ஒப்பவில்லை, இன்னொரிடம் காதல் கொண்டேனென்னும் உண்மையைத் துணிந்து பணிக் ன்றனள். ஆஹா! காமத்தீயுள்புகுந்து கதுவக், கங்குல் யாமங்களில் தென்றலுக்கிங்கிலக்காய் நான் படும்பாடு மறைத்தற்குரியதோ? மெல்லமெல்ல மலயாநிலம் வந்து வீசவே என் விரஹாநலம் விரைந்து பொங்கியெழு கின்றது. காற்றுக்கும் நெருப்புக்கும் ஸ்நேஹமுண்டு என்று உலகினிற் கூறுகின்றனர். இவ்வுண்மையை என்போன்ற விரஹிதான் முதன்முதலில் உணர்ந் திருக்கவேண்டும். இவ்வனம் "வசித்தற்கினிய சோலை" எனும் மாற்றம் வெறும் ஏமாற்றமாகவே முடிந்தது. இதைக் காமதேவன் தன் கூரிய கணைகள் வைக்கும் படைச்சாலையாகவே யான் கருதுகிறேன். ஆஹா! காம தேவனின் மஹிமை அளவிடற்கரிது. கடவுளாலு மவன் கட்டளையைக் கடக்கமுடியாது. காமதேவா! என்னைக் கலக்கவேண்டாம். தொழுதுமுப்போதுமுன் னடிவணங்கித் தூமலர் தூவி யேத்துகின்றேன். பாற் கடல்வண்ணனென் கண்ணனுக்கே பணிசெய்து வாழ வருள்புரிவாய். அம்மாயனுக்கன்றி மானிடவர்க்கென்று பேச்சுப்படில் யான் வாழகில்லேன்கண்டாய். இது நிச்சயம். கேசவ நம்பியைக் கால்பிடிப்பாளென்னு மிப் பேறே எனக்கருளவேண்டும். அந்தோ! காமன் கழலடி வணங்கியு மென்னையேன் அவன் படைகள் அடர்க் கின்றன. இதோ இக்குயிலின் கோலாஹலம் ஆலா ஹலத்திலும் கொடிதாயுளது. ஏ குயிலே! என்று மிக் காவிலிருந்து என்னைத் ததர்த்தாதே. யான் என்புருகி

நெடுங்கண்களிமை பொருந்தாமல் பலநாளாகத் துன்பக் கடலில் புக்குழல்கிறேன். அன்புடையாரைப் பிரிவதா லுண்டாகும் நோயை நீயும் அறிகின்றிலேயோ? நற்பொழில்வாழ் நற்குயிலே! அக்கார்வண்ணக்கண்ணன் வரக் கூவவேண்டும். இன்றேல் என் பொன்வளைகளைக் கொண்டு தருதல்வேண்டும். இரண்டித்திலொன்றைத் திண்ணமாய் நீ செய்தாகவேண்டும். இன்றேல் இப் பூங்காவில் வாழவொட்டாது நான் விரட்டுவேன். பூவிதழ்கள் மெல்லியனவன்று உண்மையில் அவை கத்தி முனையிலும் கூரியனவே. சந்தனம் என் தனத்திற்குச் செந்தணல்தான் பகலிலுள்ள வேதனையைவிட இரவு என்னை மிகவும் துன்புறுத்துகின்றது. ஓர் கங்குல் ஆயிர மூழிகளே. அதிலும் சுக்கிலபக்ஷமாகில் கேட்கவேண்டியதில்லை. என்கதி அதோகதிதான். திங்கள்வடுறுத் தென்னை நலியும்முறை மிகப்பெரிது. அமாவாசையில் மறைந்த மதி மறுபடியும் ஏன் உதிக்கிறான்? பாபிகள் இவ்வுலகை எளிதில் விடுவதில்லை. ஆஹா! உலகில் தீயோர் வேஷம் வெகு விசித்திரமானது. சந்திரன் எவ்வளவு கொடியவன்! அவன் குளிர்ந்தவனுகக் கொண்டாடப்படுகிறான். இவன் கொடுமையை இவ்வுலகறிவதில்லை. நஞ்சரவமும் இவன் வெப்பந் தாங்கமாட்டாமலன்றோ இவனையுமிழ்ந்துவிடுகிறது. இக்கொடியோன் தன் கிரணங்களாற் பனி எனும் புனைபெயர்பூண்ட நெருப்புத்தணல்களை வாரிக்கோட்டுகிறான். இதை யாரால் பொறுக்கமுடியும்? எல்லாமறிந்தவக்கள்வன் என் நிலைமையைமட்டும் உணர்கிலனோ? பாற்கடல்

பள்ளிகொள்வானைப் புணர்வதற் காசையினால் கொங்கை கிளர்ந்து குமைந்து குதூகலித்து என்னுவியை ஆகுலம் செய்யவும், அவனிதை உணராதவன்போல் பஞ்சினும் மெல்லிய வரவணையில் திருமகளுடன் கூடிக் களிக்கின்றனனே. இது நியாயமாகுமா? தீமை செய்யும் ஸ்ரீதரா! நான் தினந்தோறும் உனக்கு மலர் மாலை சூட்டிப் பரிவுடன் தருகின்றேனே. நீமட்டு மேன் என் கூந்தலில் மலர்சூட்டக் கூடாது? இன்றாவது வந்தெனதாசையை நிறைவேற்றித் தர வேண்டும். இன்றவன் வருவானென்று கூட லிழைத்துப் பார்ப்போம் கீழே அமர்ந்து கூட லிழைக்கிறாள்.

> “பூமகன்புகழ் வானவர் போற்றுதற்
> காமகன் அணிவாணுதல் தேவகி
> மாமகன்மிகு சீர்வசுதேவர்தம்
> கோமகன்வரில் கூடிடுகூடலே”

(இதற்குள் அநுக்கிரகை வந்துவிடுகிறாள்)

ஆண்டாள் :— (சடக்கெனவெழுந்து) சகி! எவ்வளவு நேரம்? நான் போதுமான பூக்கொய்துவிட்டு நின் வரவை நெடுநேரம் எதிர்பார்த்து நிற்கிறேனே.

அநுக்கிரகை:—என் வரவை யெதிர்பார்க்கத் தனியிடம் வேண்டுமா? நீ யெதிர்பார்க்கு மக்கார்க்கடல் வண்ணனைத் திண்ணமாய் நீயென் உதவியின்றி நண்ண முடியாது. பிராணசகிக்குக்கூட மறைக்கும் ரஹஸ்யம் ஒன்றுண்டுபோலும்.

**ஆண்டாள்:**— கோபக்குறியோடு பார்க்கிருள்.

அநுக்கிரகை:— சகி! தனியே பூக்கொய்யாமல் ஏதோ நினைந்து உருகியதால் இங்ஙனம் உன்னை நான் கூறினேன். இதற்கேன் கோபம்? (கையைப் பிடித்துக் கொள்ளுகிருள்).

இருவரும் செல்கின்றனர்.

**முதல் அங்கம் முதற்களம் முற்றிற்று.**

சுபம்.



# மார்கழி நோன்பு

அல்லது

# ஸ்ரீ ஆண்டாள் திருமணம்.

## முதல் அங்கம் - 2-வது களம்.

இடம்-வடபெருங்கோயிலுடையான் சந்நிதி வில்லிநகர்.

*கையில் குடலையுடன் பெரியாழ்வார் வருகிறார்.*

பெரியாழ்வார்:— (ஸாஷ்டாங்கமாக வணங்கி யெழுந்து மத்தகத்திடைக் கைகளைக் கூப்பி) நாராணு! மஹாப்ரபோ! வடபத்ரசாயிந்! ஸர்வலோக சரண்ய! கருணைக்கடலே! எஞ்சலிலென்னுடை யின்னமுதே! நன்மை தீமைகள் ஒன்றுமறியா யான் ஓவாதே நமோ நாராணு என்பேன். தோட்டமில்லவள் ஆத்தொழு ஓடை துடவையும் கிணறுமிவை யெல்லாம் வாட்ட மின்றி உன் பொன்னடிக்கீழே வைக்கின்றேன். அடியேன் உண்ணுநாள் பசியாவதொன்றில்லை. நமோநாராணு வென்றெண்ணு நாளே எனக்குப் பட்டினி நாள். ஆசையினாலே உள்ளம் சோர உகந்தெதிர் விம்மி உரோம கூபங்களாய், கண்ணநீர்கள் துள்ளம்சோர வுன்னை நாள் தொறும் தொழுதேத்தும் நன்மையே எனக்கருள் செய்யவேண்டும். கொங்கைச் சிறுவரை யென்னும் பொதும்பினில் அழுந்திக்கிடந்துழலுமென்னை வல்வினை

கள் மாற்றி, பங்கப்படாவண்ணம் செய்த நின்னருள் கண்டாய் இவ்வுலகினில் மிக்கது. பிரமகுருவாகி வந்து நீ யென் வன்னெஞ்சம் புகுந்து, என் சென்னித்திடரில் பாதவிலச்சினை வைத்த விப்பண்பினை என்னென்பேன்! பையரவினணைப் பள்ளி கொள்கின்ற பரமமூர்த்தி! பெற்ற தாயர் வயிற்றினைப் பெருநோய் செய்வான் பிறந்த பாவகாரிகள் படர்ந்த விப்பாரினில், மரகதமலை போல் நிலை பெயராமல் நீ படுத்திருக்கும்படி யென்னே! குடையும் செருப்பும் இலாமல், கடியவெங்கானிடைக் கன்றின்பின்போன நின் சிறுக்குட்டச் செங்கமலவடிகள் வெதும்பி, கண்கள் சிவந்து, உடலம் சிதைந்த தன்மேலோ அயர்ந்து நீ உறங்குகின்றனை. உன்னை யிது காறும் தனியே விட்டு இருந்த என்னின் மனம் வலியா ரொருவனுண்டோ? பஞ்சாயுதங்களே! என் சிறுக்குட்டனின் பள்ளியமையைப் பாதுகாத்துக்கொள்ளுங்கள்.

"உறகலுறகலுறகல் ஒண்சுடராழியே! சங்கே!
அறவெறிநாந்தகவாளே! அழகியசார்ங்கமே! தண்டே!
இரவுபடாமலிருந்த வெண்மர் உலோகபாலீர்காள்!
பறைவையரையா! உறகல்பள்ளியறைகுறிக்கோள்மின்"

ஆஹா! என்ன அதிசயம்! வானிளவரசு வைகுந்தக் குட்டன் ஆயர்குலக்கொழுந்தாயினன். என்ன கருணை! அவன்றன் கருணை எல்லையை உள்ளவாறு கண்டா ரொருவருளரோ? அவன் தான்கண்டனனோ? இதை யறியாதவனுக்கு "ஸர்வக்ஞன்" என்று பட்டமாம்! ஓஹோ! எல்லையிருந்திடிலன்றோ அவன் காணமுடியும்?

அதனால்தான் அப்பட்டம் அவனுக்கு நிலைத்து நிற்கிறது. ஸர்வேசுவர! உன் உந்திக்கமலத்துள்ளிருந்தும் அயன் நின்னடிக்கமலம் காண்கின்றிலன். அத்தகைய நீ கேவலம் ஆயர் பெண்டிர்க்கு அணுக்கனைப் அவதரித்தனையே? இஃதொன்றே உனது கருணாக்கும் வௌலப்யத்திற்குமளவின்மையை நன்குணர்த்துகின்றது. பாற் வெண்ணெயுண்டு, ஊரார்களெல்லாரும் காண வுரலோடு கட்டுண்டடிபட்டு, கன்றுகள் மேய்த்து நின் தோழரோடு கலந்துவரும் நினது எளிமைதான் என்ன? இத்தகையனான உன்னைச் சீராட்டித் தாலாட்டி வளர்த்த அசோதையின் பாக்கியமே பாக்கியம். உன் பிள்ளைச் சுவையெல்லாம் பெற்றாள் அசோதை. உன் திருவிளையாடல்களைக் கண்டு களிக்குமங்கையின் கண்களே கண்கள். மற்றவை புண்களேயாகும். அதெல்லாம் எனது காலங்களில் நடைபெறக் கூடாதா? அசோதையைப்போல் யான் களிக்கும் நாட்களும் கிடைக்குமோ? இதென்ன பைத்தியம்? அவை நடந்து எத்துணை நாட்களாகிவிட்டன. அதைப்பற்றி யினி நினைப்பதால் யாது பயன்? ஆகிலுமென்ன? எதற்கும் மனந்தானே காரணம். முற்காலத்தில் யசோதை உனக்கு மலர்சூட்டி மட்டற்ற மகிழ்ச்சிகொண்டதுபோல், யானும் என் மகிழுறக்கூடாது?

"ஆநிரைமேய்க்க நீபோதி அருமருந்தாவதறியாய்
கானகமெல்லாம் திரிந்துநின்கரிய திருமேனிவாட
பானையில்பாலைப் பருகிப் பற்றுதார் எல்லாம்சிரிப்ப
தேனிலினியபிரானே! செண்பகப்பூச் சூட்டவாராய்."

(என்று ஓர் மாலையை எடுத்து உற்றுப்பார்த்துக் கண்களில் நீர் வடிய)

ஐயோ! இதென்ன பாபம்? யார் இவ்வடாத காரியம் செய்தது? பகவதபசாரத்திற்கல்லவா உள்ளானேன். இதில் என்னைத்தவிர வேறு யாரை நொந்து கொள்வது? கோவிலுக்கு மாலை கொண்டுவருமுன்பே நான் ஏன் கவனித்திருக்கக் கூடாது? ஐயோ! எம்பிரானது திருவுள்ளமிதனால் எவ்வளவு சீற்றங்கொண்டதோ? கேசம் சம்பந்தப்பட்டால் எவ்வளவு அசுத்தம்! இம்மாலையில் அது சம்பந்தப்படவேண்டிய காரணமென்ன? தன்னையறியாமல் எவருடையதேனு மிதில் சேர்ந்துவிட்டதோ? ஆம். அப்படித்தான். நமது இல்லத்தில் ஒருவரும் தன்னையறிந்து இவ்வாறு செய்திருக்க மாட்டார்கள். (மறுபடியும் மாலையை யுற்றுநோக்கிப் பெருமூச்சுடன்) இவ்வளவு நீண்டும் கறுத்துமுள்ள கேசம் கோதையினுடையதுதான். சந்தேகமில்லை. அவள் சகிகளுக்குக்கூட இவ்வளவு நீண்ட கூந்தல் கிடையாது. ஆஹா! அவள்தானு இக்கொடுமை யிழைத்தனள்? அடி கொடியவளே! அபசாரத்திற்காளாக்கி விட்டாயே? இக்கொடிய எண்ணம் உனக்கேன் உண்டாயிற்று? தினந்தோறு மிவ்விதந்தான் நீ செய்துவருகின்றனையோ? பலநாள் கள்வன் ஒருநாள் அகப்படுவானன்றோ? இன்று நீ அகப்பட்டுக்கொண்டனை ஹா—ம். பகவானுக்குச்சாத்திக் களைந்தபின் மணம் குன்றி விடுமோ?

சே. இதென்ன எண்ணம்? நமது குழந்தை யிவ்வாறு செய்திருப்பாளா? ஒருக்காலுமில்லை. அவள்தான் மஹாபக்தையாயிற்றே. என்னிடம் அழகிய மணவாளன் வைபவத்தை எவ்வளவு குதூகலமாய்க் கேட்பாள்! அவ்வமயம் அவளுக்குண்டாகு மானந்தக்கண்ணீரையும் மயிர்க்கூச்சலையும் நான் நேரில் கண்டிருக்கின்றேனே! அவளா இவ்வாறு செய்தனள்? இல்லவே இல்லை. ஒருவேளை அவளையறியாமலவளது கேசம் இதில் சம்பந்தப்பட்டிருக்கலாம். அவளபசாரம் செய்யவில்லை. நான்தானவளை நிந்தித்தால் பாகவதாபசாரத்திற்கு மிலக்கானேன்.

ஐயோ! நான் மனதை எவ்விதம் சமாதானப்படுத்திக்கொண்டால்தானென்ன? அது நிம்மதி யடையவில்லையே. இக்கேசம் தலையில் சூடிக் களைந்தபொழுது சிக்குண்டறுந்ததாகவே எனக்குத் தோன்றுகிறது. இல்லாவிடில் மாலையைச் சுற்றிச்சுற்றி எவ்வாறு இருக்க முடியும்? இது அறியாமையால் நடந்த காரியமன்று சந்தேகமேயில்லை. ஆஹா! ஸ்திரீகளின் சுபாவந்தானென்ன? அவர்களதியல்பினை யிவ்வுலகினில் யாவரே அறிபவர்? அவர்கள் மனமாழ்கடலினுமாழமுடைத்தே. அக்கொடியவள் பகவானிடம் பக்தியுள்ளவள்போல் எவ்வளவு பாசாங்கு செய்தனள்! நான் உண்மையென்றல்லவா அகமகிழ்ந்திருந்தேன். எல்லாம் வேஷமா? இதோ உனக்குத் தகுந்த தண்டனை விதிக்கிறேன். இனி விஷ்ணு பக்தியில்லாத வுன்னோடு ஸஹவாஸமே எனக்கு

அடுக்காது. (பகவானை நோக்கி) ஸர்வேசுவா! அடியேன் அறிவின்மையா லிழைத்த அபராதமனைத்தும் பொறுத் தருளவேண்டும். வேறு புதுமாலைகள் கொணர்ந்து சாத்துகிறேன். (குடலையை எடுத்துக்கொண்டு திரும்பி விடுகிறார்).

(உள்ளிருந்து ஓர் குரல் உண்டாகிறது) ஆழ்வீர்! ஆழ்வீர்! நில்லும் நில்லும், போகவேண்டாம். இங்கே வாரும்,

(ஆழ்வார் திரும்பிவந்து கைகட்டி நிற்கிறார்)

அசரீரி:— இதோ உமது கையில் துலங்கு மலங் கல் நின் மகள் கோதை சூடிக்களைந்ததேயாகும். தினந் தோறுமவளிவ்வாறே செய்து வருகின்றனள். நீர் நினைப்பதுபோல் இது பக்தியின்மையாற்செய்த காரிய மன்று. பரமபக்தியால் செய்ததாகும். நாமும் தினந் தோறு மனமுவந்தேற்கிறோம். தினம்போல் இன்று மிம்மாலையை இவ்வழகிய கேசத்துடனே சாத்தி எம துள்ளத்தைக் குளிரவைப்பீராக.

ஆழ்வார்:— அப்படியே செய்கிறேன். (அவ்வி தம் செய்து கைகூப்பியவண்ணம்) பிரபோ! அடியேன் கோதையிடம் அபசாரப்பட்டுவிட்டேன். அதைப் பொறுத்தருளவேண்டும்.

அசரீரி:— அவ்வாறே ஆகுக. எம் பிராணநாயகி யிடம் புரிந்த அபராதத்திற்குப் பிராயசித்தமாகப்

பிரதிதினமும் அவள் சூடிக்கொடுத்த மாலைகளையே சாத்துவீராக. இதனால் என் மனமுமவள் மனமும் குளிர்ச்சியடையும். போய்வாரும்.

(ஆழ்வார் விடைபெற்று வெளியே வருகிறார்)

ஆழ்வார்:-- ஆஹா! என்னே கோதையின் பக்தி! பிஞ்சிலேயே பழுத்துவிட்டனள். எனக்கு இன்னமுமவளைப்போல் பக்தியேற்படவில்லை. ஆஹா! "நின்மகள்" என்ற வார்த்தை எவ்வளவு இனிமையாயிருந்தது. பகவான் வாயினால் "நின்மகள்" என்று கூறப்பெற்ற பாக்கியம் ஒன்றே நமக்குப் போதும். அகம் சென்று அவள் வாயால் சூடிக்கொடுத்த வரலாறு கேட்டு அகமகிழ்கிறேன்.

(செல்கிறார்)

முதல் அங்கம், இரண்டாவது களம் முற்றிற்று.

சுபம்.

# மார்கழி நோன்பு

அல்லது

# ஸ்ரீ ஆண்டாள் திருமணம்.

## முதல் அங்கம் - மூன்றுங்களம்.

இடம் - பெரியாழ்வார் திருமாளிகை.

(பெரியாழ்வாரும் அவர் மனைவி விரஜையும் பேசிக் கொண்டிருக்கின்றனர்.)

விரஜை:— நாதா! உலகப்பற்றை யறவே ஒழித்துவிட்டீர்களே! நமது அருந்தவப்புதல்வி பக்குவ நிலைக்கு வந்துவிட்டனளன்றே? இன்னும் என் அவளுக்கு மணமுடிக்க மனங்கொள்ளவில்லை? அதைப் பற்றி உங்களுக்குக் கவலையேயில்லைபோலும்!

ஆழ்வார்:— கண்மணி! இல்லாமலென்ன? உலகம் நிறைந்த புகழால் திருமகள்போல் வளர்க்கும் நம் மகளுக்கு நாடுநகருமறிய நல்லதோர் கல்யாணம் செய்யவே நான் கருதுகிறேன். ஆனால் நம் புதல்வி கோதை அறிவிலும், கல்வியிலும், ஒழுக்கத்திலும் இணையின்றி விளங்குகின்றனளன்றே? அவள் மன மிவ்வுலகில் எவரைத்தான் நாடும்? அழகிலு மறிவிலு மவளுக்குத்தக்கவரன் இவ்வுலகில் ஏது? அதனால்தான் என்ன செய்வதென்றே தோன்றாமல் திகைத்துக் கொண்டிருக்கிறேன்.

விரஜை:— நாதா! பகுத்தறிவற்றவொரு கொடி யுமோர் கோலைத் தழுவியல்லன்றோ வாழுகின்றது? பெண்ணாகப் பிறந்தவொருத்தி இவ்வுலகினில் நாத னிலாமல் வாழுவதெங்ஙனம்?

ஆழ்வார்:— உண்மைதான். ஆனால் கொடியும் தன்னைத் தாங்க வல்ல கோலையே நாடுகின்றது. அணங் கிலும் பேரழகு வாய்ந்த பெண்மணி ஆண்டாளைத் தரிக்க வல்லவொரு கோல் இவ்வுலகினில் எங்கேயுளது? அதனால்தான் இவ்வுலகின்கண் அவள் மனம் பற்றைத் துறந்துவிட்டது.

விரஜை:— ஆகில் அவள் எண்ணமென்ன? மணமே வேண்டாமென்கின்றனளா? பாரதந்திரிய மன்றோ பேதையர்க்கழகு.

ஆழ்வார்:— ஆம், அதுகொண்டே அவள் மனம் கோல் தேடியோடும் கொடிபோல் மால் தேடி ஓடு கின்றது. "நாமுகக்கும் தேவர்" என்று நாகணைமிசை யான் மிசை கடல்போலும் காமத்தனளாயினள். நம் தந்தை தந்தேவரை வருவிப்பரேல் அது காண்டுமென் றுறுதி பூண்டிருக்கின்றனள். ஆனால் இளமடந்தை யாகையால் இவ்வுண்மையை வெளியிட வியலா துழல் கின்றனள்.

விரஜை:— (ஆச்சரியத்துடன்) திருமாலையா! இதென்ன விந்தை? மறையவரும் மறைமுடியுமின்னும் அவர் கழலிணை காணவில்லையே! இஃதென்ன பைத்தி

யம்? எட்டாப் பழத்துக்குக் கொட்டாவி விடுவாரு முண்டோ?

ஆழ்வார்:— பேதாய்! அவ்வாறு கூறவேண்டாம். பத்துடை யடியவர்க்கு ஸர்வேசுவரன் மிகவும் எளியவனன்றோ! பிறர்களுக்கவன் அரியவனே. அரசனுக்குச் சந்திரசாமரங்கள்போல அவனுக்குப் பரத்வ ஸௌலப்யங்கள் ஒருங்கே அமைந்துள்ளன வென்பதை நீ கேட்டறியாய்போலும்.

விரஜை:— நாதா! என்னவெனினும் ஈசுவரன் நாயகனு யாவது இயலாத காரியம். இதற்குப் பிராட்டி சம்மதம் வேண்டாமோ? பிராட்டியார் முகம் நோக்கிய பின்னர்தானே எக்காரியமும் செய்வதவனது இயல்பு. எனவே இது ஒரு நாளும் நடவாது. எதற்கு இந்தப் பேராசை?

ஆழ்வார்:— பேதாய்! அப்படி நினைக்கவேண்டாம். நமது கோதை தன் மனதைக் கொள்ளை கொடுத்ததுபோல அவன் மனதையும் கொள்ளை கொண்டுவிட்டனள். ஆகவே இது நடவாத காரியமன்று.

விரஜை:— நீங்கள் இதை எவ்வாறு அறிந்து கொண்டீர்கள்?

ஆழ்வார்:— ஒவ்வொரு நாளும் மாலுக்கெனக் கொய்த மலர்களை யிவள் சூடி, க்காறை பூண்டு, கண்ணாடி கண்டு, தன் கைவளை குலுக்கி, கூறை யுடுத்தி,

தன் கொவ்வைச் செவ்வாய் திருத்திப் பின்னர் களைந்து வந்தனள். அம்மலர்களை மலர்மங்கை மணாளன் மகிழ்வுடன் ஏற்று வருகின்றனன். தன் மணாளன் இம்மலர்களைச் சூடியதும் மலர்மகளும் மண்மகளும் அவனைப் பொறாமையுடன் பார்க்கின்றனர். அக்கொடிய பார்வையை அவன் லக்ஷியம் செய்யவேயில்லை. நான் நேற்றுக்கொண்டுபோன மாலையில் கேசம் சம்பந்தப்பட்டிருந்ததால் சாத்தாமல் திரும்பினேன். அப்பொழுது தினந்தோறும் கோதை சூடிக் களைந்த மாலைகளையே சாத்தும்படி பகவான் எனக்குக் கட்டளையிட்டார்.

விரஜை:- (ஆச்சரியத்துடன்) அப்படியா? என்ன பெருமை நம் புதல்விக்கு! இவளைப் பெண்ணெனப் பெறும்படி யாம் என்ன நோன்பு நோற்றோமோ?

ஆழ்வார்:— இப்பொழுதாவது தெரிந்ததா? அவள் திருமணத்தைப்பற்றி நினைக்க, நாம் கொஞ்சமேனு மருகவில்லை. திருமார்பனை தேடிவரும் சீர்மையினளன்றோ அவள்? ஆயினுமவ்விருவர் சேர்த்திருக்கும் கம்மாலானதைச் செய்து நாம் ஸத்தை பெற வேண்டும்.

விரஜை:— ஆம். அதற்கென்ன தடை? இதோ! அவளை யெனது இருகரங்களாலும் மார்புறத்தழுவ வேண்டும். போய் வருகிறேன். விடை கொடுங்கள்.

ஆழ்வார்:— நானும் வருகிறேன்.

(இருவரும் செல்கின்றனர்)

**முதல் அங்கம் முற்றிற்று.**

சுபம்.

# மார்கழி நோன்பு

அல்லது

# ஸ்ரீ ஆண்டாள் திருமணம்.



## இரண்டாவது அங்கம் - முதற்களம்.

(அநுக்கிரகை ஓர் கையில் தீர்த்த பாத்திரமும் மற்றுமோர் கையில் துளஸி புஷ்பங்களும் ஏந்தி வருகின்றனள்).

அநுக்கிரகை:— எங்கோ காலடி சப்தம் கேட்கின்றதே? யாராக விருக்கக்கூடும்? நமது தந்தையாக விருக்கலாமோ? அவர் என் சகியின் நிலையை அறிந்து கொண்டால் ஆறாத்துயரத்தில் ஆழ்ந்துவிடுவாரே? என்ன செய்வது?

(இதற்குள் சுசீலை வருகிறாள்)

சுசீலை:— சகி! எனக்கு ஆண்டாளைப் பார்த்தால் மிகவும் பயமாயிருக்கிறது. இவ்வளவு பயங்கர நிலையிலும் தந்தைக்குத் தெரிவியாமல் இருப்பது பேதமைத் தனமல்லவா? ஆகையால், நான் தந்தையிடம் தெரிவித்துவிட்டேன். அவர் ஆராதனம் முடிந்ததும் உத்யானம் வருவதாகக் கூறியிருக்கிறார்.

அநுக்கிரகை:— ஹாம். இதென்ன காரியம்? இது ஜ்வரமா? மதன தாபந்தானே? இதற்கேன் பயப்

படவேண்டும்? தந்தையிடம் கூறியதை யவளுக்கு நீ தெரிவிக்கவேண்டாம். ஏற்கனவே அவள் உண்மையைக் கூறமாட்டாது மறைக்கின்றனள். தந்தை வரு முன்பே அவளிடமிருந்து உண்மையை யறிந்து, நான் தூது சென்றது முதலியவற்றைக்கூறி அவளை சமாதானப்படுத்திவிடுவோம்.

சுசீலை:— இனி யவள் உண்மையைக் கூறு திருக்க முடியாது. (இருவரும் செல்கின்றனர்)

இரண்டாவது அங்கம், முதற்களம் முற்றிற்று.

சுபம்.

# மார்கழி நோன்பு

அல்லது

# ஸ்ரீ ஆண்டாள் திருமணம்.

---

## இரண்டாவது அங்கம் - இரண்டாவது களம்.

இடம் - செண்பகத்தோப்பு. நேரம் - மாலை.

(ஓர் அழகிய தாமரைக்குளம். அலைகள் மெல்ல மெல்ல வீசுகின்றன. அதன் கரையில் கொடியினாலாய வீடொன்றுளது. அதன் நடுவே தாமரையிலைகளும் பூக்களும் விரிக்கப்பட்டுள்ளன. அதில் ஆண்டாள் சயனித்துக்கொண்டிருக்கிறாள். அருகில் சுசீலை உட்கார்ந்திருக்கின்றனள். அநுக்கிரகை குளத்திலிருந்து மலர்களைக் கொய்து ஆண்டாளுக்கு வீசி வருகின்றனள்).

**சுசீலை:—** சகி! நந்தோழி ஏன் இவ்விதம் மிரள மிரள விழிக்கின்றனள்?

**அநுக்கிரகை:—** (உற்று நோக்கி) சுசீலை! நமது சகி முன்னிலும் மபாயநிலைக்கு வந்துவிட்டனள். பரிதியின் பிரிவாற்றாத பங்கயக்கொடி போன்று வாடிவிட்டனள். என்ன செய்வது? உண்மையை உரைக்காமல் மறைக்கின்றனள், பிடிவாதம் செய்கிறாள். ஆகார முட்கொள்ளவேயில்லை. ஆகாரம் கொண்டுவரலாமா என்று கேள்.

சுசீலை:— (அவ்விதம் செய்து பதில் கிடையாமல் பெருமூச்செறிந்து) அநுக்கிரகை! நமது சகி மூர்ச்சித்துவிட்டனள். காரியம் பெரிதாகிவிட்டது. விளையாடுவதாக நாமிதை யேன் மறைத்தோம்?

அநுக்கிரகை:— சகியின் முகத்தை யுற்றுநோக்கிப் பெருமூச்செறிகின்றனள்) இருவரும் ஒன்றும் தோன்றாமல் ஒருவரையொருவர் பார்த்து விழிக்கின்றனர்.

அநுக்கிரகை:—(சற்று மன உறுதியுடன்) சுசீலா! பயப்படாதே. இவள் முகத்தில் ஒளி மழுங்கவேயில்லை ஆகையால் இது மன்மதனது திருவிளையாடல்தான். எதற்கும் நமக்கு ஈசுவரனிருக்கிறான். நமதின்னல் நோய்கட்கு அவனது தீர்த்தமும், துளஸியும்தான் தக்க மருந்தாகும். அவன் தண்ணந் துழாய் இந்நானிலத்தில் என்னதான் செய்யாது? நான் தீர்த்த பாத்திரத்திற் கொணர்ந்த தீர்த்தத்தையும், துளஸியையும் இங்கே கொண்டுவா.

(சுசீலை அவ்வாறே செய்கின்றனள். தீர்த்தத்தைக் கையில் வாங்கி)

ஏ வடபத்ரசாயின்! ஆபத் பாந்தவ! அமிழ்தினு மினிய வருள்கூரண்ணலே! பேதை யாம் படும்பாட்டை நீர் அறிகிலீரோ? அன்பர் மனம் நொந்திடில் நின் மனம் வெந்திடு மென்கின்றனரே! அத்தகைய தயை யித்தையல் விஷயத்தில் மந்தித்ததோ? இதைவிட நின் தயைக்கேற்ற கலனெங்கே யுளது? நின்

பேரன்பிற்குரிய வாண்டாளை யிதோ எழுப்பித்தந்தருள வேண்டும்? (தீர்த்தத்தை யாண்டாள் திருமுகத்தில் தெளித்துத் துழாய் வாடை வீசுகிறாள்).

ஆண்டாள்:- மெல்ல மெல்ல உணர்வுறுகின்றனள்.

சுசீலை:— சகி! அநுக்கிரகை! நம் சகிக்குத் துழாய் மாலை சூட்டு.

அநுக்கிரகை:— அவ்வாறே செய்கின்றனள்.

சுசீலை:— (ஆண்டாளை நோக்கி) சகி! "உண்ணாதுறுமையும் உள் மெலிவும் தண்ணந் துழாய் என்னும் மாலை கொண்டு சூட்டத் தணியும்" என்று நீ அடிக்கடி கூறுபவளாயிற்றே. அநுக்கிரகை துழாய்மாலை சூட்டியும் நீயேன் தெளிந்தெங்கள் மனங் களிப்புறச் செய்ய வில்லை? பரோபதேச மாத்திரமோ நினது வார்த்தை?

ஆண்டாள்:— (தளர்ந்த குரலில்) துழாய்மாலை சூட்டியிருக்கிறீர்களா?

அநுக்கிரகை:— அதையே நீ அறியவில்லையே? இந்நிலையிலும் நீ நோயின் காரணம் கூறுவிடில் நாங்கள் என்ன செய்வோம்?

சுசீலை:— அநுக்கிரகை! நீ யாங்கம் சென்றவன்று

இவள்:—

பதினாறுமாயிரவர் தேவிமார் பார்த்திருப்ப
மதுவாயிற்கொண்டாற்போல் மாதவன் தன்வாயமுதம்
போதுவாக வுண்பதனைப் புக்குநீயுண்டக்கால்
சிதையாரோ வுன்னோடு செல்வப்பெருஞ் சங்கே,

என்று புலப்பத்தில் சங்கைச் சிதைந்தனள். பின்னர் நான் கேட்டதற்கு மறுமாற்றம் கூறாது மறைத்தனள், இதனால் நான் இவள் மாதவன்தன் வாயமுதம் பருகவே இப்பாடுபடுகிறாள் என்று தீர்மானித்துக்கொண்டேன். இவளநுமதியின்றி நீ திருவரங்கத்திற்குத் தூது சென்றது நல்லதாயிற்று. உனது ஊஹத்திறமை போற்றத்தக்கது.

ஆண்டாள்:— (சிறிது தெளிந்த முகத்துடன்) திருவரங்கத்திற்குத் தூது சென்றனளா? ஏன்?

அநுக்கிரகை:— ஏனோ? நீ யேன் நோயுற்றனை? இதை முதலிற் கூறு பின்னர் யான் கூறுகின்றேன்.

ஆண்டாள்:— (தனக்குள்) இனி நான் வெட்கி மறைப்பதாற் பயனில்லை. தோழியரிடம் சொல்லியேதீர வேண்டும் (வெளிப்படையாக) சகிகாள்! நான் உண்மையைக் கூறிவிடுகிறேன். இனி யென்னால் தாங்கவியலாது. பெண்ணின் வருத்தமறியாத கொடியகடிய திருமாலால் தளர்ந்துநான் நோவுற்றேன். அவன் தண்ணந் துழாய் கொண்டு என் நெறிமென்குழல்மேல் சூட்டினதால்தான் நான் இப்பொழுது சிறிதாவது பேசுந்திறம் பெற்றேன். நீங்கள் என்னைக் காக்கவேண்டில் அவன்-

தன் னடியிற்சேர்த்திடுங்கள். அவனிடமுள்ள வென் கோபமெல்லாந்தீர, பயனொன்றில்லாத விக்கொங்கை களை அள்ளிப்பறித்தவன் மார்பில் எறிந்துவிடுகிறேன்.

அநுக்கிரகை:— சகி! கணவனிட மிவ்வளவு கோபங்கொள்ளலாமோ? அடக்கமன்றோ மங்கையர்க் கணிகலம்?

ஆண்டாள்:— இனி நான் அடங்கவியலாது. என் கணவன் ஓர் பெண்கொடியை வதை செய்யவும் துணிந் திருக்கிறான். இந்நிலையில் நானடங்கி யிருந்திடி லிறப் பது திண்ணம். அவனுக்காக வாடி வதங்கின இம் மேனியினிடர்தீர, அக்குமரன் கோலப்பணைத்தோளு டன் இம்மைப் பிறவியிலேயே அணையாவிடில், இனிப் போய் மறுபிறவியில் எய்துவதால்தான் என்ன பயன்? ஆகையால் அல்லல் இழைத்த வக்கள்வனையே வேட்கை யுற்று மிக விரும்பும் என்னை அவனிடமே சேர்த்து விடுங்கள்.

அநுக்கிரகை:— அவன் உன்னிடம் தன்னைச் சேர்க்கும்படி தன் துணைவனை வேண்டுகின்றனனே?

ஆண்டாள்:— எவன்?

அநுக்கிரகை:— அப் பச்சைப்பசுந்தேவன்.

ஆண்டாள்:— இச்சையுடையரேல் இதற்குள் இவ்விடம் வந்திருக்கமாட்டாரோ?

அநுக்கிரகை:— அவன் இச்சையுடையவன்தான். கெருடன் வாயிலாகநின் இணையிலாஎழில் கேட்டு இளகியவுள்ளத்தினனாய் ஏங்கிநிற்கின்றனன். ஆயினும் ஸ்ரீரங்கநாய்ச்சியாருக்கஞ்சி யிங்குவர முடியாமல் தவிக்கிறான்.

ஆண்டாள்:—வெற்றிக்கருளனன்றோ! தந்தையிற் பரிவானவரிடம் செய்தவேண்டுகோள் வீணாகுமோ?

அநுக்கிரகை:— ஆம். தாகமுள்ளவரிருக்குமிடத்தில் தண்ணீர்கொணர்ந்து வார்ப்பாரைப்போலே, ஆசைப்பட்டாரிருக்குமிடத்தில் அவனையே கொணர்ந்துதவுபவனன்றோ அவன்! முதலைவாய்ப்பட்டகளிறு கதிரிக்கைகூப்பி என்கண்ணா கண்ணாவென்னும்போது, உதவிசெய்ய, அவனுக்கும் இப் புள்ளரையனன்றோ வேண்டியதாயிற்று. அதனால்தான் அவனை "அருளாழிப்புள்" என்று பெரியோர்கள் சொல்லுகின்றனர்; ஆகையால் ஆடும் கெருளக்கொடியுடையான் வந்தருள் செய்வது நிச்சயம். நீ பயப்படாதே.

ஆண்டாள்:— இவ்வளவு துணிவாகக் கூறுகின்றனையே? இவ்விஷயம் உனக்கு இவ்வளவு உறுதியாக எப்படித் தெரிந்தது?

அநுக்கிரகை:— நீ மறைத்தாலும் திருவரங்கச் செல்வனார்மேல் நின்சிந்தை சென்றிருப்பதை நான் வெகுநாட்களுக்கு முன்னரே தெரிந்துகொண்டேன்.

சின்னாட்களுக்கு முன்னர் சோலையில் மாலைநேரத்திலிவ் விஷயத்தை நான் பிரஸ்தாவித்தபோது நீ மிகவும் சினந்தனை? நீ மறைத்ததனாலேயே இவ்வளவு பாடுபட வேண்டியிருந்தது. அவனிடமுள்ள நினது கடலின் மிகப்பெரிய காதலை, நீ கூறாவிடினும், நின்செய்கைகள் தெரிவித்தன. ஆதலால் உன் அநுமதியின்றியே திருவரங்கத்திற்குத் தூது சென்று அவன் தன் நிலைமையை அறிந்துகொண்டு வந்தேன். இனிமேலேனும் உண்மையைக் கூறு. "கடியன் கொடியன்" என்று திருவரங்கனைத்தானே நீ குறித்தனை? உன் வாயாலிதை ஒப்புக்கொள்.

ஆண்டாள்:— (நாணி புன்னகையுடன்) ஆம் சகி!

"எழிலுடையவின் சகிகாள்! என்னரங்கத்தின்னமுதர்
குழலழகர் வாயழகர் கண்ணழகர் கொப்பூழில்
எழுகமலப்பூவழகர் எம்மானார் என்னுடைய
கழல்வளையைத்தாமும் கழல்வளையே யாக்கினரே."

சுசீலை:— அநுக்கிரகை! நீ போனதைக்கூட அறியாமல் இவள் அவ்வளவு மெய்மறந்திருந்தனள் பார்.

ஆண்டாள்:— நீ போனது உண்மைதானா?

அநுக்கிரகை:— ஏன் நான் கூறியதில் உனக்கு நம்பிக்கையில்லையோ?

ஆண்டாள்:— பிராண சகி! இல்லாமலில்லை. ஆயினும் என்னைத் தேற்றுவதற்கு நீங்கள் செய்த உபாயமோ இது என்று சந்தேஹப்படுகின்றேன்.

அநுக்கிரகை:— அவனிடமுள்ள கட்டடங்காக் காதல் இட்(ஷ்)ட சகியின் சொற்களைக்கூடச் சந்தேஹிக் கச் செய்கிறது. காதலின் மகிமைதான் என்ன?

ஆண்டாள்:— இல்லை சகி! என்னுடைய நன்மை யைக்கோரி நீங்கள் இவ்விதம் செய்திருக்கலாமென்று நினைத்தேன்.

அநுக்கிரகை:— நாங்கள் இவ்விதம் செய்திருக் கலாம்! (கடிதத்தைக் காட்டி) ஆயினுமவர் கொடுத்த கடிதம் ஒன்றுளதே. இதுவும் எங்கள் கல்பனையி லடங்குமோ ?

ஆண்டாள்:— (புன்னகையுடன்) கடிதம் கிடைத் துளதா? எங்கே பார்ப்போம்.

(கையை நீட்டுகிறாள்)

அநுக்கிரகை:— (கடிதத்தைக் கொடுத்து) சகி! இனி மேலாவது சகிகள் சொல்லை சங்கிக்காமலிருப் பாயா?

ஆண்டாள்:— (கடிதத்தைக் கண்ணிலும், தலை யிலும் வைத்து, நாணிவணங்கிய முகத்தில் புன்னகை தவழ பெதுவாக வாசிக்கிறாள்.)

அநுக்கிரகை:— சகி! உன் காதல்தான் பறை யடித்த பரமரஹஸ்யமாயிற்றே! உரக்க வாசித்தா லென்ன?

ஆண்டாள்:— செய்தி கொணர்ந்த நீயே வாசித்து நாமெல்லோரும் கேட்டுக்களிக்கவேண்டும். சுகதுக்கங் களைப் பங்கிட்டுக்கொண்டால்தான் பொறுத்துக்கொள்ள முடியும் என்பதுண்மையான அநுபவம். ஆகையால் நீயே வாசி.

அநுக்கிரகை:— ஆகில் கொடு. (கையை நீட்டு கிறாள்)

ஆண்டாள்:— கடிதத்தை உற்றுப்பார்த்தவண்ணமே யிருக்கிறாள்)

அநுக்கிரகை:— கொடுக்க மனமில்லையா?

ஆண்டாள்:— இதை யவர் கைப்பட வெழுதினாரோ? எழுத்துக்கள் மணிமணியாயிருக்கின்றனவே. (கண்ணில் ஒத்திக் கொள்ளுகிறாள்) ஆனால் மை சிதறி யிருக்கும் காரணமென்ன.

அநுக்கிரகை:— அவர் கண்ணும் கண்ணீருமாய் எழுதினார் அதனால்தான் கண்ணீர் சிந்தி மை சிதறியிருக் கிறது. இது அவர் படும்பாட்டை யுணர்த்தத் தகுந்த சாட்சியாமன்றோ. மேலுமவ்வமயம் பிராட்டியின் பாதச்சிலம்பொலி காதிற்பட்டது. உடன் பூவணை

முதலியவைகளைக் கெருடனைக்கொண்டு அப்புறப்படுத்தி விட்டு மையுலருமுன்பே கடிதத்தை மடித்துக்கொடுத்து என்னை வேறொரு வழியாக அனுப்பிவிட்டார். இதுவு மதற்கோர் காரணமாகும்.

ஆண்டாள்:— தேனைச் சர்க்கரைப்பாத்திரத்தால் பருகுவிப்பதுபோல் உன் செவிக்கினிய செஞ்சொல் லால் இக்கடிதமாம் தேனைப்பருகச் செய். (கடிதத்தைக் கொடுக்கிறாள்).

அநுக்கிரகை:— (வாசிக்கின்றனள்).

ரங்கராஜன்,

திருவரங்கம்.

எனது ஆருயிர் அனைய நங்காய்! நினதெழிலால் எனதிதயம் கொள்ளைகொண்டுவிட்டாய். மன்மதன் தனது அம்புகளால் என்னை இடைவிடாது கொளுத்து கின்றனன். இனி நான் பிழைக்க வழியில்லை. நினது கருணை அரிய பார்வையே உற்ற துணையாகுமென்று நம்புகிறேன்.

ஆருயிரனைய நங்காய்! அரும்புகழ்ப்பட்டன் கோதாய்
சீரியஎழிலால் என்றன்சிந்தனை கவரச்செய்தாய்!
கூரியகணைகள் கொண்டுகொளுத்துகின்றனனே மாரன்
நாரிநின்கருணைமாரி தனையலால்துணையிலேனே.

நின்பாலுயிருள்ள,

ஆண்டாள்:— சகி! என்பால் பேரிரக்கங் கொண்டு பேருதவிபுரிந்த நினக்குத் தலையல்லால் கைம் மாறிலேன்.

அநுக்கிரகை:— உன் ஸஹவாசத்தால் நின தருங்குணங்களின் லவலேசம் என்னிடம் பிரதிபலித் திடில் நீ அதைப் பாராட்டுதல் தகாது. இக்கடிதத்திற் கேற்றாற்போல் நினதருங்காதலை வெளிப்படுத்துமோர் பதில்விடுத்து, நெடுங்கண்ணாளனை யடுக்கவழி பார்.

ஆண்டாள்:— அவன் ஏலாப் பொய்களுரைப்ப வனாயிற்றே? அவன் கடிதத்தை நம்பி நாம் பதில்விடுக்க லாமோ?

அநுக்கிரகை:— "ஒன்றே உரைப்பர்ன் ஒரு சொல்லே சொல்லுவான்" என்று உன் தந்தையடிக்கடி கூற, நாம் கேள்விப்பட்டிருக்கிறோமே? அவனிடம் உனக்கேன் இவ்வளவு அவநம்பிக்கை?

ஆண்டாள்:— தந்தை விஷயத்தில் அவனால் பொய்சொல்லவொண்ணாது. அதுகொண்டே "ஒன்றே உரைப்பான் ஒருசொல்லே சொல்லுவான்" என்று அவரைக்கொண்டு தன்னைக் கவிபாடிக்கொண்டனன். பாவியேன் நான் பிறந்த பின்னர் அவன் பொய்களையே உரைப்பானாயினன். என் வல்வினை அவன் சுபாவத் தைக்கூட மாற்றிவிட்டதுபோலும்! பாம்பணைமேல் படுக்குமவனுக்கும் தம் பாம்புபோல் நாவுமிரண்டுண்டா யினபோலும்! இத்தகையோன் கடிதத்தை நம்பி நான் பதில் எழுதலாமோ?

அநுக்கிரகை:— பிரபந்நகுலத்தில் பிறந்தவுனக்குப் பரமனைச்சேரச் சந்தேகமேன்?

ஆண்டாள்:— "ராமன் இருவிதம் பேசான்" என்னும் பிருதம்பிடித்த பெருமான்படியே என் விஷயத்தில் மாறுபடுகிறதே! பிரபந்நரான பட்டர்பிரான் சம்பந்தங்கொண்டு நான் ஆறியிருப்பதெப்படி முடியும்?

அநுக்கிரகை:— சகி! அவ்விதம் நினைக்க வேண்டாம். அவன் படும்பாட்டை நான் நேரில் கண்டு வந்திருக்கிறேன். உன் பிரிவாற்றாத வப்பாம் பணையான் பூவணைமிசை பள்ளிகொண்டு துடிதுடிக்கிறான். சந்திரவொளியினால் அவன் மனம் வெடிபடுகின்றது.

சுசீலை:— பாபி சந்திரன்தான் பிறந்தவிடம் என்று கூடப் பாராமல் அவர் மனதைத் தகர்க்கின்றனன் போலும்.

அநுக்கிரகை:— (புன்னகையுடன்) இக்கலியில் தந்தையிடம் மைந்தரிருக்கவேண்டிய விதத்தைச் சந்திரன் கற்பிக்கின்றனன்!

ஆண்டாள்:— ஆகில் நான் பதில் எழுதத்தான் வேண்டும் என்று சகி ஆக்ஞாபிக்கின்றனளா?

அநுக்கிரகை:— ஆக்ஞாபிக்கவில்லை. யோசனை கூறுகிறேன்.

சுசீலை:— எழுதுவதற்கான சாதனங்களைக் கொணர்ந்து தருகிறாள்.

ஆண்டாள்:— ஒரு புருவத்தை உயர்த்திவளைத்து யோசிக்கின்றனள்.

சுசீலை:— சகி! அநுக்கிரகை! நமது சகியின் புருவம் எவ்வளவு அழகாக மன்மதன் வளைத்த வில் போல் வளைந்திருக்கிறது.

அநுக்கிரகை:— ஆம். இவ்வமயம் அவ்வரங்கன் எதிர் நின்றால் என்ன பாடுபடுவான்?

சுசீலை:— தந்தை தாய் பாராமல் தனது ஆணையைச் செலுத்துபவனான மன்மதனது சமநிலை மிகவும் ஆச்சரியமானது.

ஆண்டாள்:— சகிகாள்! கேளுங்கள்.

கோதைநாயகி,

ஸ்ரீவில்லிபுத்தூர்.

அரங்கந்தனி லிலங்குமென் நாத! அநங்கன் எனும் கொடியவனால் அபலையாகிய யான் அநவரதமும் அல்லல் படுகின்றேன். மாதவ! உன்னைச் சரணடைகின்றேன். நான் நீயலாலிலேன்காண். என்னை நீ குறிக்கொள்ள வேண்டும். அநாதையான என்னை ஸநாதையாக்குவது நின் கடமை. உன்னைக் கரங் கூப்பி யிறைஞ்சுகின்றேன். காக்குந் திறமுனக்கன்றி வேறெவருக்கு

யில்லை. இரக்கங்கொண்டு என்னை நீ புரக்க விரைந்து வா. இன்றேல் நான் இன்றே முடிவேன். "ஓர் பெண் கொடியை வதை செய்தான்" எனும் வசைச்சொல் உனக்கு வேண்டாம். பழியேறாது கண் பார்த்தருள் வாயாக.

அரங்கனே! அலர்வாழ்மங்கை
அலகிலாவகன் மார்போனே!
சரங்களாலனங்கன் என்னைத்
தகிக்கின்றானினி யென்செய்வேன்!
கரங்குவித்திறைஞ்சுகின்றேன்!
காப்பவரிலரால் நீயே,
இரங்கியேன்னெதிரே வந்தால்
இறந்திடா துயிர்வாழ்வேனே!

நின்றனையுற்ற வடியாள்,

**கோதைநாயகி.**

அநுக்கிரகை.— சகி! வெகு அழகு. நின் சொற்றிறம் போற்றத்தக்கது. பக்தியாம் நின் காதலை யிக்கடிதம் நன்கு வெளிப்படுத்துகின்றது. இதுகாறும் மண்ணுற்ற மின்னெனவிருந்த உனக்கு இனி அரங்கக் கொண்டலில் மின்னென விளங்குங்காலம் கிட்டி விட்டது.

ஆண்டாள்:— இக்கடிதத மரங்கர்பாற் சேர்வது எங்ஙனம்?

அநுக்கிரகை:— சுசீலையின் மூலமாக இதை நாமனுப்பவேண்டும். (சுசீலையை நோக்கி) சகி ! இக் கடிதம் அரங்கர் கையிற் சேரவேண்டும். பிராட்டியார் கண்ணிற் பட்டுவிடக்கூடாது.

சுசீலை:— அப்படியே. (கடிதம் பெற்று செல் கிறாள்).

ஆண்டாள்:— சகி! நாம் நமது காரியத்தைப் பிராட்டிக்குத் தெரியாமல் சாதித்துக்கொள்ளமுடியுமா? அவ்விதம் நினைப்பது அறிவீனமன்றோ? அவளை வைத் தன்றோ அவனது வாழ்வு !

அநுக்கிரகை:— உண்மைதான், ஆனால் முதலில் நீ அவனது மனதைக் கொள்ளைகொண்டுவிட்டாய். இனி யுன் விரஹத்தை யவ்வரங்கன் தாங்கவியலாது. எனவே அவனது நிலைமைக்கேற்ப நின் காதலை நிறை வேற்றத் திருமகள் தயங்கமாட்டாள். மற்ற மங்கையர் அரங்கனை யணைந்திடில் தனது இருகொங்கைகொண்டு ஆலிங்கனம் செய்துகொள்வதாகவே எண்ணுவ தவள தியல்பு. எனினும் பிராட்டியார் மனமுவக்க வொரு உபாய மநுஷ்டிப்பதுதான் நல்லது.

ஆண்டாள்:— ஆம். உண்மைதான். அரங்கனை யடைதற்குத் திருமகள் புருஷாகாரம் இன்றியமையா தது. அவ்விருவர் சேர்த்தியில்தான் நாமடிமை செய்ய ஆசை கொள்ளவேண்டும். பிரித்துப் பற்றினதால்தான் தங்கை மூக்கும், தமையன் தலையும் இழந்தனர். இரு

வர் சேர்த்தியில் ராவணனிலும் கொடிய காகம் தலை பெற்றது. ஆனால் இவ்வழியை நமக்கு உபதேசிப்பவர் யார்?

அநுக்கிரகை:— என் நமது தந்தைதான்.

ஆண்டாள்:— தந்தையிடம் "திருவரங்கச் செல்வனார் என் மெய்ப்பொருளும் கொண்டார்" என்று நான் எவ்விதம் தெரிவிப்பேன்? "நான் ஒருவிதம் எண்ணியிருக்க இவளும் வேறொன்று எண்ணுகின்றாள்" என்றவர் கூறிடில் நான் என்ன செய்வேன்?

(திடீரெனப் பெரியாழ்வார் வந்துகொண்டே) என தருந்தவப் புதல்வியே! உன் எண்ணத்திற்கு என்னெண்ணம் மாறுபடுமோ? உன்னை உரப்பவே நானொன்றும் மாட்டேன். நானு மிந்நற்காரியத்தில் பங்கெடுத்துக்கொள்ளக் கடமைப்பட்டிருக்கிறேன்.

(இருவரும் திடுக்கிட்டெழுந்து சேவிக்கின்றனர். ஆண்டாள் ஓரமாக நாணி ஒதுங்குகின்றனள்).

அநுக்கிரகை:— (ஓர் மானுரி ஆஸனம் கொணர்ந்து) தந்தையே! இவ்வாஸனத்தை யலங்கரித் தருளவேண்டும், (ஆழ்வார் ஆஸனத்திலமர்ந்து இருவரையும் உட்காரக் கைகாட்டுகிறார். இருவரும் உட்காருகின்றனர். ஆண்டாள்மட்டும் நாணத்தால் ஓரமே உட்காருகின்றனள்).

பெரியாழ்வார்:— (ஆண்டாளை நோக்கி) கோதாய்! தந்தையிடமும் நாண வேண்டுமோ? நீதானே சற்று முன்பு நின் தோழியிடம் "இனி யென்னு லடங்க வியலாது" என்று கூறினை. காதல் விஞ்சிடில் எப்பொழுதும் "நாண் மடமச்சம் நமக்கிங்கில்லை" என்றிருக்கவேண்டாமோ?

(ஆண்டாள் தலைகுனிந்து பேசாதிருக்கிறாள்)

அநுக்கிரகை:— தந்தையே! நுந்தம் புதல்வியும் என் தோழியுமான இவள் ரங்கராஜனைத் தங் கணவனாகக் கொள்ளுமாறு தக்கவோர் உபாயம் எடுத்து உபதேசியுங்கள்.

(ஆண்டாள் அநுக்கிரகையைக் கோபக்குறியோடு பார்க்கிறாள்).

பெரியாழ்வார்:— கோதாய்! உனக்கேன் இவ்வளவு கோபம் கலந்த வெட்கம்! உன் நன்மையைக் கருதி உன் தந்தையிடம் உண்மையைக் கூறினதற்காகவே இந்தப் பார்வை?

அநுக்கிரகை:— சகி! இந்தப் பார்வை, சீர்வையெல்லாம் ரங்கராஜன் விஷயத்திலிருக்கட்டும். இங்கே செல்லாது.

(ஆண்டாள் மறுமுறையும் முறித்துப்பார்த்து போகப் பார்க்கிறாள். அநுக்கிரகை, கையைப்பிடித்து உட்கார்த்திவிடுகிறாள்).

பெரியாழ்வார்:— கோதாய்! நானிவ்விஷயத்தைத் தெரிந்துகொண்டுவிட்டேன். நீ யிதற்காக நாணவோ அஞ்சவோ வேண்டியதில்லை. கைத்தலத்துள்ள மாடு (செல்வம்) அழியக்கறியும் கலத்தரிசியு மாக்கிவைத்து, உனக்குப் பெருப்பெருத்த கலியாணம் செய்ய நான் ஆசைகொண்டுவிட்டேன். நீ ரங்கராஜனிடம் காதல் கொண்டது நான் செய்த தவத்தின் பயன் என்றே கருதுகிறேன். செடியிலுள்ள பூ ஈசனடிக்கமலத்தில் தானே நழுவி விழுந்திடில் எனக்கது மகிழ்வே அன்றோ? ஆகையால் நீ அவ்வரங்கனை யடையத்தக்க வோர் உபாயம் கூறுகிறேன். கேள். முற்காலத்தில் ஆய்ப்பாடியில் ஆய்ச்சியர் நோன்பு நோற்றுக் கண்ணனை யடைந்தனர். அதேபோல் நீயும் நோன்பு நோற்கவேண்டும். ஆய்ச்சியர்க்கு மார்கழி நோன்பே சீர்கெழு கண்ணனைச் சேர்வதற் கேற்றதாயிருந்தது. அந்நோன்பையே நீயும் கைக்கொள்ளலாம். அதன் விவரத்தைக் கூறுகிறேன் இங்கு வா. (ஆண்டாள் அவ் வண்ணமே வரக் காதண்டைச் சிலவற்றை உபதேசிக்கிறார்).

ஆண்டாள்:— (தனக்குள்) தந்தையர் என்றால் இப்படி அல்லவா இருக்கவேண்டும்.

அநுக்கிரகை:— இந்நோன்பு என் சகியின் போாத்திரத்திற்கேற்பசீக்கிரம் பயன்தரத்தக்கதுதானே?

பெரியாழ்வார்:— அதற்கென்ன சந்தேஹம்? இந்நோன்பில் கண்ணனின் போன்பிற்குரிய நப்பின்னை

யைப் புருஷகாரமாகப்பற்றவேண்டும். கண்ணன் இந் நோன்பிற்கிரங்கியே தீருவான். பின்னர் ரங்காராஜன் கைப்புகுந்தான் என்பதற்கு ஐயமென்ன? கண்ணனு மவனும் வேறன்றே? ஆகையால் நப்பின்னையைப் புருஷகாரமாகக்கொண்டு இந்நோன்பை நோற்றிடல் வேண்டும்.

அநுக்கிரகை:— நோன்பிற்கான ஏற்பாடு செய் வோம் வாருங்கள்.

(எல்லோரும் எழுந்து செல்கின்றனர்.)

**இரண்டாம் அங்கம் இரண்டாம் களம் முற்றிற்று.**

சுபம்.



# மார்கழி நோன்பு

அல்லது

# ஸ்ரீ ஆண்டாள் திருமணம்.

## இரண்டாவது அங்கம் - மூன்றாம் களம்.

இடம் - ஓர் பழையகாலத்து வீட்டுவாசல் வராண்டா.

( ஒரு கிழவர் தன்மேனியில் பன்னிருதிருமண்மின்ன, கையிலுள்ள தீர்த்த பாத்திரத்தை ஓரிடம் வைத்து விட்டு, ஒருகரத்தால் கோலூன்றி, மறுகரத் தால் தொந்தியைத் தடவிக்கொண்டு உலாவியவண்ணம் )

ஆஹா! என்ன இனிமை! எத்துணைபோக்யமாகப் பெருமாளமுது செய்திருந்தார். அமுத மருந்தும் தேவருடிதையருந்திடில் நிச்சயமாக அமிழ்தினை உமிழ்ந் திடுவர். எவ்வளவோ பட்ட பட்ட பேர்வழிகளின் ததீயாராதனமெல்லாம் யான் கண்டிருக்கிறேன். ஒன்றுகூட இதுவரை யென் முழுப்புகழ்ச்சிக்குமுரிய தாகவில்லை. ஆனால் இன்றைய இத் ததீயாராதனத் தையோவெனின், என்னைக்கேளாமலே ருசியறிந்த என் நாக்கு புகழத்தொடங்குகிறது. ஆஹா! பாருங் களேன்? எவரைக்காணினும் என்னைப்போல் முக மலர்ச்சியும் உதாநிமிர்ச்சியுமுடையவர்களாகவே காணப் படுகின்றனர். என்ன பாரமரிப்பு! ஒரு ஆவலாதிகூடக்

கிடையாது. (மீசையை முறுக்கிக்கொண்டு) இவ்வளவு வயதாகி அசக்திக்குறைவிடமான எனக்கே யௌவனம் திரும்பிவந்துவிட்டதுபோலும்! அமுதினால் அந்திமப் பருவத்தைத் தடுக்கலாம். என்ன ஆச்சரியம்! இவ் வமுதினாலோ கழிந்த யௌவனமும் திரும்பியது. இத் ததியாராதனமருந்தாத எத்துணை ஜவான்கள் போருக்கு வந்திடினுமவர்களை வென்றுவிடலாம் (தன்னுடம்பைப் பார்த்துக்கொள்ளுகிறார்.)

(இதற்குள் ஒரு சிறுவன் ஓடிவந்து) உடம்பைப் பார்த்துக்கொள்ளக் கண்ணாடி வேணுமா? உள்ளே போய் அம்மாகிட்ட வாங்கிண்டரேன்.

கிழவர்:— உள்ளேபோய்க் கண்ணாடி வாங்கிண்டு வாடாய்யா. பார்ப்போம்.

சிறுவன்:— உள்ளேசென்று கண்ணாடி வாங்கி வந்து கொடுக்கிறான்.

கிழவர்:— அடேபயலே! நான் எப்படி இருக் கேன்? முன்னப்போலவா இருக்கேன்?

சிறுவன்:— இல்லைதாத்தா வயசாச்சில்லையோ? முன்னைவிடக் கன்னமெல்லாம் சுருங்கிப் போச்சு. முன்னைப்போல எப்படியிருப்பீள்?

கிழவர்:— முன்னைவிட நான் பயில்வானாயிருப்ப தாக நான் சொல்ரேன். நீ கன்னம் சுருங்கிப்போச்சு என்கிறயா?

சிறுவன்:— பயில்வானு? என்னதாத்தா இது? நான் ஓடரேன் உம்மாலே பிடிக்க முடியுமா?

கிழவர்:— அடே இனிமேல் என்னைத் தாத்தா வென்றழைக்கக்கூடாது தெரியுமா? அழைத்தால் அப் படியே சட்னிதான். (தன் காலால் பூமியை உதைக் கிறார்.)

சிறுவன்:— தாத்தா! இதென்ன இப்படி உதைக்கிறீர்?

கிழவர்:— இன்னும் தாத்தாவா? (ஊன்று கோலைக்கொண்டு அடிக்கவருகிறார்.)

சிறுவன்:— (சிறிது தூரம் ஓடி) தாத்தா! தொந்தி குலுங்க ஏன் ஓடி வருகிறீர்? வயிற்றிலே என்ன வியாதியோ? பாவம். இப்படிப் புடைத்திருக்கிறது. இதோடே ஓடிவரலாமா?

கிழவர்:— அடே போக்கிலி! சிறிது அங்கு நில்லு. (ஊன்றுகோலைக் கிறுகிறு என்று சுற்றிக் கொண்டு ஓடி வருகிறார்.)

சிறுவன்:— (உதட்டைக் காண்பித்து) தாத்தாச் சிலம்பவிளையாட்டு வேடிக்கையாக இருக்கிறது தாத்தா! என்னைப் பிடிச்சினும் பார்க்கணும்.

திரைக்குள்ளிருந்து:— அடே. பெரியோர்க ளிடம் விளையாடலாமா? இரு உன்னை இதோ.

[பையன் திரும்பிப்பார்த்து ஓடிவிடுகிறான்.
திருவேங்கடாச்சார் வருகிறார்].

கிழவர்:— (தனது கையைப் புருவத்தில்வைத்து உற்று நோக்கி) யாரது? திருவேங்கடாச்சார் சுவாமியா? பார்த்ததா தேவரீர் பையன் திருவிளையாட்டை.

திருவேங்கடாச்சார்:— ஆகட்டும். அவனை நான் நன்றாகக் கண்டிக்கிறேன்.

கிழவர்:— அதெல்லாமிருக்கட்டும். கீழே எள்ளியிருக்க.

(இருவரும் உட்காருகின்றனர்).

கிழவர்:— இன்றைக்குத் ததியாராதனத்திற்குத் தேவர் எள்ளியிருந்ததே? எப்படி?

திருவேங்கடாச்சார்:— எப்படி என்று கேட்கவும் வேண்டுமோ? இவ்வளவு வைபவமாக இதுவரை ஒரு விசேஷமும் நடக்கவில்லையென்றுகூடச் சொல்லாம்.

கிழவர்:— அடியேன் நினைக்கிறதுபோலே தேவருஞ் சொல்றதே. ஆண்டாள் செய்யுமிந்த வைபவம் நம்ம ஊருக்கே ஒரு பெருமை கொடுக்கிறதின்னு நினைக்கிறேன். தேவரபிப்பிராய மெப்படியோ?

திருவேங்கடாச்சார்:— அவள் நடத்துமிவ்வைபவமிருக்கட்டும். அவள் அவதரித்ததே நம்ம ஊருக்கு ஒரு பெருமை. ஈசனிடம் எண்ணரும் பக்திகொண்ட விப்

பெண்மணியைப் பெறும் பாக்கியம் நம் நன்னகருக் கன்றோ கிடைத்தது? இப்பெருமை மற்றெவ்வூருக் குண்டு?

கிழவர்:— சந்தேஹமென்ன? அவள் செய்யு மித்ததியாராதனத்தை முன்னிட்டன்றோ அளவில்லாத ஸ்ரீவைஷ்ணவர்களிங்கு சேவை சாதிக்கின்றனர்.

திருவேங்கடாச்சார்:— ததியாராதனத்திற்காக வோ ஸ்ரீவைஷ்ணவர்களிங்கு சேவை சாதிக்கின்றனர்? ஆண்டாளிடம் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு அளவு கடந்த பக்தியுண்டு. அதனால் இவ்வளவு பெரிய ஸ்ரீவைஷ்ணவ கோஷ்டியை நாம் சேவிக்கமுடிந்தது.

கிழவர்:— ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு என் ஆண்டா ளிடம் பிரியம் தெரியுமா? அவளடிக்கடி இப்படித் ததி யாராதனம் செய்து அவர்களைக் களிப்பிப்பதால்தான். ருசிகண்ட பூனை விடுமா? இவ் வைபவத்திற்கும் கூட் டத்துக்குக் குறைச்சலில்லை.

திருவேங்கடாச்சார்:—என்ன தேவரீரே இப்படிச் சாதிக்கிறது? அவர்கள் வருவதில் தேவரீருக்கென்ன. தேவரீருக்கு ஏதேன் சாப்பாட்டில் குறைவுண்டோ?

கிழவர்:— கிடையாது கிடையாது. இவ்வளவு கூட்டத்தையுமவளே நின்று பாராமரித்தாளென்ப தற்கே இதை நான் சொல்லவந்தேன்.

திருவேங்கடாச்சார்:— (தனக்குள்) ஏதடா? இவரே புகழ்ந்துவிட்டாரே? என்ன ஆச்சரியம்? (வெளி

யில்) ஆம். வந்த குழாத்தைப் பராமரிப்பதில் ஆண்டாளுக்கிணை இவ்வுலகினில் கிடையாதெனில் மிகையாகாது. அவளது செந்தாமரை போன்ற முகத்தில் ஸந்ததமும் மந்தஹாஸம் தவழ்ந்துகொண்டே இருக்கிறது. விருந்துமுகம் வேறுபடில் அப்பொழுதே அவள் முகம் வாடிவருந்தும் என்பதற்கையமில்லை. அவள் அகனமர்ந்து ஈதலேவிட முகனமர்ந்து இன்சொற் கூறுவதை எவரும் கொண்டாடுகின்றனர்.

கிழவர்:— பட்டர்பிரான் என்ன நோன்பு நோற்றரோ? இப்பேர்ப்பட்ட பெண்ணைப் பெற்றார்.

திருவேங்கடாச்சார்:— ஆம். அவர் செய்த அறச்செல்வம் ஊரடி ஊருணிபோல அனைவருக்கும் பயன் படுகிறது.

கிழவர்:— அனைவருக்கும் என்ன பயன்படுகிறது? ததீயாராதனம்தானே?

திருவேங்கடாச்சார்:— (நகைத்து) தேவரீர் ததீயாராதனத்தையே கனவு காண்கிறாப்பலே இருக்கு.

கிழவர்:— வேறென்ன பயன்படுகிறது? கொஞ்சம் சொல்லவே. கேட்போம்.

திருவேங்கடாச்சார்:— இதை நான் சொல்ல வேண்டுமோ? இப்பெண்மணி அவதரித்த பின்னர், நம் நகரில் வியாதி, துர்பிக்ஷம், திருடர்பயம் முதலியன

தலைக்காட்டவேயில்லையன்றோ? இதைவிட அனைவருக்கும் வேறு என்ன ப்யன் வேண்டும்?

கிழவர்:— கோபித்துக் கொள்ளக்கூடாது. இவள் பிறப்புக்கும் திருடருக்கும் என்ன சம்பந்தம்? இவளென்ன போலீஸ் அதிகாரியா, திருடர்களைத் தடுப்பதற்கு?

திருவேங்கிடாச்சார்:— ஆம். சம்பந்தமுண்டு. ஆண்டாள் பிஞ்சினிற் பத்தியில் பழுத்தவள். அஷ்டாக்ஷர ஸித்தி பெற்றவள். அஷ்டாக்ஷரத்தில் கூறியபடி ஈசுவரனுக்கு அநந்யார்ஹையாய் ஆட்பட்டு, மானிடருக்கென்று பேச்சுப்படில் வாழமுடியாதவளாயிருக்கின்றனள். எவ்விடத்தில் அஷ்டாக்ஷர ஸித்தி பெற்றவர்கள் இருக்கிறார்களோ அங்கு வியாதி, திருடர்பயம் முதலியன உண்டாகா என்று சாஸ்திரங்கள் முறையிடுகின்றன.

கிழவர்:— இவள் அநுஷ்டிக்கிறாளே இப்பொழுது ஒரு நோன்பு. இதுவும் அக்கரிய கண்ணனைக் குறித்துத்தானோ?

திருவேங்கிடாச்சார்:— ஆம். அவனை நோக்கிய வைபங்களில் அவனடியார் விஷயங்களில் ஆண்டாள் மிக்க கவனமுடையவள்.

கிழவர்:— ஆம் கண்டுகொண்டேன் இத் ததியாராதனத்தில். அதிலும் கிழவர்களிடம் அதிகமான ப்ரீதி

யுண்டென்பதைக்கூட நான் தெரிந்துகொண்டுவிட்டேன்.

திருவேங்கடாச்சார்:— அதென்ன? கிழவர்களிடம்மாத்திரம் அதிக ப்ரீதி.

கிழவர்:— அதற்குப் பலவித சான்றுகளுண்டு. அதில் ஒரு உதாரணம்மாத்திரம் சொல்லேன். இன்று பெரும்பாலும் ததீயாராதனத்தில் மெதுவான பக்ஷணங்களே உபயோகப்படுத்தப்பட்டன. அதன் கருத்தென்ன? பல்விழுந்த கிழவர்களிதனால்தானே திருப்தி அடையக்கூடும் அதனால்தான் கூறுகிறேன் கிழவர்களிடம் விசேஷமான பக்தி என்று.

திருவேங்கடாச்சார்:— (புன்னகையுடன்) நன்று நன்று, எவ்வளவு அதிசய ஆராய்ச்சி. அதிருசத்தை விட நுமதாராய்ச்சி அதிரசமுள்ளது.

கிழவர்:— அதிருக்கட்டும், ஆசீர்வாத மிப்போதானே நடக்கப்போகிறது? தக்ஷிணை எவ்வளவு கொடுக்கிறாளோ? பார்ப்போம், பெரிய இடத்துக்காரியம்.

திருவேங்கடாச்சார்:— (சிரித்துக்கொண்டு) தேவரீருக்கு வயசாகியும் ஏன் ஆசை விடவில்லை?

கிழவர்:— எனக்கென்ன வயசாகிவிட்டது. இப்பொழுது நானொரு ஜவானாகிவிட்டேன். (நிமிர்ந்து தன் மார்பகத்தைப் பார்த்துக்கொள்கிறார்)

திருவேங்கடாச்சார்:— தேவரீர் பலவானுனதைக் கண்டு, தேவரீர் ஆசையும் பலம் பெறுகிறதோ?

கிழவர்:— எல்லாருக்கும் என்ன ஆசையில்லையா? ஆசையில்லாவிட்டால் அங்கு எதற்காகப்போகிறார்கள்?

திருவேங்கடாச்சார்:— ஆசீர்வதிப்பதுமூலம் தங்கள் நன்றியைச் செலுத்துவதற்காக.

கிழவர்:— ஓஹோ (பலமாக மண்டையை ஆட்டுகிறார்)

(திரையில் வாத்தியவொலி கேட்கிறது) இருவரும் எழுந்து செல்கின்றனர். சிறிது நேரத்தில் ஆசீர்வாத ஒலி கேட்கின்றது.)

## இரண்டாம் அங்கம் முற்றிற்று.

சுபம்.

# மார்கழி நோன்பு

அல்லது

# ஸ்ரீ ஆண்டாள் திருமணம்.



## மூன்றும் அங்கம் - முதற்களம்.

இடம்:- திருவாய்ப்பாடி வீட்டுவாசல் திண்ணை.

(ஆதிநாராயணகோபர், அநந்தகோபர், கேசவகோபர் முதலிய சிலர் உட்கார்ந்து பேசிக்கொண்டிருக்கின்றனர்.)

அநந்தகோபர்:— ஏ ஐயா! நம்ம ஊரில் மழை யில்லையே, என்னபண்ணருது? இப்போ பலத்த ரெண்டுமழை பெஞ்சாப் போதும். காமேனிக்கூடக் காணுட்ட ஸம்சாரி என்ன பண்ணருது? மழைக்கு அறிகுறியே யில்லையே. தாய்முகம்நோக்கும் சிசுபோல் பயிர்கள் வானம் நோக்கி வாடுகிறதே. நாமெல்லாம் எப்படிப் பிழைக்கிறது?

கேசவகோபர்:— போனபாட்டம் குற்றமில்லை. இந்தப் பாட்டம் எந்தப் பாவிகண் வச்சானோ இப்படி யாயிருச்சு.

ஆதிநாராயணகோபர்:— பழங்கதை யேதுக் கய்யா? பசிச்சவன் பழக்கணக்குப் பாக்கிறதுமாதிரி. இப்போ என்ன செய்யணும்னு சொல்லுங்கோ.

அநந்தகோபர்:— (கேசவகோபரைக் காண்பித்து) இதோ பெரியவராயிருக்காரல்ல. இவகதான் சொல்லணும். சொல்லுங்களே ஐயா.

கேசவகோபர்:— முந்தி இப்படித்தான் மழையில்லாமப்போச்சு. எல்லாருமாச் சேந்திக்கிட்டு ஓசனை பண்ணினுங்க பிறவு நம்ம தேவதைக்குப் பூசை வைச்சாங்க. அம்பிடுத்தான். கொட்டிருச்சு மழை.

ஆதிநாராயணகோபர்:— ஆ ஆ. அப்படியா. நாமும் இப்போ அப்படி செஞ்சால்லாம் எங்கிறீளோ?

அநந்தகோபர்:— அதன் விபரம் தெரிஞ்சால்லா நம்ப செய்யாத்துக்கு. அதைச்சொல்லச்சொல்லுங்கோ.

ஆதிநாராயணகோபர்:— ஆமா அய்யா! அதைச் சொல்லுங்கோ முதல்லே.

கேசவகோபா:— நம்ம ஊர் சின்னப் பெண்களெல்லாம் சேந்துக்கிடணும் காலமே முழுகிக்கிட்டு நம்ம தேவதை நாராயணனைப்பற்றி நோம்பு நோக்கணும். நோம்புக்கு வேண்டியசாமாங்க எல்லாம் சேகரித்துக் கொடுக்க ஒரு வாலிபனை நேமிச்சுட்டா நோம்பைப்பற்றி நமக்குக் கவலையில்லே.

அநந்தகோபர்:— நம்ம பெண்களுக்கு நோம்பு நோக்கிர வழிதெரியுமா?

கேசவகோபர்:— நம்ம சம்ஸாரத்தைச் சொல்லிக் கொடுக்கச் சொல்லிட்டாப்போச்சு.

ஆதிநாராயணகோபர்:— ஒரு வாலிபனை நேமிக் கணுமின்னீங்களே. யாரை நேமிக்கலாம். சொல்லுங்கோ பாப்போம்.

கேசவகோபர்:— நம்ம அநந்தகோபர் மகன் ரொம்ப நல்லவன். அட்டியில்லாமச் சட்டினு சாமான் எல்லாஞ் சேகரித்துக் கொடுப்பான்.

அநந்தகோபர்:— அவன் இவ்வேலைக்கு ஏத்தவனில்லை. நம்ம தலைவர் நந்தகோபர் மகனிருக்கானே, அவன்தான் இந்த வேலைக்குத் தக்கவன்.

(எல்லோரும் கேட்டுக் குலுங்க நகைக்கின்றனர்.)

ஆதிநாராயணகோபர்:— (படபடப்புடன்) ஏ ஐயா! கேலிபண்ணரீங்களா? நிசமாச் சொல்லரீங்களா? திருடங்கையிலே பணப் பெட்டியை ஆரேனும் கொடுப்பாளா? நம்ப பெண்களைத்திருடா கள்ளனில்லையோ அவன். நம்ப முழிச்சிண்டிருக்கிறபோதே நம்ப கண்ணிலே மண்ணவாரிப் போட்டு நம்ப பெண்களைக் கொள்ளையிட்டான். அதுக்காகத்தானே அவனைச் சிறையிலடச்சுது. சிறையிலடைக்கச் சொர்சும் நீங்கதான் செய்தீங்க. இப்போ நீங்கதான் விடணும்ங்கிறீங்க. உங்களுக்கு ஒரே நாக்கில்லையோ?

அநந்தகோபர்:— ஏன் இவ்வளவு படபடப்பு? நமக்கு இப்போ அவனாலே காரியமாவ வேண்டியிருக்கு. அவன்தான் இந்த வேலைக்குத் தக்கவன். நீங்கள் அவனைத் தெரிஞ்சுகொள்ளலே. எனக்குத் தெரியுது.

அவன் பிறந்த பிறகுதான் நம்ப ஊரு செழிப்பாச்சு. அவனைச் சிறையிலடச்சோம் மழை யில்லாமல் போயிருச்சு. அவனை விட்டாலே போரும். மழை பெஞ்சுரும். அவனென்ன சாதாரணமானவனா?

எல்லோரும்:— ஆமாம் ஆமாம். உண்மை. அவன்தான் இதுக்குத் தக்கவன்.

ஆதிநாராயணகோபர்:— எல்லாருஞ் சம்மதிக்கிறீங்க. எனக்கென்னஐயா வந்தது? நானே போய் நந்தகோபரிடஞ் சொல்லியவனை விடுவிச்சு இங்கே கூட்டிவாரேன்.

(போகிறார்.)

அநந்தகோபர்:— ஏனய்யா? நான் சொல்லறது பொய்யா நிசமா? அவன் சாதாரண மனிதனாயில்லை. நம்ப நாராயணன்தான் நமக்காக இப்படி வந்திருக்கா ரென்னு எனக்குத் தோணுருது. சின்னக் குழந்தை யாயிருக்கும்போதே அவன் எவ்வளவு அதிசயக் காரிய மெல்லாம் செஞ்சிருக்கான்! பூதனையைக் கொல்லல்லையா? சகடத்தை உடைக்கல்லையா? மருதமரத் தைச் சாய்க்கல்லையா? இதெல்லாம் சாதாரணச் சின்னக் குழந்தை செய்யமுடியுமா? ஆதலால் இவன் நாராயண னாகவே எனக்குத் தோணுருது. நீங்களும் யோசிச்சுப் பாருங்களே. நாம் இவனைக்கொண்டு நோம்புநோக்கச் சொன்னா நிச்சயம் மழை பெய்யும். நீங்கதான் சொல்லுங்களே.

எல்லோரும்:— ஆமா ஆமாம். நீங்க சொல்ரது நிசம்.

அநந்தகோபர்:— அதோ இருவரும் வந்துட்டார்கள்.

(கண்ணனும் ஆதிநாராயணகோபரும் வருகின்றனர்.)

கண்ணன்:— (கை கூப்பி) எல்லோரையும் சேவிக்கிறேன்.

அநந்தகோபர்:— ஹூ ஹூம். அப்படியா. பெரியோர்களைச் சேவிச்சதின் பலனாக உனக்குச் சிறையிலிருந்து விடுதலை உண்டாகட்டும்.

கண்ணன்:— விடுதலை உண்டாவதற்கு ஆசீர்வாதம் வேணுமா? நினைத்தால் போதாதா?

கேசவ:— என் கொஞ்சம் நினைச்சுக்கியே பாப்போம்.

கண்ணன்:— நான் நினைத்துப் பயன் என்ன? எல்லோரையும் கட்டிலிருந்து விடுவித்தாலும், உங்களுடைய இந்த அன்புக் கட்டுதலை என்னால் அவிழ்த்துக் கொள்ளப் போமோ? அன்புக்கு நான் அடியானன்றோ?

ஆதிநாராயணகோபர்:— இன்னுமந்த உதாரப் பேச்சு!

அநந்தகோபர்:— இயற்கை மறையாதன்றோ!

கண்ணன்:— பெரியோர்களே! என்னையழைத்தீர்களே. எதற்கு?

அநந்தகோபர்:— (புன்னகையுடன்) உன்னை விடுதலை பண்ணிரலாமின்னுதான்.

ஆதிநாராயணகோபர்:—குற்றம் பண்ணல்லேன்னு ஒத்துண்டால்தான் விடுதலை தெரியுமா? ஒத்துக் கொண்டு அப்படியே நடக்கணும்.

கண்ணன்:— ஆஹா! அப்படியே ஒப்புக்கொள்கிறேன். குற்றமற்ற நான் ஏன் இவ்விதம் ஒப்புக் கொள்ளக்கூடாது? உண்மையைக் கூறிவிடுகிறேன் கேளுங்கள். நான் களங்கமற்றவன். குற்றமென்பதே என்னைப்பற்றி நிற்காது. ஒளியை இருள்பற்றி நிற்குமோ? ஆனால் நீங்கள் என்னிடம் குற்றமுள்ளதாகப் பிரமிக்கிறீர்கள். இல்லாதபழி என்மீது சுமத்தப்படுகிறது. நீங்கள் நன்கு உணர்ந்து ஆராய்ந்து பார்த்தால் என் குற்ற மின்மைவிளங்காமற் போகாது. இத்தகைய நான் இனியும் என் குற்றமற்றிருப்பதாக வாக்களிக்கக்கூடாது?

அநந்தகோபர்:— இந்த வாக்கு அளிப்பதோடு வேறு ஒரு காரியமுஞ் செய்யுணும். அதையும் ஒப்புக் கொண்டா விடுவிக்கிறோம்.

கண்ணன்:— அதென்ன காரியம்?

அநந்தகோபர்:— நம்ப ஊர்ப் பெண்களெல்லாம் நோம்பு நோக்கப் போறாளன்றோ?

கண்ணன்:— (தனக்குள்) நம் நினைவு பலித்து விட்டது. (வெளியில்) ஏன்?

அநந்தகோபர்:— மழைக்காக. மழையில்லை என்கிறதுகூட உனக்குத் தெரியாதோ?

கண்ணன்:— சிறையிலடைபட்ட நான் இதை எப்படி அறிவேன்? பெண்கள் நோன்பு நோற்றால் நான் செய்யவேண்டிய காரியம் என்ன?

அநந்தகோபர்:— நீ அந்தப் பெண்களோடே இருந்து நோம்புக்கு வேணுங்கற சாமாங்க எல்லாம் சேகரித்துக் கொடுக்கணும். இதுதான் உன் காரியம்.

கண்ணன்:— பெரியோர்களே! மன்னிக்க வேண்டும். இக்காரியத்தை நான் செய்யமுடியாதவனா யிருக்கிறேன். பாவையர் முகம் பாராதபோதே நான் பழிசுமந்தேன். இனிப் பாவையர் முகம் பார்த்திடிலோ கேட்கவேண்டியதில்லை.

அநந்தகோபர்:— இனிமேல் அவ்விதப் பழி யொன்றும் வராது. ஏற்றுக்கொள்.

கண்ணன்:— தயவுசெய்து இக்காரியத்திற்கு என்னை ஏவவேண்டாம். இதைத் தவிர வேறு எதாயி னும் நான் செய்யத் தடையில்லை.

அநந்தகோபர்:— நீ இவ்விதம் பிடிவாதம் செய் தால் நாங்கள் என்ன செய்வது? உன்னுடைய "அமுத த்தவலை" ப்பட்டு ஓடிவரும் பசுக்களுக்காவது பசும்புல்

வேண்டாமா? விசும்பிற் றுளிவீழி னல்லால் பசும்புற் றலைகாண்பதரிதன்றோ? நின் அழகிய கைகளால் குழல் கொண்டு ஊதினபோது, கறவைக் கணங்கள் பரவச மாகிக் கால்கள் பரப்பித், தலைகவிழ்ந்து, தம் செவிகளைக் கூட அசையாமல் நின்று, நினது அமுத கீதம் கேட்டுக் களிக்கவேண்டாமோ? இதற்காகவாவது நீ இக்காரி யத்தை ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும்.

கண்ணன்:— சரி. உங்களுடைய நிர்ப்பந்தத் திற்காக ஏற்றுக்கொள்கிறேன். ஆனால் இனி நீங்கள் என்மீது பழிசுமத்தக்கூடாது. இது நான் உங்களோடு செய்துகொள்ளும் கட்டுப்பாடு சம்மதமா?

(எல்லோரும் சம்மதிக்கிறார்கள்.)

அநந்தகோபர்:— இனி நாம் போகலாம். (கண்ணனை நோக்கி) நோன்பிற்கு எவ்விதக் குறையு மின்றிப் பார்த்துக்கொள். எல்லாப் பொறுப்பையும் உன்னிடம்தான் போட்டிருக்கோம்.

கண்ணன்:— அதுதானே வேண்டுவது. எக் காரியத்தையும் பற்றற்று என்னிடம் பொறுப்பாகத் தள்ளிவிடில் அது எவ்விதக் குறையுமின்றி நிறைவேறு வதற்கு ஐயமென்ன?

(கோபர்கள் போகின்றனர்).

கண்ணன்:— ஆஹா! எனது பாக்கியமே பாக் கியம். இவ்வூரார் மழையில்லாமல் பரிதவிக்கின்றனர்.

எனக்கு அது களிப்பூட்டுகிறது. இப்பொழுது மழை பெய்திடில் என்னை யிவர்கள் விடப்போகிறார்களா? என் அவ்வனிதையரின் மதிவதனம் கண்டு மகிழுறக் கூறு வார்களா? அம்மடந்தையரின் தவப்பயனால்தான் மழையின்றிப் போயிற்றுப்போலும்! ஐயோ! என்னைக் காணாது அம்மடைந்தையர் மனமுடைந்தனரோ? என் மீது அன்புகொண்டு உருகுபவர் மனம் மாறுபடில் இவ் வுலகம் வாழமுடியுமோ? ஆஹா! என்ன ஆனந்தம்! நானு மவர்களும் கூடிக் களிக்கும் காலம் கிட்டி விட்டது. இனி நான் இங்குத் தாமதிப்பதில் பய னில்லை. கதிரவன் மறைந்தவுடன் உத்யானம் போக வேண்டும். நானங்குச் சென்று எதிர்பார்த்திருப்பதை எனது இன்னுயிர் நங்கையருக்கு என் தோழன் நற் செல்வன்மூலம் தெரிவிக்கவேண்டும். இதோ நான் எனது மணாட்டி நப்பின்னையுடன் உத்யானம் போகப் போகிறேன். இதுவரை எனக்கு இரவுதான் பல பல ஊழிகளாயிருந்தது. ஆனால் இன்று பகலே பல ஊழி களாய்த் தோன்றுகிறது. கதிரவன் ஏன் சோம் பேறியாயிருக்கிறான்? என்றும் இடுக்கண் இழைத்த நற் கங்குல்தான் இன்று மகிழுறும் மங்கள வேளையா யிற்று. ஏ மங்களக் கங்குலே! எங்கள் மனம் களிப்புற நீ நெடுநேரம் தங்கவேண்டும். பகல் இதோடு தொலை யட்டும். இனிப் பகலே வேண்டாம். ஆஹா! அவ் வுத்யானம்! குளிர்ந்த காற்று! நளிர் மலர்களின் ஸுகந்தம்! மலர்ந்த செந்தாமரை போன்ற அம் மடந்தையரின் மந்தஹாசம்! என்ன சுகம்! நங்கைமீர்! இம் மங்களக் கங்குலில் ஒரு க்ஷணம்கூட வீணாகக்

கூடாது. இச் சோம்பேறிச் சூரியன் தொலைந்ததும், உங்கள் முகமாகிற சந்திரன் என் முன் துலங்க வேண்டும். வாருங்கள் வந்து களிகூருங்கள்.

(செல்கிறார்)

## மூன்றும் அங்கம், முதற்களம் முற்றிற்று.

சுபம்.

# மார்கழி நோன்பு

அல்லது

# ஸ்ரீ ஆண்டாள் திருமணம்.



## மூன்றும் அங்கம் - இரண்டாங்களம்.

இடம்:- வில்லிநகர் வடபெருங் கோயிலுடையான் சன்னிதி.

( ஆண்டாளும் அவள் தோழிகளும் வருகின்றனர். )

ஆண்டாள்:— (தனக்குள்) கைகூப்பியவண்ணம் ஆலிலையிற்றுயிலும் தாயோய்! நின்னையடைய நான் எத்தனை நாட்கள்தான் தவம் செய்வது! செய்யினும் என்னையாளுடை நின்மனம் கல்லினும் கடிதாயுளதே? நீயிலாது தனியினி நானிருக்க முடியாது. கரியவாகிப் புடைபரந்து செவ்வரியோடிய நின்கண்ணகம் கருணை மழை பொழிந்தும் நீ வாளா இருப்பது விந்தையே. அல்லது நின்மனதின்கண் உள்ள கபடமென்னும் விஷத்தீயினாலோ நின்கண்ணகம் செந்நிறங்கொண்டது. முற்காலத்தில் சானகியைப் பெற, வில் முறித்தும் அணை கட்டியும், வாளரக்கன் நீண்முடி பொடிபடச் செய்தும் அரும் புகழ்கொண்டது வீண் கட்டுக் கதையோ? உருக்குமணியைக் கபட நாடகம் நடித்து நீர் ஏற்றுக்கொள்ளவில்லையோ? ஆயர்தங் கொம்பினுக்காக ஆன்விடைகள் ஏழு அடர்க்கவில்லையோ? என்

விஷயத்தில்மட்டும் வாளாவிருப்பதேனே? இப்பொழுது உன்னையானடைய ஓர் உபாயம் அநுஷ்டிக்கப் போகிறேன். இதுதான் முடிவானது. இதற்கும் கருங்கல் போல் இரங்காதிருந்தால் "அரங்கா" என எனது உயிரை விடத் துணிவேன். இதுவரை யரும்பாடுபட்டுச் சம்பாதித்த நின்புகழை இனி ஒரு நொடியில் பறக்கடித்து விடுவேன். பெண்பழிவீணே போகாது. (சகிகளைப் பார்த்து) எனது இன்னுயிர்த் தோழிகாள்! இப்பொழுது நாம் ஆய்ச்சியாக ஸர்வேசுவரனை வணங்குகிறோம். எதுமறியா இடையர்கள் ஓங்கியுலகளந்த உத்தமனைப் பெறும்புண்ணியம் படைத்தனர். இதனால் ஆரணம்காணு நாரணனுக்கு ஆயர்களிடமுள்ள அளவிலா அன்பு வெளியாகின்றதன்றோ? ஸ்ரீமந் நாராயணன் தசஅவதாரமும் மற்றும் பல அவதாரங்களு மெடுத்து இருக்கிறார். அவைகளில் கிருஷ்ணவதாரமே சீரியதென ஆன்றோர் கூறுவர். அதன் காரணம் அவ்வவதாரத்தில் நம்போன்ற பேதையர்கள் துன்பம் முக்கியமாகக் கருதிப் போக்கடிக்கப்பட்டதுதான். கிருஷ்ணவதாரத்தில் ஆயிரக்கணக்கில் ஆய்ச்சியர்கள் உய்ந்து போயினர். ஆகையால் பேதையாகிய யாம் உய்யவேண்டில் அந்த அவதாரத்தில்தான் ஈடுபட வேண்டும். ஆனால் அவ்வவதார காலமோ மிகவும் முந்தியது. அவன் வளர்ந்த ஆய்ப்பாடியும் அதிக தூரத்தில் உள்ளது. அபலையாகிய யாமங்குப் போகப் பலமேது? ஆகையால் நமக்கு ஒரே ஒரு வழிதான் உள்ளது. கண்ணனைப் பிரிந்த துன்பம் தாங்கமாட்டாமல் கோபியர் அவனைப்போல நடித்து உயிரைத் தரித்

துக்கொண்டனர். அதுபோலத்தான் நாமும் நடிக்க வேண்டும். அங்ஙனம் செய்தால் நாம் கண்ணனைக் கலப்பது திண்ணம். நமது வில்லிநகர்தான் ஆய்ப்பாடி (பகவானைப் பார்த்து) இவ்வடபத்ரசாயியே கிருஷ்ண பகவான். வில்லிநகர் வாழும் யாமே கோபியர். இனி யென்ன வேண்டும்? இது முதல் யாம் விடியற்காலம் எழுந்து "மார்கழி நோன்பு" நோற்கவேண்டும். நீங்கள் எல்லோரும் விடிவோரையில் ஆயத்தமாயிருங்கள்.

ஒருத்தி:— சகி! நாம் உள்ளுணர்ச்சியின் எழுச்சி யால் ஆய்ச்சியர் ஆவதில் தடையில்லை. ஆனால் வடபத்ர சாயியைக் கண்ணனாகக் கூறினையே? அவன் கண்ண னாக எப்படி நடிப்பான்?

ஆண்டாள்:— நாம் உண்மையில் ஆய்ச்சியராயி டின் இவன் கண்ணனாக நடிப்பதற்கு ஐயமென்ன? எனினும் யான் இப்பரம்பொருளை வேண்டிக்கொள் கிறேன். (கை கூப்பி) ப்ரபோ! நான் வேதப்பட்டர் பிரான் புதல்வியாகி உன்னிடம் உண்மையாக அன்பு கொண்டவளாயின், எங்கண் முகப்பே கண்ணனாகத் தோன்றி எங்களது நோன்பை நிறைவேற்றித் தந்தருள வேண்டும்.

(கீழே விழுந்து வணங்குகிறாள்).

அசரீரி:— கோதாய்! நினது பக்தியை மெச்சு கிறோம். எமக்கும் உனக்கும் இனி ஏதும் குறைவில்லை. உனது அபீஷ்டத்தைப் பூர்த்தி செய்வது எமது கடமை.

ஆண்டாள்:— (புத்துணர்வுற்று உருகும் நெஞ்சுடன்)

ஆலிலைத்துயில்வாய்! போற்றி அருளலைக்
கடலே! போற்றி
பாலினு மினியாய்! போற்றி பரம!
நின்மலனே! போற்றி
சீலமிலிடையர் தீம்பில் சிந்தை நன்கு
உவப்பாய்! போற்றி
நாலிரண்டறியா எங்கள் நாயக!
போற்றி போற்றி.

சகிகள்:— ஆஹா! என்ன ஆச்சரியம்! என்ன ஆச்சரியம்! அடியார்களிடம் எவ்வளவு பரிவு! எல்லாம் வல்ல இறைவன் எமது ஆண்டாளின் அன்பு வலை வாய்ப்பட்டு அவளிட்ட கட்டளைப்படி நடக்கிறான் எனின் இதைவிட என்ன ஆச்சரியமிருக்கிறது?

ஆண்டாள்:— சகிகாள்! நீங்களும் நமது நோன்பு நிறைவேறுமாறு இறைவனை இறைஞ்சுங்கள். இறைஞ்சவே அவன்தன் திருக்கண்களால் நாம் உண்மை ஆய்ச்சியராகுமாறு திருந்தவே நோக்கு எமக்கருள்வன் காண்மின்.

[சகிகள் அவ்வண்ணமே செய்ய, உடன் அவர்கள் எல்லோரும் உண்மையில் ஆய்ச்சியாக மாறுகின்றனர், அக்கோயில் நந்தகோபன் அரண்மனையாகத் தோன்று

கிறது. வில்லிநகரை அவர்கள் ஆய்ப்பாடியாகப் பார்க்கிறார்கள்].

ஆய்ச்சியர்தலைவி:—தோழிகாள்! நாம் நாளைமுதல் நோன்பு நோற்கவேண்டும் என்றும், நமது பிராண நாயகன் அதற்கு உதவி செய்வான் என்றும், அதற்காக அவனை விடுதலை செய்திருக்கிறது என்றும் கூறினார்களே? விடுதலை பெற்றால் நமது பிராணநாயகன் எங்கே இருப்பான்? நாம் நமது பாக்கியம் பலித்தது என்று அவனைத் தேடிவந்ததுபோல், அவனும் நம்மைத் தேடி வந்திருப்பானே? அல்லது இவ்வளவும் பொய்யாயிருக்கலாமோ?

ஒருத்தி:— தோழி! ஒருவேளை தன் பிராணநாயகி நப்பின்னைவீட்டிற்குப் பொயிருப்பானோ என்னவோ?

தலைவி:—ஆமாம். இருக்கலாம். வாருங்கள் நாமங்கேயே போவோம். அவள்தான் நம்மைவிட அவனுக்கு மிகவும் பிரியமானவளாயிற்றே? அவன் அங்கே தான் இருப்பான். வாருங்கள் போவோம்.

எல்லோரும் போகும்பொழுது திடீர் என நற்செல்வன் வந்து:— இன்று உங்கள் நாயகன் கண்ணன் விடுதலை பெற்றான். நப்பின்னையுடன் இப்பொழுது தான் அவன் உத்யானம் செல்கிறான். நீங்களும் அங்குத் தவறாமல் வந்துவிடவேண்டுமாய்த் தெரிவிக்கச் சொன்னான். எல்லோரும் விரைவிற் செல்லுங்கள்.

தலைவி:— (புன்முறுவலுடன்) நற்செல்வ! நற்செய்தி கொணர்ந்த உனது உபகாரத்தை எங்களால் மறக்கமுடியாது.

நற்செல்வன்:— நான் என்ன உபகாரம் செய்தேன்? மேகம் செய்த உபகாரத்தை என்று கூறுங்கள். மேகம் மழை பெய்திருந்தால் உங்களால் இப்பொழுது கண்ணனைச் சேரமுடியுமா?

தலைவி:— ஆம். மழையில்லாமற்போனது எங்களுக்கு நன்மையாக முடிந்தது. ஆனால், இனி மழை பெய்தால்தான் எங்களுக்கு நன்மையுண்டு.

நற்செல்வன்:— இனி மழை பொழிவதற்கு ஐயமென்ன? எல்லாம் கண்ணன் சித்தம். போய் வாருங்கள்.

(நற்செல்வன் செல்கிறான்).

தலைவி:— தோழிகாள்! நப்பின்னையின் பாக்கியமே பாக்கியம். நாமவள் பாக்கியத்திற் சிறிதாவது பங்கெடுத்துக்கொள்வோம். போவோம் வாருங்கள்.

ஒருத்தி:— தோழி! நாளைமுதல் அவன் நம்மை விட்டுப் பிரியமாட்டானன்றோ? நல்ல வேளையாக நமக்கு நோன்பு வாய்த்தது.

தலைவி:— ஆம். நாளை விடிவோரை நாங்கள் எழுமுன்பே நீ விரைந்து வந்து எங்களை எழுப்புவாயா?

தலைவி:— அப்படியே செய்கிறேன். எங்கள் புழக் கடைத்தோட்டத்தில் ஆம்பல் வாய் மூடுமுன்பே நான் எழுந்து, உங்களை எழுப்புகிறேன். நாளைச்சு அதற்கு.

மற்றொருத்தி:— எதற்கு இவ்வளவு வாய்வீச்சு? தன் மாமி, வீட்டு வேலையெல்லாம் செய்த பிறகுதானே நீ எழுந்திருப்பாய். நாளைமட்டும் எப்படி ஆம்பல் வாய் கூம்புமுன் எழுந்திருக்கப்போகிறாய்?

,, பாரேன் நாளைக்கு.

தலைவி:— இது தன் காரியமன்றோ? ஆகையால் முன்னரே எழுந்திருந்துவிடுவாள். தோழி! இவள் வார்த்தையைப் பொய்யாக்கவேண்டும். அதற்காகவாவது நீ முதன்முதலில் அவளையே போய் எழுப்பு.

,, அப்படித்தான் செய்யவேண்டும். அப்பொழுதுதான் அவள் நம்புவாள்.

(திரைக்குள் குழலோசை கேட்கப்படுகிறது)

தலைவி:— ஆஹா! கோவிந்தன் குழல்கொடு பொழிலிடையே அமுதகீதமழை பொழிகின்றனன். இவ்வமயம் அவ்வமுதகீதரஸத்தால் அங்கே மரங்கள் நின்று மதுதாரை பாயும். மலர்கள் வீழும். வளர் கொம்புகள் தாழும். பாறையு முருகும். கண்ணுக்கும் காதுக்கும் விருந்தளிக்கும் இவ்வரிய கோத்தைவிட்டு இங்கு நிற்கின்றோமே. சரியான சமயமிதுதான், வாருங்கள், ஓடிவாருங்கள், பணம் படைத்து மறுபவியாத லோபி

*போல், இவ்வமுதகீதத்தை அநுபவியாமல் நாமிங்கு நிற்கலாமோ? ஓடிவாருங்கள்.*

*[எல்லோரும் பரபரப்புடன், மலர்க்கூந்தல் அவிழ்ந்து மயில்தோகைபோல் தொங்க, நெகிழ்ந்த உடையை ஓர் கையால் பிடித்துக்கொண்டு வேகமாகத் தோட்டத்திற்குச் செல்கின்றனர்].*

"இடவணரை இடத்தோ ளோடு சாய்த்து
இருகை கூடப் புருவம் நெரிந்தேற
குடவ யிறுபட வாய்கடை கூடக்
கோவிந்தன் குழல் கொடு ஊதினபோது
மடமயில் களோடு மான்பிணை போல
மங்கைமார்கள் மலர்க் கூந்த லவிழ
உடை நெகிழ ஓர்கையால் துகில்பற்றி
ஒல்கியோ டரிக்க ணோட ஓடினரே."

## மூன்றுமங்கம் இரண்டாங்களம் முற்றிற்று.

சுபம்.

# மார்கழி நோன்பு

அல்லது

# ஸ்ரீ ஆண்டாள் திருமணம்.

---

, மூன்றும் அங்கம் - மூன்றும் களம்.

இடம்:- ரெங்கராஜன் அரண்மனை. திருவரங்கம்.

[ரெங்கராஜனும் கெருடனும் பேசிக் கொண்டிருக்கின்றனர்].

ரெங்கராஜன்:— நண்ப! என் கண்கள் பஞ்சடைந்துவிட்டன. எதிரிலுள்ள வஸ்துக்களைக்கூட நான் பார்க்கமுடியவில்லையே.

கெருடன்:— அரசே! அஞ்சவேண்டாம். பிஞ்சிலேயே அன்பு விஞ்சிய நெஞ்சினளான அச்செஞ்சொலாளைத் தாங்கள் விரைவில் பெறப்போகிறீர்கள்.

ரெங்க:— தினம் விரைவில் விரைவில் என்றால் என்ன செய்வது? ஒவ்வொரு நிமிடத்திலும் என் காதல் வேதனை கரைகட்டாக் காவிரிபோல் பெருகிக் கொண்டே இருக்கிறதே.

கெருட:— ப்ரபோ! அம்மங்கை தன் தோழிகளுடன் தங்களை அடைவதற்காக நாளைக்காலைமுதல் "மார்கழி நோன்பு" நோற்கப் போவதாகக் கேள்வி.

அதனால்தான் "விரைவில் பெறப்போகிறீர்கள்" என்கிறேன்.

ரேங்க:— (சந்தோஷக்குறியுடன்) அப்படியா? என்னைப்போல அவளும் என்னிடம் காதல் கொண்டுள்ளாள் என்று சொல்லு.

கேருட:— ஆம். அதற்கென்ன தடை?

ரேங்க:— காதல்கொண்டால்தான் என்ன? எங்களுக்கிடையே எத்தனையோ ஆறுகளும் ஊர்களும் காடுகளும் மலைகளும் குறுக்கே நிற்கின்றனவே. இவ்வளவையும் தாண்டி நாங்கள் எப்படி ஒன்று சேரப் போகிறோம்?

கேருட:— அரசே! ஒரு காதற்சங்கலியால் தாங்களு மந்நங்கையும் கட்டப்பட்டிருக்கிறீர்கள். இக்கட்டுதலை அவிழ்க்க ஆராலுமாகாது. அயஸ்காந்தமிழுப்பதுபோல உங்களிலொருவர் ஒருவரைத் தன்னிடத்திற்கு இழுத்துவிடப்போவது திண்ணம். அதிற் சந்தேகத்தை விட்டுவிடுங்கள்.

ரேங்க:— என்ன நண்ப! நீ சொல்வது விந்தையாயிருக்கிறதே! காதல் வேதனையையே ராணிக்கு மறைக்கக் கஷ்டப்படுகிறது. இந்நிலையில் அம்மங்கையைக் கைப்பிடிப்பதை எப்படி மறைக்க முடியும்?

கேருட:— தாங்கள் சுதந்திரர்கள், தங்களை ராணி தடுத்துவிடமுடியுமா?

ரேங்க:— நண்ப! அப்படிக் கூறவேண்டாம். ராணி முகம் கோண என்ருல் நடக்கமுடியாது.

கேருட:— ராணியே தங்கள் திருமணத்தை நடத்திவைப்பாள். பாருங்கள்.

ரேங்க:— ஏது?

கேருட:— முதன் முதலில் அம்மங்கையின் தூதாக ஒரு தோழி வந்தாளே அநுக்கிரகை, அவளிடம் ராணியைப் புருஷகாரமாகப் பற்றும்படி நான் சொல்லி யனுப்பியிருக்கிறேன்.

ரேங்க:— நல்ல காரியம் செய்தனை உன் முன் யோசனை மிகவும் பாராட்டத்தக்கது.

கேருட:— இனி ஸந்தேஹமில்லையே அவர்கள் நோன்பு பலிப்பதற்கு?

ரேங்க:— ஆம். என் பாக்கியம் பலிக்க ஸந்தேஹ மில்லை. ஏன் நண்ப! அம்மங்கையர் நோன்பு நோற் கின்றனரே, கண்ணன் வேண்டாமா அதற்கு?

கேருட:— தாங்கள் கண்ணனுகப் போகிறீர்களா?

ரேங்க:— (புன்னகையுடன்) அப்பாக்கியம் யாருக் குக் கிடைத்திருக்கிறதோ? யாருக்கேனும் கிடைக்கட் டும். நாம் அந்நோன்பினையாவது போய்ப் பார்த்தா லென்ன? நான்தான் அம்மங்கையை எப்பொழுது

நேரில் காண்பது? நண்ப! நீ கண்டிருக்கின்றனையே அப்பெண்மணியை, அவள் எத்தகையள்? சிறிது கூறு. கேட்டின்புறுகிறேன்.

கெருட:— மஹாராஜா! தங்களைக்கூடக் கலக்கு கின்றனனே காமதேவன், அவன் அம்மங்கைதன்னிடமே தன் படைகளோடு தங்குகின்றனன். ஆகை யால்தான் அவன் தங்களையே கலக்கும் பலம் பெற் றிருக்கின்றனன்.

நாணினைத்தலையில் வைத்தான்
நளிர் முகப்புருவமாகும்
நீணெடும் சிலைகட்கேற்ப
நீலவேம் படைகள் வைத்தான்
காணரும் மேனிவைத்தான்
இடைதனில் கலவிச் செல்வம்
வேணனிவளர் மென்கோங்கை
வைத்து மேலரக்குமிட்டான்.

இத்தகைய வனிதையின் வனப்பை நான் எவ் விதம் வருணிக்க முடியும்?

ரெங்க:— நண்ப! நாமிப்பொழுதே அங்கு போகவேண்டும். அதற்குச் சாக்கிட ஒரு காரணத்தை யோசித்துப் பார்.

(திடீர் என்று விதூஷகன் அலறிக்கொண்டே ஓடிவந்து). ஐயோ...ஐயோ...மஹா...ராசா! (ரங்காராஜன் காலண்டை வந்துவிழுகிறான்).

ரேங்க:— (பரபரப்புடன்) என்ன ஸமாசாரம்?

விதூஷகன்— மஹா...ரா...சா! நா...ன் ஒ...ரு உடல் நடுங்குகிறது).

ரேங்க:— சீக்கிரம் சொல்லித்தொலையே ஸமாசாரத்தை.

விதூ:— நா ...ன்...இல்லை...அங்...கே புலி... (மிக நடுங்குகிறான்).

ரேங்க:— புலியா? எங்கே?

விதூ:— ( நடுங்கிக்கொண்டே ) ஆ...மாம்... நான்...வா...

ரேங்க:— அட கஷ்டமே. இடத்தைச் சொல்லி தொலையேன்.

விதூ:— அங்...கே...தான் மஹா...ராசா!

ரேங்க:— இதென்னடா இது. எந்த இடத்திலே?

கேருட:— புலி யுன்னை எந்த இடத்தில் பார்த்தது?

விதூ:— புலி...என்னை...ப்பாக்க...லை. நான் ...தாந் தப்பி...ச்சு...ண்டேன் அதைப் பார்த்து.

கேருட:— இவன் என்னவோ வேடிக்கை செய்கிறான்.

ரேங்க:— யாரடா அது. (ஒரு சேவகன் வர அவனை நோக்கி) இவனென்னடா புலிகிலி என்கிறானே, உண்மைதானா? போய் விசாரித்து வா.

சேவகன்:— மஹாராசா! ஒன்னுமில்லேங்க. எங்கிருந்தோ ஒரு புலி ஊருக்குள்ளே ஓடி வந்திருச்சு. அதைக் கொன்றுபோட்டாச்சுங்க.

ரேங்க:— சரி. நீ போய் வா. (போகிறான்)

கேருட:— விதூஷக! செத்த புலிக்கா இந்தப் பயம்?

விதூ:— சாகல்லே அது. தூங்காது.

ரேங்க:— (சிறிது கோபத்துடன்) இதென்ன பரிஹாஸம்?

விதூ:— பரிஹாஸமில்லே மாராசா! ஸத்யமாச் சொல்ரேன்.

கேருட:— சேவகன் செத்துவிட்டதென்கிறானே.

விதூ:— இவன் கிடக்கிறான் சோத்துப்புலி. அது கொறட்டை விட்டுக் கட்டிலிலே தூங்காது. செத்துப் போச்சாம்!

ரேங்க:— (நகைத்து) உன் வீட்டுக் கட்டிலிலேயா?

விதூ:— ஆமாம் மாராசா! வீட்டுப்புலி அது. இந்தக் காட்டுப்புலிக்கா நான் பயப்படாவன்?

கேருட:— (குலுங்க நகைத்து) தன் மனைவியைச் சொல்கிறானோ?

விது:— மனைவி யில்லை, வீட்டுப்புலி. அப்பப்பா! அது நேற்று ராத்திரி என் காதை என்னமாய்க் கடிச்சுட்டது! (காதைப் பிடித்துக்கொள்கிறான்) நல்ல வேளை. இப்போ தூங்கா சமயம் பாத்துத் தப்பிச்சிண்டேன்.

ரேங்க:— ஏன் கடித்துவிட்டது?

விது:— நேற்று ராத்திரி அப்புலி என் உதட்டைக் கடிக்கவந்தது. முத்தமாமிது. அப்போ நான் சொன்னேன். "உதட்டைக் கடிக்காதே. வேதம் ஓதுகிற வாய் எச்சிலாய்விடும்" என்று. அதற்கு இசைந்து உதட்டுக்குப் பதிலாகக் காதை முத்தம்—இல்லை—கடிச்சுட்டது.

[கெருடனும் ரெங்கராஜனும் கேட்டுக் குலுங்க நகைக்கின்றனர்).

விது:— மாராசா! ஒரு விண்ணம். வேதம் சொல்ர வாயை எச்சிலாக்காத ஒரு பெண்ணை எனக்குக் கல்யாணம் பண்ணி வச்சிடணும் (பல் இளிக்கிறான்).

ரேங்க:—(புன்னகையுடன்) ஓய் வேதவாய்மொழி அந்தணரே! நீர்தான் பயந்தாங்கொள்ளியாயிருக்கிறீரே. உமக்கு யார் பெண் கொடுப்பது?

விதூ:— நான் பயந்தாங்கொள்ளியா? அதைக் கேக்கல்லேயே. அன்றிக்கு ஒரு நாள் அந்தப் புலி சொல் விற்று "புருஷாளெல்லாம் பயந்தாங் கொள்ளிகள்" என்று. அதுக்கு "புருஷாளென்னவோ எனக்குத் தெரியாது. நான் பயந்தாங்கொள்ளியில்லே. அப்படியானு உன்னை நான் கல்யாணம் பண்ணிண்டு எப்படி இத்தனை நாளிருக்கமுடியும்?" என்று நேரேயே பதில் சொல்லிவிட்டேனே. நானு பயந்தாங்கொள்ளி?

ரெங்க:— ஒரு பெண்டாட்டிக்கே உன்னுல் பதில் சொல்லமுடியவில்லேயே. உனக்கு இரண்டு பெண்டாட்டியா?

விதூ:— என் முடியாது? நானேக்கே மொட்டை அடிச்சிண்டிடரேன்.

ரெங்க:— மொட்டை யடித்துக்கொள்வானேன்?

விதூ:— ரெண்டு பெண்டாட்டிக்காரனுக்குக் கொண்டை யேது? கொண்டையைப் பிச்சுடப்போராள் என்றுதானே சொல்றீள்! மொட்டை யடிச்சுண்டுட்டா என்ன செய்யமுடியும்?

ரெங்க:— (நகைத்து) போதும் யோசனே. பொத்து உன் ஓட்டைவாயை. நாங்கள் பேசிக்கொள்வதை க்மா என்றுகூட வெளியில் சொல்லக்கூடாது. (விதூஷகன் வாயைக் கையால் பொத்திக்கொள்கிறுன்)

கெருட:— (தனக்குள்) இவர்கள் தமாஷ் நின்று விட்டது. மஹாராஜர் என்ன சொல்லப்போகிறுர்? அப்

பெண்மணியைப்பற்றித்தான். அதற்குள் நான் வேறு வழியில் திருப்பிவிடுகிறேன். (வெளியில்) மஹாராஜ! ஊருக்குள் புலி வந்திருப்பதைப் பார்த்தால் காட்டில் கொடிய மிருகங்கள் மலிந்துவிட்டதாகத் தெரிகிறது. நாம்...

ரேங்க:— (சந்தோஷக்குறியுடன்) ஆம். நண்ப! நாம் வேட்டையாடுவதைச் சாக்கிட்டு அவ்விடம் போய்ப் பார்த்துவிட்டு வந்தால் என்ன?

கேருட:— (தனக்குள்) மறுபடியும் அந்த நினைவு. நல்லது. (வெளியில்) மஹாராஜ! செய்யலாம். ஆனால் அரசனாகிய தாங்கள் அகாரணமாக அங்கு எப்படிப் போகமுடியும்? என்று யோசிக்கிறேன்.

ரேங்க:— மாறு வேடம் பூண்டு செல்வோம். எப்படியாயினும் நங்கையை நான் காணவேண்டும்.

விதூ:— நங்கையைக் காணவில்லையா இன்னும்?

ரேங்க:— நீ கண்டிருக்கிறாயோ?

விதூ:— ஆமாம். இதோ பாருங்கோ (தன் கையைக்காட்டி) இதுதான் நம் கை.

ரேங்க:— உன்னை நான் வாயைப் பொத்திக் கொள்ளச் சொன்னேனல்லவா?

(திரைக்குள் கிணீர் என்று குரல் உண்டாகிறது)

" நான் வேதப்பட்டர்பிரான் புதல்வியாகி
நின்னிடம் அன்பு செலுத்துவதுண்மையாயின்
எங்கண்முகப்பே கண்ணனாகத்தோன்றி
யருளவேண்டும்."

விது:— மஹாராஜா! இதென்ன இதென்ன? (நடுநடுங்கி ராஜனண்டை ஓடி வருகிறான்).

கேருட: ஏ பயங்கொள்ளி! உட்காரு கீழே. (உட்கார்த்திவிடுகிறார்).

ரெங்க:— நண்ப! இதென்ன? இது யார் குரல். ஆதரம் பெருகுகிறதே. என்ன அன்புக்கனிவு! குளிர்ச்சி!

கேருட:— வேறு யார் இப்படிப் பேசமுடியும்? தங்கள் காதலிதான்.

ரெங்க:— பொருந்தும் பொருந்தும். குயிலின் குரலும், குழந்தை மழலையும், இதற்கு நிகராகா. நண்ப! இப்பெண்மணியைக் கண் குளிர இப்பொழுதே நான் காணவேணும். புறப்படு. (எழுந்து புறப்படுகிறார்).

கேருட:— அரசே! அப்பெண்மணியின் பிரார்த்தனைக்குப் பதில் சொல்லுங்கள்.

ரெங்க:— அவள் என்ன பிரார்த்தித்தாள்?

கேருட:— (தனக்குள்) அரசனுக்கு மதிமயக்கம் தலை மண்டியிருக்கிறது. (வெளியில்) அவள் நோன்

பிற்குத் தங்களைக் கண்ணனாகவாவது இருக்கும்படி பிரார்த்திக்கிறாள்.

ரெங்க:— அவளை எங்கே?

கெருட:— ஊரிலேயே இருந்து பிரார்த்திக்கிறாள். அவள் பேச்சு பக்தி யென்கிற தந்திக்கம்பி வழியே வந்து தங்கள் காதண்டை ஒலிக்கிறது, அவள் பிரார்த்தனைக் கிணங்கிப் பதில் கூறிவிடுங்கள். போவோம்.

ரெங்க:— கோதாய்! நின் பக்தியை மெச்சுகிறோம். எமக்கும் உனக்கும் இனி ஏதும் குறையில்லை. உனது அபீஷ்டத்தை நிறைவேற்றுவது எமது கடமை.

சிறிது நேரத்தில் மறுமுறையு மினிய குரல்
கேட்கின்றது.

ஆலிலைத்துயில்வாய்! போற்றி
அருளலைக்கடலே! போற்றி
பாலினு மினியாய்! போற்றி
பரம! நின்மலனே! போற்றி
சீலமிலிடையர் தீம்பில்
சிந்தை நன்குவப்பாய்! போற்றி
நாலிரண்டறியா எங்கள்
நாயக! போற்றி போற்றி.

ரெங்க:— ஆஹா! அம்மங்கையின் திருவாயில் நின்று பெருகும் திருவாசகச் செந்தேன் எவ்வளவு

திக்திப்பாயிருக்கிறது! இது நான் இன்று எதிர்பாராத பெரும் பேறு.

விது:— மஹாராசா! இன்று எனக்கு லட்டோடு சாப்பாடு போட்டிடணும்.

கெருட:— அரசே! அம்மாதாசின் திருமுகச் சேவையும் இன்றுதானே தங்களுக்குக் கிடைக்கப் போகிறது.

ரெங்க:— ஆம் நண்ப! எல்லாம் உன் உதவியால்தான்.

விது:— மகாராசாவுக்குக் கல்யாணம் நடக்கப் போரது (கண்ணைக் கொட்டிக்கொண்டு) மாராசா! எனக்கும் ஓர் பெண்ணை...புலியை யில்லே... (பல்லை இளிக்கிருன்).

கெருட:— உனக்கு இசைந்த பெண்ணகப்பட வேண்டுமே இவ்வுலகத்தில்.

விது:— மகாராசாவுக்கு மட்டு மிசைஞ்சிருக்காளோ அந்தப் பெண்.

கெருட:— ஆம்.

விது:— மகாராசாவைப்போல அழகா ஒருத்தி இருக்கவா செய்ராள்?

கெருட:— ஆம்.

விது:— ஏனய்யா பொய் சொல்லணும்? மகாராசாவுக்குப்போல இவ்வளவு அழகாய் மீசை முளைச்

சிருக்கோ அவளுக்கு? அதை முதல்லே சொல் லுங்கோ.

ரேங்க:— உனக்கு மீசை முளைத்த—இசைந்த ஓர் பெண்ணைக் கலியாணம் பண்ணிவைப்போம். உனக் குப் பெண் தேடப்போகிறோம். நீ வீட்டிற்குப் போ யிரு.

விதூ:— மகாராசா! நானும் வரேன். நான் சாப்பிட வேண்டாமா நோம்புச் சாப்பாடெல்லாம்?

கேருட:— அரசே! இவனும் வரட்டும். இவ னிங்கிருந்தால் ஓட்டைவாய் சும்மா இராது.

ரேங்க:— நண்ப! விஷ்வக்ஸேநரிடம் தகவல் சொல்லிவிட்டு வா, நாம் திரும்பி வரும்வரை ராஜ்யத் தைக் கவனித்துக்கொள்ளும்படி.

(கெருடன் செல்கிறான்)

விதூ:— மாராசா! தாங்கள் கண்ணனாகப் போரீளா? கண்ணன் வேஷம் போட்டுக்குங்கோ. பாப்போம்.

ரேங்க:— (தனக்குள்) ஆம். நானிப்பொழுதே கண்ணனாகிக் கொள்கிறேன். (கண்ணனாகிக் கொள் கிறார்).

விதூ:— மாராசா! நீங்க மாராசாதானா? இல்லே போலிருக்கே.

ரேங்க:—என்னை மஹாராஜா என்றழைக்கக் கூடாது. நான் கண்ணன். நீ என் தோழன் நற்செல் வன். நமது ஊர் ஆய்ப்பாடி. தெரிகிறதா?

விதூ:— நான் மாப்பிள்ளைத் தோழனு? பலே. என் பாடு வேட்டைதான்.

ரேங்க:— சரி. போ. நற்செல்வனுகி வந்துசேர்.

(விதூஷகன் போகிறுன்)

எனது பிராணநாயகியின் நோன்பை ஏன் என் பாக்கிய பலனை அநுபவிப்பதற்காக நான் கண்ணனுகி விட்டேன். வில்லிநகரை ஆய்ப்பாடியாகத் தோன்றும் படி செய்தேன். என் தலைவியும் தோழிகளும் எனது அநுக்கிரகத்தால் உண்மை யாய்ச்சியாராய் மாறினர். என் அகடிதகடநா ஸாமர்த்தியத்தை உபயோகப்படுத்தி ஆய்ப்பாடி (வில்லிநகர்)க் கிழவர்களிடம் ஆய்ச்சியர் நோற்கும் நோன்பை நிறைவேற்றித் தருவதாக வாக்களித்துவிடபோகிறேன். விதூஷகன் என் தோழன் நற்செல்வன் நிலைமையை அடையப்போகிறுன். கெருடன் நப்பின்னை நாயகி ஆகட்டும். நான் நிலவறையில் அடைபட்டதால் பிரிந்து வருந்தும் உணர்ச்சியு முண்டாகட்டும் அவனுக்கு. பட்டமகிஷியை "நப்பின்னையாக வா" என்று எப்படி அழைப்பேன்? நானும் ரங்கராஜன் என்கிற உணர்ச்சியையே மறந்து கண்ணனுகி விடவேண்டும். நோன்பு முடியும்வரை ஆய்ச்சியர்

*கோலத்திலேனும் கண்ணன் உணர்ச்சியோடாவது அவளை அநுபவிக்கமுடியுமன்றோ?*

*(மறைகிறூர்).*

மூன்ருமங்கம் மூன்ருங்களம் முற்றிற்று.

சுபம்.

மூன்ருமங்கம் முற்றிற்று.



# மார்கழி நோன்பு

அல்லது

# ஸ்ரீ ஆண்டாள் திருமணம்.



## நான்காம் அங்கம் - முதற்களம்.

(அழகிய ஓர் தாமரைக்குளம் கரையில்

ஓர் விசித்ரமான பறை

நப்பின்னையும் கண்ணனும் அதில் அமர்ந்திருக்கின்றனர்.

இருவரும்

மாலைதொடுத்தவண்ணம்

ஸம்பாஷித்துக்கொண்டிருக்கின்றனர்.)

கண்ணன்:— கண்மணி! இன்று எவ்வளவு புண்ணிய நாள்! நாமிருவரும் பிரிந்து ஏங்கி எதிர் பார்த்தது இந்நாளைத்தானே? பிரிந்து கூடுவதிலுண் டாகும் இன்பம் பெரிதுதான். நீயேகூறு இன்றுபோல் என்றேனுமுனக்கு இத்தகைய இன்பம் உண்டாகி யிருக்கிறதோ?

நப்பின்னை:— ப்ராணப்பிரிய! தாகமுள்ளவனுக் குத் தண்ணீரும் இனியதுதான். எப்போ எப்போ என்று எதிர்பார்த்துக்காதல் தாகங்கொண்ட நமக்கு இச்சேர்த்தி ஏன் இன்பம்பயக்காது?

கண்ணன்:— நாம் கூடிக்களித்து விளையாடுமிச் சோலை, நிச்சயம் இத்தனை நாட்களாக நம் வரவை எதிர்பார்த்திருக்கும். நீ என்ன நினைக்கின்றனை?

நப்பின்னை: —நானுமப்படித்தான் நினைக்கிறேன். வந்த விருந்தாகிய நாம் அருந்த, வளைந்து அசைகிற கிளைகளாகிற கைகளால் அழைத்து, அரியபழங்களை யீந்து நம்மனம் உவக்கச்செய்யுமிவ்வனம் நமது வரவை எதிர்பார்த்திருந்ததென்பதற்கு ஐயமென்ன?

கண்ணன்:— ஆம். இவ்வனம் ஓர் பெரிய வள்ளல்போன்றது. வள்ளலைச்சார்ந்தோர் எள்ளள வேனும் வருந்த இடமுண்டோ? அதுபோல் இவ் வனத்தைச்சார்ந்த எதைக்காணினும் அது வருந்தாம லிருக்க அருந்தவம் செய்ததோ? என்றுதான் சொல்ல வேண்டியிருக்கிறது. பறவையினங்கள் தன் கூட்டில் தன் பேடுகுஞ்சுகளுடன் கொஞ்சிக் குலாவுகின்றன. இக்குளத்தில் சிறிய அலைகளால் அசையும் ஆம்பலில் மதுவுண்டு மதங்கொண்ட வண்டினங்கள் இனிய இசை யுடன் அரசகுமாரர்போல் ஊஞ்சலாடுகின்றன. என் தாவரங்களைப் பார். என்ன ஆநந்தம் அவைகளுக்கு? பூங்கொத்துக்களாகிற கொங்கைகளையும், தளிர்களாகிற அதரத்தையும் கண்டுகாமுற்ற மரங்கள், தங்கள் கிளை களாகிற கரங்களால் இம்மலர்க்கொடிகளாகிற மட மாதரையிறுகத்தழுவி மகிழ்கின்றன. இக்கொடி மட வாரும் இளங்காற்றினால் அசையும் மலர்களில்நின்றும் தேனாகிய ஆநந்தக்கண்ணீரைச் சொரிந்துகொண்டிருக்

கின்றனர். பிரிந்துகூடும் நம்மை இக்கொடியாது பூத்துப்புன்முறுவலால் பரிஹாஸம் செய்கின்றனள் போலும்! இத்தகைய வனத்தினில் ஆநந்தமிலாத ஒன்றை நாம் காணமுடியுமோ?

நப்பின்னை:— ஏன்? ஆனந்தமில்லாத தொன்றுமில்லையோ? இத்தாமரைக்கொடியைப் பாருங்கள், எப்படி வாடிவதங்கியிருக்கிறது? இவ்வுலகில் ஒன்று இன்புறுவதும் மற்றொன்று துன்புறுவதுமியல்பே யன்றோ?

கண்ணன்:— ஆம். ஆனால் இக்கொடி, கதிரவனாகிய தன் கணவனைப் பிரிந்து வாடி வதங்குகிறது. விரஹிகளுக்கு சுவர்க்கத்திலும் சுகமில்லை. நீயும் நானும் பிரிந்தநிலையில் அதாவது நேற்றுவரையில் என்ன பாடுபட்டோம்! நீயோ நானோ நேற்று இச்சோலைக்கு வந்திருந்தால்?

நப்பின்னை:— உண்மைதான். விரஹிகள் படுந் துன்பத்திற்குக் கங்குகரை கிடையாதன்றோ? நீங்கள் கூறியபடி இப்பங்கயக்கொடி இவ்வுண்மையை நன்கு விளக்கிக்காட்டுகிறது.

கண்ணன்:— இதே கொடி, காலையில் கணவனைக் கண்டதும், மலர் முகமலர்ந்து, வண்டெனுமிருண்ட திலகமணிந்து களித்துக்கொளித்துக் காதலர் பிரிந்துகூடும் புணர்ப்பினிலுண்டாகும் உணர்ச்சியின் யுணர்த்தப்போகின்றது. என்னே உலகநிலை?

நப்பின்னை:— நாதா! தாங்கள் கவி மரபிற்றோன்றிய கவிவாணர்போல அழகாக வருணிக்கிறீர்கள். இக்கொடி இப்பொழுது ஏங்கிநிற்கும் நிலையினை நன்கு வருணியுங்கள். கேட்டு இன்புறுகிறேன்.

கண்ணன்:— நன்கு கூறினை. கவிவாணர்கள் அரசர்களிடம் பரிசு பெறக் கவியிசைப்பார்கள். அதுபோல் நானுமுன்னிடம் பரிசு பெற ஓர் கவி கட்டுகிறேன்.

நப்பின்னை:— என்னிடம் என்ன பரிசை எதிர்ப்பார்க்கிறீர்கள்?

கண்ணன்:— நான் எதிர்பார்க்கும் பரிசு பெரிசு. ஆனால் உனக்கு அது சிறுசே.

நப்பின்னை:— அதென்ன? சொல்லுங்கள். உங்களுக்கு இல்லாத எது எனக்குமட்டும் உரியதாயுள்ளது?

கண்ணன்:— ஒன்று உண்டு. அது நீ இசைந்தால்மட்டுமே எனக்குக் கிடைக்கும். கடல்மண் எல்லாம் சேர்ந்தும் இதற்கு விலையாமோ? என்று சொல்லத்தகும் பெருமைவாய்ந்த செல்வமது.

நப்பின்னை:—அதுஎது என்று சொல்லுங்களேன்? பின்னர்தானே நான் இசையமுடியும்?

கண்ணன்:—நீ இசைவதாக வாக்களித்தால் நான் சொல்லுகிறேன்.

நப்பின்னை:— என்றால் முடியுமானால் இசையத் தடையென்ன?

கண்ணன்:— உனக்கு அது சிறுசு என்று நான் தான் முன்பே சொல்லிவிட்டேனே.

நப்பின்னை:— இசைகிறேன்.

கண்ணன்:— நான் கவி கட்டுகிறேன். அது சுவையுடைத்தாயின் உன் தோள்களாகிற தங்கக்கொடிகளால் என் னங்கத்தைக் கட்டிவிடவேண்டும். இது தான் நான் உன்னிடம் எதிர்பார்க்கும் விலையற்ற பரிசு.

நப்பின்னை :— (நாணிப் புன்முறுவலுடன்) அழகாயிருக்கிறது. நல்லபரிசை எதிர்பார்க்கிறீர்கள்.

கண்ணன் :— இப்பரிசுக்கென்ன? இதைவிட உன்னிடம் நான் எதிர்பார்க்கவேண்டுவதென்ன இருக்கிறது? இப்பரிசுபெற்றிடில் என்ஜன்மமே ஸபலமாகும். நான்பிறந்தது அடலாயர்தம் கொம்பினுக்கேதான்.

நப்பின்னை :— (நாணி முறுவலுடன்) பெண்கள் முதன்முதலில் தழுவுவது வழக்கமில்லையே?

கண்ணன் :— பாற்கடல் கடையும்போது பங்கயவல்லி பற்பநாபன் மார்பகத்தைத்தானே தழுவவில்லையோ? இதோ காணும் கொடிகள் கொள்கொம்பினைத் தானே ஆலிங்கனம் செய்யவில்லையா?

நப்பின்னை :— பங்கயவல்லியும் இங்குள்ள கொடிகளும் சுயம்வர காலத்திில்மட்டும் தாங்களே கணவனைத்

தேடித்தழுவிக்கொண்டாலும், தழுவியபின்னர் மாலும் மிம்மரங்களும் இன்னும் தன்னகத்தில் தாங்குகின்ற தன்மையையும் கவனியுங்கள்.

கண்ணன் :— உன்னையும் இப்பொழுது ஒரு சுயம்வரந்தான் நடத்தச் சொல்லுகிறேன்.

நப்பின்னை :— ஆன்விடைகள் ஏழடர்த்து நீங்கள் தான் என்னைச் சுயம்வரித்திருக்கிறீர்களே ?

கண்ணன் :— பரிசுகொடுக்க இசைந்து பின்னர் இப்படி மறுக்கலாமா ?

நப்பின்னை:—ஓஹோ! இதற்காகத்தான் முன்பே வாக்களிக்கச் சொன்னீர்கள்போலும். நல்லது. தங்கள் கவி சுவையுடைத்தாயிருந்தால் நான் வாக்குத்தவறக் கூடாதுதான். எதைவிடத் தங்கள் கவி சுவையுடைத்தாயிருந்தால்? அதைக் கூறுங்கள்.

கண்ணன் :— நீ உலகில் எதை மிகச் சுவையுடையதாகக் கருதுகிறாய்?

நப்பின்னை :— தங்களைத்தான்.

கண்ணன் :— என்னைவிட என் கவி சுவையுடைத்தாயிருந்தால் பரிசுகொடுக்கிறேனென்கின்றனையோ!

நப்பின்னை :— ஆம்.

கண்ணன் :— என்னைவிட உனக்கு மற்றொன்றும் ரஸியாது என்பாயே?

நப்பின்னை :— ஆம் ரஸியாதுதான். அது என் சுபாவம்.

கண்ணன் :— மற்றக் கவிகளைவிடச் சுவையுடைத் தாயிருந்தால் என்றுதான் கொள்ளவேண்டும்.

நப்பின்னை :— மற்றக் கவிகள் எவை?

கண்ணன் :— உலகில் உள்ள கவிகள்.

நப்பின்னை:— தங்கள் கவியைவிடச் சுவையுள்ள வேறொரு கவியை நான் சொல்லிவிட்டால்?

கண்ணன் :— அப்பொழுது உனக்கு நான் பரிசு தருகிறேன்.

நப்பின்னை:— (புன்னகையுடன்) என்ன பரிசு?

கண்ணன் :— உனக்கென்ன வேண்டும்?

நப்பின்னை:— தாங்கள் விரும்பிய பரிசுதான்.

கண்ணன் :— எட்டைத் திருப்பிவிட்டனையோ?

நப்பின்னை :— ஆம். இப்பொழுது பரிசு பந்தயமாக மாறியது.

கண்ணன் :— நமது கவிகளில் இது அதிகச் சுவையுடைத்தென்று தீர்மானிப்பவர் எவர்?

நப்பின்னை :— எவ்விதத்திலும் ஒத்த நமது இரு அந்தராத்மாக்கள்தான்.

கண்ணன் :— தோல்வியுற்றபின் "நான் மாட்டேன் வெட்கமாயிருக்கிறது" என்று இப்பொழுது போல் பின்வாங்கக்கூடாது.

நப்பின்னை :— (புன்னகையுடன்) தோல்வியுற்றால் பின்வாங்கவில்லை.

கண்ணன் :—

"மட்டார் குழலாய்! இம்மலர்க் கோடி
மோட்டால் நின்தனம் ஒக்க முயன்றும்
வட்டாய் நின்முத மாண்புற் றிடவும்
எட்டாமை யினுல் ஏங்குகின் றதால்".

நப்பின்னை :— (நாணித்தலை குனிந்து) நன்கு வருணிக்கிறீர்கள்.

கண்ணன் :— இக்கொடி ஏங்குவதற்கு இதைவிட வேறு என்ன காரணமுளது?

நப்பின்னை :— இதன் தன்மையைத்தானே நான் வருணிக்கக்கூறினேன். என்னையிதில் பிணைப்பானேன்?

கண்ணன் :— நீ வருணி. கேட்போம்.

நப்பின்னை :— நான் இவ்வருணனையில் பிணைக்கப் போவதில்லை தங்களை.

கண்ணன் :— (புன்னகையுடன்) வருணனையில் என்னைப் பிணைக்கவேண்டாம். உன் இரு—

நப்பின்னை:— கோபக்குறியோடு பார்த்துத்தலை குனிகிறாள்.

கண்ணன்:— (ஒரு கையால் நாடியை உயர்த்தி) என் ஆசைக்களஞ்சியமே! இதற்கென்ன கோபம்? நான் கூறியதில் என்ன குற்றமிருக்கிறது? நடவாத— அல்லது நடக்கப்போகாத எதையாவது நான் சொல்லி விட்டேனா?

நப்பின்னை:— தங்கள் பரிஹாஸத்திற்கு என்னால் பதில் சொல்லமுடியாது.

கண்ணன்:— இப்படிக் கோபித்துக்கொண்டுவிட்டால் நான் பந்தயத்தை மறந்துவிடமாட்டேன்.

நப்பின்னை:— ஓஹோ! தாங்கள் ஜயித்துவிட்டதாகவே கனவு காண்கிறீர்கள்போலும்!

கண்ணன்:— நான் ஜயிப்பதற்கு ஐயமென்ன? உனக்கு முடியுமானால்தான் இதற்குள் பதில் கவி கூறி என்னை ஜயிக்கத் துணிந்திருப்பாயே.

நப்பின்னை:—என்னால் ஜயிக்கமுடியாதா? பார்ப்போமே. கேளுங்கள் என் பாட்டை.

களங்கமதி நீண்ட வரக்கரம் விரித்தே
கணவனு மேல்திசை மாது தன்னைச்சேர
வளமிகுதே னேனுஞ் செல்வம் கொள்ளைகொண்டே
வண்டினம்தம் பெண்டிரோடு குமுத மேக

இளங்கமல முகம்வாடி ஏங்கி நிற்கும்
இக்கொடியை வாலி யெனும்பாவி அந்தோ!
உளமுருக வருதிரை யாம் கரங்களாலே
உந்தி வெளிதள்ளுநிலை பார்க் கொணுதே.

கண்ணன் :— ஆஹா! வெகு அழகு!

நப்பின்னை :— நாதா! இக்கவி தங்களுக்குச் சுவையூட்டுகின்றதா?

கண்ணன் :— என் இன்னுயிர்மானே! இதற்கு என்னதடை? கலவிப் போரில் நினது இனிய அதா மதுவும் குழறும் மழலைச் சொற்களும்போல, புலமைப் போரிலுமுன் கவிச்சுவை ஈறில் இன்ப வெள்ளத்தில் என்னை மூழ்கும்படி செய்துவிட்டது.

நப்பின்னை :— நாதா! இப்பொழுது யார் வென்றவர்? நீங்களே சொல்லுங்கள்.

கண்ணன்:—நீதான். தோற்ற நான் பந்தயத்தை இதோ நிறைவேற்றுகிறேன்.

நப்பின்னை:— (புன்முறுவலுடன்) பந்தயத்தை நிறைவேற்றுவதிருக்கட்டும். என் கவி சுவையுடைத்தாயின் என் காதிற்கு இன்பம் பயக்கும்படிக் குழல் ஊதி இன்னிசையமுதம் பரிசு அளியுங்கள்.

கண்ணன்:— நின் தேனூறும் திருவாயினின்றும் ஒரு வாசகமேனும் வெளிவரின், என் குழலோசை

செவிகட்கு நாராசமேயாமன்றோ? அதை ஊதுவது னேன்?

நப்பின்னை:— நாதா! நெடுநாளாக நான் தங்கள் குழலிசையில் நசைகொண்டேன். இன்று நாம் தனித்துக் கூடியும் இதை நான் பெறுவிடில் என் பாக்கியத்தை என்னவென்பேன்?

கண்ணன்:— பேதாய்! என் குழலோசை கேட்பது பாக்கியபலன் என்று கருதுகின்றனையோ?

நப்பின்னை:— ஆம். அதற்கு என்ன தடை?

கண்ணன்:— நீதான் குழலைவென்ற குளிர்வாயினளாயிற்றே! பின்னையேன் என் குழலை மெச்சுகின்றனை?

நப்பின்னை:— நாதா! நின் செந்தாமரைக்கண்கள் மிளிரக் குழலூதி யிசைபாடினால் அவ்வழகும் இசையும் கண்டு நான் உளம் மகிழ்வேன்.

கண்ணன்:—ஆகில் அப்படியே செய்கிறேன். (குழலூதுகிறான்)

[நப்பின்னை உளமுருகிக் கண்கள் நீர் பனிப்ப இமை கொட்டாமல் அவ்வழகைப்பார்த்துக்கொண்டேயிருக்கின்றனள்]

கண்ணன்:— (சிறிது நேரம் கழித்து) கண்மணி! இங்கென்ன? தன்னை மறந்தென்ன யோசிக்கின்றனை?

நப்பின்னை:— (திடுக்கிட்டு) பிராணேச! தாங்கள் என்னருகே இருக்கும்போது எனக்கு யோசனை யேது? தங்கள் கீதம் கேட்டு உருகி எழுது சித்திரம் போலாயினேன்.

(திரைக்குள் பாதசிலம்பொலி கேட்கின்றது)

நப்பின்னை:— நாதா! எங்கோ காலடி சப்தம் கேட்கின்றதே?

கண்ணன்:— (காதுகொடுத்து) ஆம். இப்பொழுது யார் ஈண்டுவருவது?

நப்பின்னை:— நாதா! நீங்கள்தானே சிறிதுநேரத்திற்குமுன்பு நற்செல்வன்மூலம் என் தோழிகளுக்கு இங்குவரத் தெருவித்ததாகச்சொன்னீர்கள். அவர்களாயிருக்கலாம்! அதற்குள் மறந்துவிட்டீர்களே?

கண்ணன் :—ஆம். மறந்துவிட்டேன். அமிருதம் நிறைந்த அதாம்தரித்தநினது மதுரத்திருமுகத்தைக் கண்டு இவ்வுலகையே நான் மறந்துவிட்டேனே! இதிலென்ன ஆச்சரியம் ?

நப்பின்னை :— (தலைகுனிந்து) நயம்படப்பேசுவதைமட்டும் மறக்கவில்லைபோலும் !

கண்ணன் :— அவர்கள்தான் வருகிறார்களா என்று பார்.

நப்பின்னை :— (எழுந்து பார்த்து) ஆம். நாத ! அவர்கள்தான்.

" இடவணரை இடத்தோளோடு சாய்த்து
இருகை கூடப் புருவம் நெரிந்தேற
குடவயிறு படவாய் கடை கூடக்
குழல்கொடுநீ! நன்கு ஊதிசை கேட்டு
மடமயில் களோடு மான் பிணைபோல
மங்கைமார்கள் மலர்க் கூந்த லவிழ
உடை நெகிழ ஓர்கையால் துகில்பற்றி
ஒல்கி யோடரிக்க ணோடஉற் றனரே.

கண்ணன்:— நுந்தோழிகள்தானே வருகின்றனர். நாம் மறைந்துகொண்டு சிறிது வேடிக்கை பார்ப்போமா?

நப்பின்னை:— நாதா! இது தகாது. எத்தனையோ நாட்களாகத் தங்களைப்பிரிந்து வருந்திய இம்மான் விழியினரை நாம் என் ஒளிந்து பாக்கப்பாக்க விழிக்க வைக்கவேண்டும்.

கண்ணன்:— பேதாய்! பிரிவாற்றுமல் படும்பாட்டை நேரேகண்டால் நமக்கு வேட்கை அவர்கள்மீது மீதூறுமன்றோ?

நப்பின்னை:— இனி வேட்கைமீதூறுவதாவது? உங்கள் காதல்தான் கடலின் மிகப் பெரிதாயிருக்கிறதே?

**கண்ணன்:—** ஆயினும் அம்மான் விழியனாரின் பயந்து வெருண்டுமருளும் கண்களின் அழகை இப்பொழுதுதானே காணமுடியும்?

நப்பின்னை:— தாங்கள் கண்ணழகைக் காமுறுகிறீர்கள். அவர்கள் பாடு என்னுகும்? முடிந்துவிடுவரோ?

**கண்ணன்:—** முடியும்வரை நாம் பார்த்திருப்போமா? வா. ஒளிந்துகொள்வோம் (கண்ணன் எழுந்து கையைப் பிடித்தெழுப்ப இருவரும் பாறையடியில் குதித்து ஒளிந்துகொள்கின்றனர்)

[ஆய்ச்சியர்கள் வருகின்றனர்]

**தலைவி:**—சகிகாள்! அவர்களைக் காணேும், என்ன செய்வது?

**ஒருத்தி:—** அவர்கள் நம்மை ஏமாற்றிவிட்டனர். நாம் வீடு திரும்புவதா?

**மற்ருெருத்தி:—** அவர்கள் அவ்விதம் செய்திருக்க மாட்டார்கள். ஏமாற்றுவதற்கு இதுவோ தருணம்?

**தலைவி:—** அவர்கள் ஏமாற்றமாட்டார்கள். அதிலும் நந்தோழி நப்பின்னை வராமல் ஏமாற்ற இடம் கொடுத்திருக்கமாட்டாள். மேலும் நாம் குழலோசை கேட்டது பொய்யோ? நீங்கள் தேடிப்பாருங்கள். அவன் எங்கேயாவது ஒளிந்துகொண்டுதானிருப்பான்.

ஒருத்தி:— ஆம். நம் தோழி கூறுவதுண்மை. நம்மைத் தனியேவிட்டுச் சிறிதுநேரம் வேடிக்கை பார்ப்பது அவன் வழக்கந்தானே?

தலைவி:— நீங்கள் ஆங்காங்குச் சென்று தேடிப் பாருங்கள்.

[எல்லோரும் தேடச்செல்கின்றனர்]

தலைவி :— (பெருமூச்செறிந்து) ஐயோ! இத்தனை நாட்களாக கிழடுகள் செய்த இடையூறுகளால் துன்பப் பட்ட நான், இன்று அத்துன்பம் தொலைந்ததென்று உளம்மகிழ்ந்தேனே! நற்செல்வன் செஞ்சொல்லைக் கேட்டதும் முன்னிருந்த நிலையெல்லாம் மறந்து எனக்கு என்ன களிப்பு! என்ன பூரிப்பு! எத்துணை கர்வம்! அக்களிப்பும், பூரிப்பும் கர்வமும் என்னைவிட்டு எங்குத் தொலைந்தன? ஐயோ! நான் எண்ணியிருந்ததென்ன? நான் கட்டிய பிரம்மாண்டமான மனக்கோட்டை ஒரு நொடியில் தகர்த்தெறியப்பட்டதே. அவன் குழலோசை கேட்டுக்குதூகலித்து நான் ஓடிவந்தேனே! இவ்வளவு ஆசைகாட்டி அவன் மோசம் செய்துவிட்டானே. முழுதும்தான் தேடிவிட்டோமே. இனியென் தோழிகள் எங்கே காணப்போகிறார்கள்? அவன் மனம் கல்லினும் கடிதேபோலும். இனியென்னால் நடக்கவுமுடியாது. அவனைக் கண்டாலொழிய நான் இங்குவிட்டு எங்கும் போகேன். மாமிமார்வந் தென்னையழைத்திடினும் நான் போகப்போவதில்லை. நாணியினி யோர் கருமமில்லை. அவன் முகத்தன்றி விழியேன். இதோ தெரியும் பாறைமீது நான் உட்கார்ந்துகொள்கிறேன்.

(சில அடிகள் நடந்து கீழே உற்றுநோக்கி) ஆஹா! கண்ணன் இங்கே வந்தே உள்ளான். இங்குத்தான் சகிகள் வரவில்லையே. ஆனால் காலடிகாணப்படுகிறது (மேலும் சிறிது உற்றுநோக்கி) ஆம். அவன்தான் வந்துள்ளான். சங்கம் சக்கிரம் முதலிய திருவடி ரேகைகள் துலங்குகின்றன. மற்றுமோரடியும் காணப் படுகிறது. அது நப்பின்னையினதாயிருக்கலாம். ஆம். நப்பின்னையினதுதான். பின்புறம் பள்ளமாகவும் முன் புறம் உயர்ந்ததாகவும் காணப்படுமிவ்வடி, 'தேர்த் தட்டுப்போன்ற பிற்றட்டுவாய்ந்த அவளுடையதுதான் என்பதற்கு ஐயமென்ன? அவ்விருவரும் தனித்து இவ்விடம் வந்திருப்பது உண்மை. இவ்வடிவழியே சென்றால் நானவர்களைக்கண்டு பிடித்துக்கொள்ளலாம். (அவ்வடிவழியே சென்று பாறையேறி) ஆஹா! இதை விட அவர்களிங்கு வந்ததற்கு வேறு என்ன அடை யாளம் வேண்டும்? அவர்களிருவரும் இப்பாறையில் தான் மாலை தொடுத்துக்கொண்டிருந்தனர் போலும்! ஆஹா!! அவ்விருவரும் தனித்தனியே தொடுத்தமாலை களை எனக்காக வைத்துவிட்டுப் போயிருக்கிறார்கள் போலும்! (அம்மாலைகளிரண்டையும் எடுத்து ஒன்றாக முடித்துக்கொண்டு) ஐயோ! நான் எவ்வளவு பாக்கிய மற்றவள். (கண்களில் நீர்வடிகிறது) இம்மாலையை என் பிராணநாதனன்றோ கழுத்தில் அணிவிக்க வேண் டும். ஐயோ! நானுகவோ அணிந்திடல் வேண்டும்? (மாலையை அணிந்து, வானம் நோக்கி) எனது இன் னுயிர்த்துணையோய்! நீ எங்கே சென்று மறைந்து

கொண்டனே? இதுகாறுமுள்ளே உருகிநைந்து வருந்திய நான், இன்று என்பாக்கியம் பலித்தது என்று எண்ணியிருக்க, நீ இங்ஙனம் சோதனை செய்யலாமோ? உன் விளையாட்டு வெகு அழகாயிருக்கிறது! என்னால் முடிந்தமட்டும் தேடிப்பார்க்கிறேன். கண்டால் நல்லது. இல்லையானால் இங்கேயே யான்முடிவேன். நீயிலாமல் தனித்து இனி நான் வீடுதிரும்பப்போவதில்லை. இது உறுதி. (பாறையின் ஓர்புறமிறங்கி, அங்குக்காணாமல், வேறு ஓரிடம் சென்று அங்குமடிகளைக் காணாமல், மற்றும் மரம் செடிபுதர்களிலும் அவர்களைக் காணாமல் பாறை யேறி) இஃதென்ன விந்தை? சிறிது நேரத்திற்கு முன்பு குழலோசை கேட்டது. இன்னுமவர்கள் இங்கே வந்ததற்குப் பலவித அடையாளங்களிருக்கின்றன. ஆகிலும் காணமுடியவில்லையே? இங்கிருந்து அவர்கள் மந்திரத்தால் அந்தரத்தில் மறைந்து விட்டனரோ? பலநாள் மழையின்றி வெயிலால் வாடியகொடி முகிலொலிகேட்பதுபோல நற்செல்வனுடைய இனியசொல் கேட்டேன். ஆனால் நப்பின்னை மின்னலுடன் அம்முகில் எங்கோ சென்றுவிட்டது. இஃதென் ஊழ்வினைப்பயன்போலும்!. இனி யென் சகிகள் கண்டால்தான்கண்டது. நான் அவர்கள் அமர்ந்த இப்புண்ணியப்பாறையில் உட்கார்ந்துகொள்கிறேன். (உட்காருகிறாள்)

[நப்பின்னையும் கண்ணனும் ஒளிந்த இடத்திலிருந்து பார்க்கின்றனர்]

நப்பின்னை:— நாதா! தங்களுக்கு இது நியாய

மில்லே. ஐயோ! என்ன பாடுபடுகிருள்? இவள் தாபந் தணியத் தங்கள் தரிசனத்தைக் கொடுங்களேன்.

கண்ணன்:— மான் விழியாய்! நின் தோழியின் மிரண்டிருண்ட கண்களின் அழகை இப்பொழுது பார். இந்த வாவியில் பாய்ந்தோடும் கயல்களால் மிளிரும் குவளைகள்தான் இவள் கண்களுக்கு நிகராகுமா? இவளது அகன்ற கண்ணகத்தில் கண்ணீர் அலமருநின்றதைப்பார். இந்நிலையை வாழ்த்துக்கூறிப் பார்த்திருப்பதா? அல்லது தர்சனம் கொடுத்துக்கலைத்துவிடுவதா? நீயே கூறு.

தலைவி:— (பெருமூச்செறிந்து) இரக்கமேலொன்றுமிலாதாய்! உலங்குண்ட விளங்கனிபோல், என் உள்ளெலியப் புகுந்து என்னை ஏன் வாதை செய்கின்றனை?

கண்ணன்:— என் இளங்கிளியே! உன் தோழி என்ன சொல்லுகின்றனள். கேட்டனையா? அவள் என்னை இவ்வளவு கடிந்து கூறிடினும் அதுவும் எவ்வளவு மதுரக்கொழுஞ்சாருயிருக்கிறது பார். மென்கிளிபோல் மிக மிழற்றும் சொற்களில் சினங் கலந்தாலும் ஓர் இனிமைதான்!.

தலைவி:— ஆஹா! கஷ்டம் என்ருல் கடிதில் தொடரும்போலும்! நாமவனை மறந்து சிறிது வருத்தமில்லாமலிருப்போமென்ருல் முடிகிறதா? கருவிளையொண்மலர்காள்! காயாமலர்காள்! நீங்களுமா என்னை பாதிக்கவேண்டும்? நான் உங்களுக்கு என்ன கெடுதல்

செய்தேன்? அந்தக் கள்வனின் உரு ஒளிக்காட்டி என்னை நீங்கள் துன்புறுத்துகிறீர்களே? எதற்காக? எனக்கு உய்யும் வழிக்கொன்று உரைக்கக்கூடாதா?

நப்பின்னை:— நாதா! தங்களுக்கு இரக்கமில்லையா? அரிசினத்தால் பெற்ற தாய் அகற்றிடினும் அவள்தன் பாலமுதத்தை நினைந்து தவழ்ந்து தளர்நடை வந்து காலைக்கட்டி யழும் குழந்தையின் குரல்போல இவள் தீனக்குரல் மனதை உருக்குகின்றதே.

கண்ணன்:—நங்காய்! இவள் உண்மையன்பு உள்ளத்தை உருக்குகின்றதுதான். எனினும் சிறிது பொறுத்து இன்பமூர்த்தியான இவளைச் சேருவோம்.

தலைவி:— ஐயோ! எவருக்கும் மெய்யனல்லாத உன்தன் பொய்யைக்கேட்டு நான் ஏன் வந்திருக்க வேண்டும்? என்னை வருக எனக் குறித்திட்டு ஏன் நீ மறைந்தாய்? இற்றை யிரவிடை என்னை நீ அகன்று போனால், என்றும் என் பக்கம் வரக்கூடாது. இது உறுதி.

கண்ணன்:— (தனியாக) என்னால் எப்படி அகல முடியும்?

தலைவி:— ஓ கொடிய கடிய போட்கனே! நீ யிப்பொழுது இல்லாமல் வேறு எப்பொழுது வந்தாலும் பயனென்ன? நீ என்னை ஏற்றுக்கொள்ள விரும்பாவிடினும் என் முகம் நோக்கிப்போ என விடை தந்தாலு

மதுவும் மிக நல்லது. முடிந்து இடர் தீரவாவது அப் பொழுது முடியும்.

நப்பின்னை:—நாதா! இனித் தாங்கள் அரை நிமிடமும் தாமதிக்கக்கூடாது. அவள் தாபத்தைச் சீக்கிரம் தணியுங்கள். இல்லாவிட்டால் நான் போய்த் தாங்களிருக்குமிடத்தை யவளுக்குக் காட்டிவிடுவேன்.

கண்ணன்:— ஆம். இனி நாம் தாமதிக்கக் கூடாது.

தலைவி:— ஐயோ! என்ன கஷ்டம்? இப்பஞ்ச மகாபாதகர்கள் சேர்ந்து என்னைப் படுத்தும் பாட்டை நான் எப்படித் தரிப்பேன்? இப்பாதகர்களுக்கு என் பெருமாமாயன் நிறம் எப்படிக் கிடைத்தது? என்னைத் துன்புறுத்துவதற்காகவே அந்தப்புறம்போல உள்ளும் கரியான்தன் நிறத்தை யிப்பாதகருக்கு ஈந்தான் போலும்!

பைம்பொழில்வாழ் குயில்காள்! மயில்காள்!
[ஒண்கருவிளைகாள்!
வம்பக்களங் கனிகாள்! வண்ணப்பூவை
[நறுமலர்காள்!
ஐம்பெரும் பாதகர்காள்! அஞ்சலென் றென்முன்
[வராத
எம்பெருமாமாயன் நிறம் உங்களுக்கு என்செய்வதே?

ஆ்ந்தோ! நீங்கள் நாழிகை கூறிட்டு முறைவைத்து இவ்வேழையைத் தகர்த்துகிறீர்களோ? இவ்வேளையில் என்னைத் தகர்த்துவதற்குக் கருவிளையின் முறை போலும்! நன்று நன்று. தீமை செய்யும் தலைவ! இனியும் எவ்வளவுதான் தீம்புசெய்யப்போகிறாய். பார்ப்போம். இப்படியாவது உயிரை விடுவேனே தவிர இதைவிட்டு இனிப்புடையும் பெயரகில்லேன்.

கண்ணன்:— (மெல்ல தலைவியின் பின்னண்டை வந்து கண்ணைப் பொத்துகிறார்).

தலைவி:— (திடுக்கிட்டு) யாரிது?

கண்ணன்:— பதில் கூறாமலிருக்கிறார்.

தலைவி:— பதில் சொன்னால் பவளமுத்து உதிர்ந்திடுமோ? விளையாட இதுதான் தருணமோ?

கண்ணன்:— (தன் ஸ்வரத்தை மாற்றிக்கொண்டு) நான்தான். இதுதான் விளையாடத் தருணம்.

தலைவி:— (தனக்குள்) இது யார் குரல்? தெரியவில்லையே? (வெளிப்படையாக) விளையாடுவதற்கு நல்ல தருணம்பார்த்தாய். நீ யார்? உன் பெயரைச் சொல்லு. நான்தான் என்றால்?

கண்ணன்:— நீ யார்? என்றால்?

தலைவி:— (கடுஞ்சினத்துடன்) இதென்ன? புண்ணிற் புளிப்பெய்தால் ஒக்கும் தீமை! இப்படிக்

குறும்பு செய்யும் நீ யார்? விடு முதலில் உன் கையை. (தனக்குள்) யாராயிருக்கக்கூடும்? நம் தலைவன் தீண்டும் உணர்ச்சியுண்டாகின்றது. சினத்தை வாவேற்பினும் மனமிடந்தாவில்லையே?

கண்ணன்:— குறும்புசெய்யும் நான் குறும்பன்.

தலைவி:— போதும், போதும், நின்கையை விடு. (தன் கையா லவர்கையை யெடுக்கிறாள்).

[கண்ணன் கையைவிட்டுப் பாறையடியில் குதித்து ஒளிந்துகொள்கிறார். தலைவி கண்ணைக் கசக்கிக்கொண்டு எழுந்து கீழிறங்கித் தேடுகிறாள். இதற்குள் ஆய்ச்சியர் கண்ணனைக் காணாமல் வருத்தத்துடன் திரும்புகின்றனர்].

ஆய்ச்சியர்:— நாங்கள் எங்கும் தேடினோம். காணவில்லையே? என்ன செய்வது?

தலைவி:— நான் இப் பாறையில் உட்கார்ந்திருக்கும்போது யாரோ என் கண்ணை வந்து பொத்தினார். நான் திரும்பிப் பார்ப்பதற்குள் ஒளிந்துகொண்டுவிட்டார். ஒருவேளை அவரே கண்ணனாயிருக்கலாம் என்று நினைக்கிறேன். அவ்வித உணர்ச்சி எனக்கு உண்டாயிற்று. ஆகையால் நாமிங்கேயே நன்கு தேடுவோம். வாருங்கள்.

நப்பின்னை:— எங்கே கீழே குதித்த என் நாதனை? (சுற்றும் பார்த்துக் காணாமல்) ஓஹோ! அவன் என்னை

யும் ஏமாற்றிவிட்டனன் போலும்! என் தோழிகள் இங்குத் தேடிவருவதற்கு முன்பு நானே இவர்களிடம் சென்று உண்மையைக் கூறிவிடுகிறேன். (ஆய்ச்சியரி டம் செல்கின்றனள்).

கண்ணன்:— (முன் ஒளிந்த இடம் வந்து) என் பிராணநாயகி தன் தோழிகளிடம் போய்விட்டனள். அவர்களை ஏமாற்றுவதை யிவள்மட்டும் பார்த்திருந்தா ளன்றோ? இப்பொழுது இவளையும் ஏமாற்றுகிறேன். என் பிராணநாயகியை என் கையா லலங்கரிப்பதற்காக, அவளது அணி, ஆடைப்பெட்டியை அவளுக்கும் தெரி யாமல் இங்கே கொண்டுவந்திருக்கிறேனன்றோ? அதைக்கொண்டு நானே பெண்கோலம் பூண்டு இவ் வேந்திழையார் குழாத்திடை நுழைந்தே இவர்களை நான் ஏமாற்றுகிறேன். (அவ்வண்ணமே செய்து கண்ணாடியில் தன்னைப் பார்த்துக்கொள்கிறார்). ஆஹா! மிகவும் எனக்குப் பெண்கோலம் பொருத்தமாயிருக் கிறது. நான் கண்ணன்தானென்று எனக்கே ஸந்தேஹ முண்டாகிறது. என் ஸௌந்தரியம் என்னையே மயக்கு கின்றதே! இவர்களை ஏன் மயக்காது? (மெல்லமறைந்து வந்து பெண்கள் கூட்டத்தோடு கலந்துகொள்கிறார்).

தலைவி:— (நப்பின்னையைக் கண்டு) தோழி! இஃதென்ன காரியம்? வேலால் துன்னம் பெய்தாற் போல் நீ யிருந்தும் அவனை அல்லல் விளைவிக்க வைத் தனையே. உள்ளே உருகி நைந்தவேனை உளளோ இலளோ என்னும் நிலையிலும் முகம் காட்டாத அக்

*கொள்ளை கொள்ளிக்குறும்பனை யெங்கே? என் கண்ணைச் சற்று நேரத்திற்கு முன்பு பொத்தியது யார்?*

நப்பின்னை:— *தோழி! நான் அல்லல்விளைவிக்கச் செய்வேனே? வேண்டாமென்று நான் மறுத்தும் அவன் நீபடும்பாட்டை மறைந்துபார்த்துக்கொண்டிருந்தனன். இனி இறைப்பொழுதும் முகம் காட்டாம லிருக்கக் கூடாது என்று நான் வற்புறுத்தியபோது அவனே வந்து நின் கண்ணைப் பொத்தினன். திரும்பப் பாறை யடியில் குதித்தவன் எங்குச் சென்றனனோ? காணோம். அவன் என்னையும் ஏமாற்றிவிட்டனன்.*

தலைவி:— *தோழி! இதென்ன மாயம்? இனி யென்று மிவ்விடம் வாரோம். அவன் நமக்கு ஆரா வமுதம்போல் தோன்றினாலும், பனியால் உள்ளுறையும் நெருப்பினை மறைக்கும் இச்சந்திரிகைபோல, உள்ளூர வேம்பேயாக வளருகிறான். ஆனாலும் வேம்பின்புழு வேம்பன்றி யுண்ணாததுபோல, அவனையன்றி நம் மனம் பிறிதொன்றைக் கனவிலும் கருதுவதில்லையே. நாம் என்ன பண்ணுவோம்! நம்மைப்போல அவனு மிருந்தால்தானே? பொய் சொல்லி ஏமாற்றுவதே அவன் சுபாவமாகிவிட்டது.*

கருமலர்க் கூந்தல் ஒருத்தி தன்னைக்
கடைக்கணித்து ஆங்கே ஒருத்தி தன்பால்
மருவி மனம் வைத்துமற் றொருத்திக்கு
உரைத்து ஒரு பேதைக்குப் பொய்குறித்து

புரிகுழல் மங்கை ஒருத்தி தன்னைப்
புணர்வ னவளுக்கும் மெய்ய னல்லன்
மரு திறுத்தான் தன் வளர்த்தியூடே
வளர்கின்றதால் அவன் மாயை தானே.

கண்ணன்:— (புன்முறுவலுடன்) *தனியாகத் தன் தலையை அசைக்கிறார்.*

நப்பின்னை:— *ஆம். சகி! கூடவே இதுவரையிலு மிருந்த என்னையும் உங்களைப்போல அவன் ஏமாற்றி விட்டானே அவனை யெப்படி நம்புவது?*

ஒருத்தி:— *(நப்பின்னையை நோக்கி) நீங்கள் ஒளிந்துகொண்ட இடம் எது? ஒரு வேளை அங்கேயே அவன் இப்பொழுதும் வந்து ஒளிந்துகொண்டிருக் கிறானோ என்னவோ?*

தலைவி:— *எது? ஒருக்காலுமங்கு இருக்கமாட் டான். அங்கிருந்துதானே நம் தோழி நப்பின்னை வந்திருக்கிறாள். எனினும் அவன் அமர்ந்த அவ்விடத் தைக்கண்டாவது சிறிது களிக்கலாம். போவோம் வாருங்கள்.*

*[நப்பின்னை முன்செல்ல எல்லோரு மவர்கள் ஒளிந்துகொண்ட விடத்திற்குச் செல்கின்றனர்].*

கண்ணன்:— *(வேறாக நின்று) ஆஹா! இக் காட்சியே அழகான காட்சி. என்னைத் தேட என் கூடவே இருந்த நப்பின்னை செல்கிறாள்! இப் பெண்*

களோ—பாவம் கூடவே கலந்துவரும் என்னைக்கூடத் தெரிந்துகொள்ள முடியாதபடி அவ்வளவு சித்தப்பிரமை கொண்டிருக்கிறார்கள். என்னை நானே கண்ணன் தானோ என்று ஸந்தேஹிக்கிறபோது, இவர்கள் என்னை எங்ஙனம் தெரிந்துகொள்ளப்போகிறார்கள்? (மறுபடி கூட்டத்தோடு கலந்துகொள்கிறார்).

நப்பின்னை:— நாங்கள் இங்கேதான் ஒளிந்து கொண்டோம். அவன் நீ படும்பாட்டை இங்கிருந்து தான் எட்டிஎட்டிப் பார்த்தான்.

தலைவி:— (கீழே கிடந்த அவனது புல்லாங் குழலை எடுத்து) சகிகாள்! அம்மாயனை நாம் எவ்வளவு முயற்சித்தாலும் காணமுடியாது. அவனைக் காண்ப தற்கு உபாயம் அவனுடைய பொருளேதான். ஆகை யால் அவன் இஷ்டப்பட்டபோது வந்துகொள்ளட்டும். அவனுடைய புல்லாங்குழல் கிடைத்திருக்கிறது, அது வரை நாமாறியிருக்க. நான்தான் கண்ணன். இதோ என் பிராணநாயகி நப்பின்னை. நாங்களிருவரும் அவ னிருந்ததுபோலவே இப்பாறையில் உட்கார்ந்துகொள் வோம். நான் குழல் ஊதுவேன். நீங்கள் எல்லோ ரும் முன்போல் சிறிது தூரத்திலிருந்தும் ஓடிவர வேண்டும். பின்னர் நாம் இப்பொழுது கண்ணனைக் கண்டுபிடித்தால் என்னென்ன செய்வோமோ, அதை யெல்லாம் என்னிடத்தில் நீங்கள் செய்யவேண்டும். சரிதானே என் யோசனை?

சகிகள்:— ஆம். இது நல்ல யோசனை. நாம் இப்படிச் செய்தால்தான் பிரிவாற்றாமையைச் சிறிதாவது பொறுத்துக்கொள்ளமுடியும்.

கண்ணன்:— (தனக்குள்) நாமிவர்களோடு ஓட்டம் பிடிப்பதா? அல்லது இவளோடேயேயிருந்துவிடுவதா? (யோசித்துத் தலைவியண்டை வந்து) சகி! அவனைப் பிரிந்து நான் போர க்லேசப்படுகிறேன். என்னால் ஓட இயலாது. ஆகையால் நான் நீயாக (ஆய்ச்சியர் - தலைவியாக) இருந்துவிடுகிறேன்.

தலைவி:— (ஆச்சரியத்துடன் பார்த்தவண்ணம் தனக்குள்) இவர் யார்? கன்னங்கரியமேனி என்னன்பனின் சாயைக்குச் சமமான யோகம் பெற்றிருக்கிறதே! முன்பின் தெரியாதவராயினும் இவரைக் கண்டதும் என் மனம் உருகுகிறது. காரணமென்ன? இவரும் நம்மைப்போல அவன்தன் பிரிவாற்றாதவராம். இவரையு மிங்கு அவன் வரக்கூறினன்போலும் (வெளிப்படையாக) நீர் யார்? எனக்குத் தெரியவில்லையே?

கண்ணன்:— என் பெயர் “கிருஷ்ணை”. எனக்கு அயலூர். இப்பொழுதுதான் இவ்வூரில் கலியாணம் நடந்தது. இன்று பகலில் நம் ஈசன் பீதக ஆடை உடை தாழப் பெருங்கார்மேகக் கன்றேபோல், எங்கள் வீதியார வந்தான். வரும் அம்மணிவண்ணனிடம் என் மனம் குடிகொண்டுவிட்டது. அவனும் என்நிலைமையறிந்து இன்று இரவு உங்களோடு தோட்டத்திற்கு

வந்து கலந்துகொள்ளுமாறு கூறினேன். நான் பொட்ட (சடக்கென)ப் போய்ப் பட்டுடுத்தி யணி பூண்டுப் புறப் பட்டு வந்தேன். இங்கு அவனைக் காணேம். அவன் பிரிவாற்றாமையைப் பொறுத்துக்கொள்ள நீ கூறிய யோசனை சால நல்லது. நீ கண்ணனானால் கண்ணனுக்கு நீ போல உனக்கு ஒரு தலைவி வேண்டுமன்றோ? அவ ளாக நான் இருக்கிறேன் என்கிறேன்.

ஒருத்தி:— ஆம். இவள் அசலூர்ப்பெண். பத்து தினங்களுக்குமுன்னர்தான் கலியாணம் நடந்தது. கண்ணன் நிலவரையில் அடைபட்டிருந்ததால் நாம் எல் லோரும் கலியாணத்திற்குப் போகவில்லை.

கண்ணன்:— (தனக்குள்) நல்லவேளை. இங்கே வாராத ஒரு புதுப்பெண்ணின் பெயரைச் சொல்லியது நல்லதாயிற்று.

நப்பின்னை:— சகி! நந் தலைவனைப்போலவே நமது சகி கிருஷ்ணையுமிருக்கிறாள் பார்.

தலைவி:— ஆம். நான் பார்த்த உடனேயே நினைத்துக்கொண்டுவிட்டேன். (கிருஷ்ணையையே கூர்ந்து பார்த்துக்கொண்டிருக்கிறாள்).

நப்பின்னை:— சரி. சகிகாள்! நீங்கள் போய் நாங்கள் குழலூதிய பின்னர் வாருங்கள்.

[ எல்லோரும் செல்கின்றனர். இம் மூவரும் பாறைமீது அமருகின்றனர்].

தலைவி:— கிருஷ்ணு! நீ யின்றுதான் முதன்முத லில் அக்கள்வன் வலையில் அகப்பட்டனையோ?

கிருஷ்ணு:— ஆம். இன்றுதானே அவன் விடு தலை பெற்றான்.

நப்பின்னை:— ஒருவேளை அவனைக் கண்டமாத்திர லேயே தளர்ந்துவிட்டனையே? எப்பொழுது மவனையே வாரிப்பருகும் நாங்கள் என்ன பாடுபடுவோம்!

தலைவி:— சகிகாள்! நான் கிருஷ்ணனுகப் பாவித் துக் குழ லூதுகிறேன். நீங்கள் ஆளுக்கு ஒருபக்கம் என் னருகே அமருங்கள். (இருவரும் அருகே அமரு கின்றனர்).

கிருஷ்ணு:— நாத! குழலோசை குழந்தைகளின் மழலைச் சொற்களைவிட இனிதானது. அதிலும் குழ லின் தொளையில் விரல்களை விரவி, நின் அதா அமிரு தத்தை ஊட்டியபின் கேட்கவேண்டுமா? (தலைவியின் தொடையோடு தொடையிடித்து நெருங்கி உட்காரு கிறார்.)

நப்பின்னை:— ஆம். நிதமும் அதாமிருதத்தைப் பருகும் பாக்கியம் இக்குழலுக்குக் கிடைத்துள்ளது.

கிருஷ்ணு:—பிராணநாயகி! இல்லையில்லை—பிராண நாயக! நினது அதாமதுவை முதன்முதலில் எனக்குப் பருகத் தாவேண்டும். இல்லையானால் குழலின் இசை யின்பவெள்ளத்தில் நான் தரித்து நிற்கமுடியாது.

தலைவி:— (தனக்குள்) இதென்ன ஆச்சரியம்! கண்ணைப் பொத்தும்பொழுது உண்டான உணர்ச்சி கிருஷ்ணை என்மேலிடித்து உட்காரும்பொழுது உண்டாகிறது! "பிராணநாயக," என்று அழைப்பதற்குப்பதிலாக ப்ராணநாயகி! என்று அழைத்தது எனக்குப் பெரிதும் ஸந்தேஹத்தை உண்டாக்குகின்றது. ஒருவேளை கிருஷ்ணன்தான் கிருஷ்ணையாக வந்திருக்கிருளே! பொறுத்துப் பார்ப்போம். (வெளிப்படையாக) பிராணநாயகி என்று கூறினையே? இப்படி யாரையேனு மிது வரை யழைத்ததுண்டா?

கிருஷ்ணை:— (தனக்குள்) ஏது? அகப்பட்டுக் கொண்டு விட்டேனே. (வெளிப்படையாக) இல்லை. நான் என்னைக் கண்ணன் என்று நினைத்துக்கொண்டு விட்டேன்.

[தலைவி குழல் ஊதுகிருள், கிருஷ்ணையும் நப்பின்யும் மெய்மறந்து கேட்டுக்கொண்டிருக்கின்றனர். ஆய்ச்சியர்கள் ஓடி வந்து குழலோசை கேட்டு நிற்கின்றனர்].

தலைவி:— (ஆய்ச்சியர்களைக் கண்டு) என்னுயிர் அனைய நங்கைமீர்! வாருங்கள். வாருங்கள். (சடக்கென எழுந்து மூவருமக் கூட்டத்தோடு கலந்துகொள்கின்றனர்).

கிருஷ்ணை:— நாத! எனது தோழிகள் எல்லோரும் வந்துவிட்டார்கள். பட்டாநிலா க்காய்கிறது.

நமக்கு உண்டாகும் ஆநந்த வெள்ளத்திற்கு ஓர் போக்கு விடவேண்டும். இல்லாவிட்டால் உள்ளத்தைப் பிய்த்துக்கொண்டு புறப்பட்டுவிடும்.

தலைவி:— போக்குவிடுவதற்கு வழியென்ன?

கிருஷ்ணை:— ராஸக்ரீடை விளையாடலாம்.

தலைவி:— ஆம். அதுதான் தக்கவழி.

நப்பின்னை:— கிருஷ்ணை! இன்றுதானே நீ யம் மணிவண்ணனைக் கண்டதாகக் கூறினை. இவ்விளையாட்டு விஷயத்தை நீ எப்படித் தெரிந்துகொண்டாய்?

கிருஷ்ணை:— இன்று நான் காணும்போது, இவ்விளையாட்டின் விபரத்தைக் கூறி, இதில் தனக்கு மிகவும் பிரியம் என்றும், இன்று இதுதான் விளையாடப் போவதாகவும் கூறினான்.

நப்பின்னை:— ஏமாற்றுவதில் நந்தலைவனை விஞ்சியவர் யாருமில்லை.

(தலைவி இரண்டுபெண்களுக்கு ஒவ்வொரு கிருஷ்ணனாகப் பொறுக்குகிறாள்).

நப்பின்னை:— ராஸக்ரீடையில் நான்தான் கண்ணனாயிருப்பேன்.

தலைவி:— சரி. கிருஷ்ணையும் நானும் உன் பக்கத்திலிருக்கிறோம்.

[எல்லோரும் வட்டமாயிருந்து விளையாடுகிறார்கள். அப்பொழுது கிருஷ்ணாவின் அரையிலிருந்து துகில் நழுவ, பீதகவாடையை நப்பின்னை கண்டுவிடுகிறாள்]

நப்பின்னை:— (தனக்குள்) கிருஷ்ணா அணிந்திருக்கும் அணி, ஆடைகள் எல்லாம் என்னுடையவை போலிருக்கின்றன. முன்னமே நான் சிறிது ஸந்தேஹங் கொண்டேன். அதற்கேற்றாற்போல் அரையில் பீதகவாடை துலங்குகிறது. உண்மையில் இவள் கிருஷ்ணா இல்லை. கண்ணன்தான். எப்படியாவது இவ்வுண்மையைச் சீக்கிரத்தில் தெரிந்துகொள்கிறேன்.

[ராஸ க்ரீடை முடிகிறது]

தலைவி:— இனி நாம் என்ன செய்யலாம்?

நப்பின்னை:— (தனக்குள்) ஜல க்ரீடை செய்ய வேண்டுமென்று சொல்வோம். அப்பொழுதுதான் கிருஷ்ணாவின் உண்மை தெரியும். (வெளியில்) கயல் கண்ணாய்! இந்த வாவியில் நாம் ஜல க்ரீடை செய்வோம்.

தலைவி:— ஆம். அங்ஙனமே செய்வோம்.

கிருஷ்ணா:— (தனக்குள்) இப்பொழுது நாம் எப்படித் தப்பிப்பது? துகில் களைந்து கரையில் வைக்க வேண்டியதாயிருக்குமே? (வெளியில்) முதலில் தலைவி கண்ணாயிருந்தாகிவிட்டது. நப்பின்னையும் அவ்

வாசையை நிறைவேற்றிக்கொண்டாள். இப்பொழுது நான்தான் கண்ணனயிருப்பேன்.

நப்பின்னை:— (தனக்குள்) உண்மை விளங்கி விட்டது. அக்கள்வனே என் நகைகளைக் களவாடி இக் கோலம் கொண்டிருக்கிறன். அவனை யிப்பொழுது நான் தப்பிக்கவிடப்போவதில்லை. (வெளியில்) இல்லை. இல்லை. நான்தான் கண்ணனயிருப்பேன். அடிக்கடி மாறுவதானல் சுவை குன்றிப்போம்.

கிருஷ்ணை:— முறைப்படி நான்தான் கண்ணை யிருக்கவேண்டும். மேலும் நான் புதியவள். துகில் களைவது என்றால் எனக்கு வெட்கமாயிருக்கிறது.

தலைவி:— சகி! கிருஷ்ணைதான் கண்ணனயிருக் கட்டுமே. பேரும் உருவும் அவனைப்போலவே இவ ளுக்கு மிருக்கிறது. ஆனல் துகில்பறித்து மரமேறத் தெரியுமா?

நப்பின்னை:— தெரியாது. புதியவளான கிருஷ்ணை வுக்குக் கண்ணனைப்போல நடிக்க எப்படித் தெரியும்?

தலைவி:—ஆம். அது தெரியாமல் எப்படிக் கண்ண னயிருக்க முடியும்?

கிருஷ்ணை:—எனக்கு அதெல்லாம் தெரியும். நான் நடிப்பதைக் கண்டால் நீங்கள் என்னையே அவனைக் நம்பி விடுவீர்கள்.

நப்பின்னை:— நீ யென்ன கூறினாலும் உன்னை இக் கோலத்தோடு கண்ணனாக நடிக்கவிடப் போவதில்லை. இக்கோலத்தைக் களைந்து வா. உன்னைக் கண்ணனாக நம்புவோம்.

கிருஷ்ணா:— நான் எக்கோலத்தைக் களைந்து வரவேண்டும்?

நப்பின்னை:— இப்பெண் கோலத்தை.

கிருஷ்ணா:— நீயு மிப்பெண்கோலத்தைக் களைய வேண்டுமன்றோ? கண்ணனாக நடக்கவேண்டுமானால்.

நப்பின்னை:— உண்மையிற் பெண்மகளான நான் என் பெண்கோலத்தை எங்ஙனம் களையமுடியும்?

கிருஷ்ணா:— (கோபத்துடன்) சகிகாள்! கேளுங்கள். இவள்தான் பெண்மகளாம். நான் பெண்மகளன்றாம். ஆகில் நான் எதற்கு இங்குக் கண்ணனைத் தேடி வரவேண்டுமோ? நீங்களே விளையாடிக்கொள்ளுங்கள். என் பிராணநாயகன் வந்ததற்பின் யான் வந்துகொள்கிறேன். (வேகமாகச் செல்கிறாள்)

தலைவி:— (தனக்குள்) நப்பின்னை யேன் இவளைக் கோபித்துக்கொள்ளும்படி செய்கிறாள்? அக்கரியனையேயொத்த இவள்பக்கத்திலிருந்ததால் எனக்குஒரு வித உணர்ச்சியும், மகிழ்ச்சியும் உண்டாயிற்றே. இனி யென் செய்வேன்? (வெளியில்) கிருஷ்ணா! நீ யேன் கோபித்துக்கொள்கிறாய்? திரும்பி வா. நீயே கண்ணனாயிரு.

கிருஷ்ணு:— என் பெண்மையே பொய்யென்னும் சொல் வந்தபின் நானங்கு வரமுடியாது.

[இன்னும் வேகமாகச் செல்லும்போது, ஆடையின் தலைப்பு ஒரு கிளையில் மாட்டிக்கொண்டுவிடுகிறது. அவ்வமயம் தலைவி ஓடியோடிச் சென்று தலைப்பைப் பிடித்துக்கொள்ள, கிருஷ்ணு திமிறிச்செல்ல முயலுகிருள். அப்பொழுது நப்பின்னை வந்து தலைவியோடு சேலையைப் பலமாக இழுத்து உருகிவிடுகிருள். கிருஷ்ணு அரையில் பீதக ஆடையும், உடம்பில் பெண்கணணியும் திகழ, புன்முறுவலுடன் நிற்கிருர். எல்லோரும் ஆச்சரியத்துடன் ஒன்றுந்தோன்ருமல் அவனையே கண்ணுரக்கண்டு களிக்கின்றனர்.]

நான்காமங்கம் முதற்களம் முற்றிற்று.

சுபம்.



# மார்கழி நோன்பு

அல்லது

# ஸ்ரீ ஆண்டாள் திருமணம்.

## நான்காமங்கம் - இரண்டாம் களம்.

இடம்:— திருவாய்ப்பாடியில் ஓர் தெரு.

காலம்:— பின்மாலை.

[தலைவி வருகிருள்].

(வானத்தை நோக்கி) இம்மதி நிம்மதியின்றி எம் போன்ற பேதையரைத் துன்புறுத்தித் துள்ளி விளையாடினன். இவ்வமயம் அவனது வீழ்ச்சி காலம் நெருங்கிவிட்டது. இவ்வுலகினிற் சிலர் இளமையில் அளவிலாத் தீமைகள் புரிந்து, இறுதியில் நல்லவராவதுண்டு. அதுபோல் இருகாறும்பிடுக்கண் இழைத்த இத்திங்கள் அந்திவேளையில் என்தன் உள்ளம் குளிரச் செய்கின்றனன். ஒவ்வொருவரது நிலையும் மாறுவது இவ்வுலகியல்பே. கொழுநனைத்தழுவ யான் செல்ல இச்சந்திரன் பெரிதும் உதவுகின்றனனன்றே? இருளாயிருந்தால் அவ்வருள்நிறைக் கண்ணனைக் காண முடியுமா? ஆஹா! இவ்விரவு முழுதும் அவ்வரியனது போகம் என் தோழி நப்பின்னைக்குக் கிடைத்தது. கவிப் பந்தயத்தில் அவனை அவள் வென்றனளாம். அதற்காகத்தன்சரீரத்தையே அவளுக்குப் பரிசு

அளித்தனன். இவ்விரவில் அவள் ஒருத்திதான் சுகம் எய்தினள். எம்போன்றவர்கள் ஏற்கனவே பிரிந்த துன்பம் போதாது என்று, கூடி மறுபடியும் பிரிந்த தால் அந்தமின்றி வருந்தவேண்டியதாயிற்று. அநுப விக்க அநுபவிக்கக் காதல் தீ வளருமேயன்றி குறை யாது. அநுபவத்தைக் காதல் தீக்கு விறகு என்ன லாம். காதலின் மகிமை சொலற்கரிது! காதலருக்கு நடுவே ஒரு ஆறு அல்லது சமுத்திரம் என் ஒரு உலகமே இருந்தாலும் அவர்களைக் காதல்தேவதை சேர்த்து வைத்துவிடும். காதல்மந்திரம் தேவமந்திரத்தில் (வீட் டில்) ஒளிந்திருந்தாலும் காதலனைக் கடிதிற் சேர்ப்பித்து விடுகிறது. சிறையி லடைப்பட்ட என் காதலனை விடு வித்தது காதல்மந்திரந்தான். உண்மையில் காதலைப் பிரிக்கத் தெய்வத்தாலுமாகாது. சந்திரிகையைச் சந்திர னிடமிருந்து யாரே பிரிக்கவல்லவர்? நிறை ஆறு கடல் நோக்கிச் செல்வதுபோல் நாங்கள் அக்கருங்கடல் வண்ணனைக் கலந்து ஸத்தை (உள்ள பெண்தன்மை) பெறப்போகிறோம். என் தோழிகள் என்னை வந்து எழுப்புவதாகக் கூறினார்களே. இன்னும் ஏன் வர வில்லை. இது எவ்வளவு அரிய சீரிய நேரம்! இந் நேரத்தை வீணேவிட்டு வாளா இருக்கின்றனரே. இத் தகைய நேரம் கிடைப்பது எளிதோ? நாளென ஒன்று போல் காட்டிலும், இக்காலம் கழிந்தது கழிந்தது தானே? நாளை யிது மீளுமோ? நானே சென்று அவர் களை............

. .

. .

இதற்குள் சிலர் வருகின்றனர்.

தலைவி:— சகிகாள்! வாருங்கள், வாருங்கள். நீங்கள் வரவில்லையே என்று நினைத்தேன். வந்துவிட்டீர்கள். உங்களுக்கு நூறு வயதிற்குக் குறைவில்லை. வேண்டுமளவும் கண்ணனை அநுபவித்துக்கொள்ளலாம்.

வந்தவர்:— அக்கரியனைப் பிரிந்து வந்தது முதல் நீ உறங்கவேயில்லை என்பதை உன் சிவந்த கண்ணகம் சொல்லுகிறது. உன்னை நாங்கள் எப்படி முன்பேவந்து எழுப்பமுடியும்?

தலைவி:— ஏற்கனவே நெடுநாளாக அநுபவித்து வரும் விரஹத் தீயை, சிறிது நேரம் கூடிப் பிரிந்தது பெரிதும் வளர்த்துவிட்டது. நான் எப்படி உறங்க முடியும்?

வந்தவர்:— என்ன ஆநந்தத் தோற்றம்!

தலைவி:— எங்கே?

,, உன் முகத்தில். மேகத்தைக் கண்ட மயிலினங்களிடத்திற் போலவும், நிதிகண்ட தரித்திரனிடம் போலவும், தாய்கண்ட சேய்களிடம் போலவும் பரிதிகண்ட பங்கயத்திலும் சக்கிரவாக தம்பதிகளிடத்திலும் போலவும், அளவிட முடியாத ஆநந்தத்தோற்றம் நின்முகத்தில் தென்படுகிறது.

தலைவி:— ஆம். சகி! ஆநந்திக்கவேண்டிய நேரமிது. நான் மட்டுமல்ல, நீங்களுந்தான். சுக துக்கங்கள் நமக்குத் தனித்துக் கிடையா. அவை நமக்குப்

பொதுவானவை. நாம் முன் ஜன்மத்தில் என்ன நோன்பு நோற்ருேமோ? இத்தகைய அரிய சீரிய நேரம் கிடைக்கப் பெற்ருேம்.

தலைவி:— முன்ஜன்மத்தின் நோன்பின்பயனுகக் கூறும்படி இந்நேரம் என்ன சீர்மை பெற்றுள்ளது?

தலைவி:— கூறுகிறேன். ஸாவதானமாய்க் கேளுங்கள். பொதுவாக விடிவோரை. ஆதலால் மிகவும் கொண்டாடத்தக்கது. ஸாத்விகமான காலமிதுதான். என்? இத்திங்கள் முப்பதுமே ஸாத்விக காலந்தான். தேவர்களுக்கு உத்தராயணம் பகலாகும். அதற்கு முந்திய பிராம்ம முகூர்த்தமான (விடிவோரை) காலம் இத்திங்கள் முப்பதும். நாம் நோன்பு நோற்க ஆரம்பிக்கும் இந்நேரம் என்? இம்மாதமே ஏற்றமுள்ளது. அதற்கு ஐந்து காரணங்களுண்டு. முதலாவது மிகக் குளிர் மிகவெப்பம் இல்லாமல் நம் நாயகனைப்போலிருக்கும் யோகம். இரண்டாவது, தைமுதலாரம்பமாகும் தேவர்களுடைய பகலுக்கு முந்திய பிராம்ம முகூர்த்தமான ஸாத்விக காலமாயிருப்பது. மூன்ருவது, நம் ஈசனுக்கு நேசமான மாத மாதலால் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு உவப்பான காலம். (மாதங்களில் மார்கழியாகிறேன் என்று அவன் தன் நேசத்தை யிம்மாசத்தில் காட்டியிருக்கிருன்) நான்காவது, எல்லாப் பயிர்களும் பலிக்கும் காலமாதலால், நம்மனோரதமும் பலிக்கும் காலம். ஐந்தாவது, நாம் நமது நாதனை நண்ணி நலம் பெறுவதைப் பொருத விருத்தர் குளிருக்கஞ்சி வெளிப் புறப்படாத காலம்.

தலைவி:— நாம் நோன்பு ஆரம்பிக்கும்போது இத் தகைய மாதம் நேர்பட்டதே? இதுவே நம் காரியம் நிறைவேறுவதற்குத்தக்க அறிகுறி. நீ என்ன நினைக்கின்றனை?

தலைவி:— மாதம்மட்டுமா? பக்ஷமும் அதற்கேற்றாற்போல் நேர்பட்டிருக்கிறதே அதைப் பாருங்கள்.

,, பக்ஷத்திற்கு என்ன ஏற்றம்?

தலைவி:— இதை நான் கூறவேண்டுமோ? விண்ணைக்காண்மின். மீன் எனும் பூக்கள் பூத்த வானெனுஞ் சோலையில் த்விஜராஜன் (சந்திரன்) பூர்ணனாய் ரோஹிணியுடன் வாருணி (மேல்திசை, கள்ளுமாம்) சேவித்து விளையாடி மயங்குகின்றனன் அன்றோ? இதனால் சுக்கிலபக்ஷபூர்த்தி என்று உங்களுக்கு விளங்கவில்லையா? சுக்கிலபக்ஷத்தில் நற்காரியங்கள் செய்ய வேண்டுமாய்ச் சாஸ்திரங்கள் கூறுகின்றன. அதுவும் தெய்வாதீனமாய் நேர்பட்டது!

,, அப்படியா. மாதத்தைப்போல் பக்ஷமும் நேர்பட்டது நமக்கு எவ்வளவு ஆநந்தத்தை உண்டு பண்ணுகிறது!

தலைவி:— சகிகாள்! என்ன ஆனந்தம் பாருங்கள். இன்று நாளும் நன்னாள்.

,, (ஆச்சரியத்துடன்) நாளும் நல்லதா? எப்படி?

தலைவி:— சகிகாள்! மேகத்தால் ஆகாயம் மறை பட்ட நாளைப் பெரியோர் "துர்தினம்" என்பர். இன்று ஆகாயத்தைப் பாருங்கள். நிர்மலமாய் கன்னங் கரேலென்று நம் நாதனை ஒக்கும் யோகம் பெற்றிருக் கிறது. சந்திரன் தன் சந்திரிகையை மேகம் முதலிய தடங்கலின்றி அடங்க எங்கும் பரப்பும் இந்நாள் என் நன்னாளாகாது? முன்காலத்தில் மஹாவிஷ்ணு தேவர் களுக்குமட்டும் அமிருதம் கொடுத்ததாக நாம் கேள்விப் பட்டிருக்கிறோம். ஆனால் இன்று நாம் அக்காட்சியை நேரே அநுபவிக்கிறோம். ஆகாயமாகிற மாயன், சந்திர னாகிற வெள்ளிக்கிண்ணகத்திலுள்ள சந்திரிகையாகிற வெளுத்த அமிருதத்தை, முன்போல் வஞ்சகமில்லாமல் எல்லாருக்கும் சமமாகப் பங்கிட்டுக் கொடுக்கின்றனன். நம் கருத்துக்கு விருத்தரான (விரோதிப்பவர்) விருத்தர் களே (கிழவர்களே) கருத்தொன்றுபட்டுக் கண்ணனைக் கலந்து கொள்ளக் குறிப்பிட்ட இதுமிக நன்னாளா மன்றோ? மேலும் நம் நாதனே ஆதரவுடன் "என்னை வந்து எழுப்புங்கள், பறை தருகிறேன்" என்று குறிப்பிட்ட விது மிகமிக நன்னாள்தானே?

,, சகி! விடியப்போகிறது. நாம் செய்ய வேண்டியது யாது?

தலைவி:— நாம் இப்பொழுது நீராட வேண்டும்.

,, இப்பொழுது என்பில் இழை கோப்பது போலப் பனிவாடை ஈர்கின்றதே? எப்படி நீராடப் போகிறோம்?

தலைவி:— சகிகாள்! பயப்படவேண்டாம். நான் "நீராட்டம்" என்று குறிப்பிட்டது கண்ணன் கலவியைத்தான். கலவியைச் "சுனையாடல்" என்பது தமிழ் மக்களின் மரபு.

,, சகி! குளிக்கவென்று சொல்லாமல் "நீராட" வென்று கூறியதுகூட மரபுச்சொல்தானோ?

தலைவி:— (நகைத்து) பரிஹஸிக்கிறீர்களா? கணவனைக் கௌரவிப்பது பெண்டிர் கடமை. கணவனைச் சேர்ந்தோரையும் கௌரவிக்கவேண்டும். இன்றேல் கணவனையே அகௌரவப்படுத்தியதுபோலாகும். நீங்கள் என் தோழிகளாயினும் என் ஈசனிடம் பாசம் வைத்தவராதலின் குளிக்கவென்று கூறாமல் "நீராட" என்று மரியாதைச்சொற்கொண்டு கூறினேன்.

,, இந்நோன்பிற்சேர சில புதிய பெண்கள் ஆசைப்படுகிறார்கள். அவர்கள் இதிற்சேர்ந்துகொள்ள ஏதேனும் யோக்யதை தேடிக்கொள்ளவேண்டுமோ?

தலைவி:— இதென்ன விந்தை! நாம் எல்லாம் என்ன யோக்கியதை தேடிக்கொண்டோம். ஆசை ஒன்றுதான் இதற்கு வேண்டுவது. ஆகையால் இப்பொழுதே அவர்களை அழைத்துவரவேண்டும்.

[ஒருத்தி போய் மற்றும் சிலருடன் வருகின்றனள்].

தலைவி:— வாருங்கள். வாருங்கள். எச்சமயத்திலும் கண்ணனைச் சேருவதற்கேற்றபடி அணிகளணிந்த

நேரிழையீர்! வாஞ்சேரிறையின் நீர்மைகளைமல்கும்படிச் சீர்மைபெற்ற இத்திருவாய்ப்பாடியில் வாழ்ந்து, கண்ணன் கலவியாம் செல்வமும், அதை யநுபவிப்பதற் கேற்ற பருவமும் பெற்ற நீங்களோ இந்நோன்பிற் சேருவதற்கு யோக்கியதை வேண்டுமா என்று கேட்பது? சீர்மல்கும் ஆய்ப்பாடிச் செல்வச்சிறுமியர்காள்! வாருங்கள், வந்து கூடுங்கள்.

வந்தவர்கள்:— சகி! நாம் சிறுமியராயிற்றே! இந்நோன்பை நிறைவேற்றுமாற்றலுக்காக ஏதேனும் யோக்கியதை தேடிக்கொள்ள வேண்டுமோ என்று ஸந்தேஹித்தோம்.

தலைவி:— சகிகாள்! நம்மாற் செயற்பாலதென்? நமக்கு ஆற்றல் ஏது? அது ஈசனிடம் உள்ளதன்றோ? கூரிய வேலேந்தும் கொடுந்தொழிலன் நந்தகோபன் குமாரனும், ஏரார்ந்த கண்ணியசோதை இளஞ்சிங்கமும், கார்மேனியனும், செங்கண்ணனும், கதிர் (சூரியன்) மதியம் (சந்திரன்) போல் முகத்தினனுமான ஸ்ரீமந் நாராயணனே நமது விருப்பத்தை நிரப்பித்தருவான். "நானே நாராயணன்" என்று நம் முன்பே தன் பரத்வத்தைக்காட்டும் நமது பர்த்தா, தானே நம் நோன்பை நிறைவேற்றித்தருவான். நாம் எதிலும் முயலவேண்டியதில்லை. முயலவும் கூடாது. பெற்றெடுத்த தாய், பசித்தழும் குழந்தையைத் தன் மார் போடணைத்துப், பாலூட்டி மகிழ்வதுபோல, அவனும் நம்நோன்பைத் தானே நிறைவேற்றி, ப்பாலே போன்ற

சீரில் (ஸௌந்தரியாதி குணங்களில்) பெரும் பசியான நம் பசியைப் போக்குவதற்கு முயன்றுகொள்ளுவான்.

தலைவி:— சகி! இப்பொழுது பறை (நோன்பிற்கு வேண்டிய வாத்தியம்) பெற என்று முயலுகிறோமே?

தலைவி:— உண்மையில் நாம் முயலவில்லை. முயலவும் கூடாது. ஊருக்கு ஒப்பப்பறை பெறப்போவதாகக் கூறுகிறோம். உண்மைப்பறை நமக்கு ஆத்மாவினுடைய ஸ்வரூபத்திற்கு (அடிமை - ஆத்ம ஸ்வரூபம்) ஏற்ற கைங்கரியம் (அடிமை). ஆத்மா அறிவுள்ளதாதலின் அதை (கைங்கரியத்தை) நாம் பிரார்த்திக்கக் கடமைப்பட்டிருக்கிறோம். இந்நோன்பினால் நமக்கு உண்மைப்பறை (கைங்கரியம்) கிடைக்கும். நம்மைத் தடுத்த கிழவர்களே புகழும்படி மழையும் பொழியும்.

மார்கழித்திங்கள்.........படிந்தேலோரெம்பாவாய்.

,, இந்நோன்பிற்கு அங்கமாக நாம் செய்ய வேண்டியதென்ன?

தலைவி:— அவனால் பேறு என்று இருக்கும் நாம் செய்யவேண்டியதொன்றுமேயில்லை. எனினும் இவ்வுலகம் ஒப்பச்செய்யவேண்டிய சிலவற்றைக் கூறுகிறேன். பரமபதத்தினின்றும் அண்டினவர் கூக்குரல் கேட்கும்படி பாற்கடலில் பையத்துயின்ற பரமனடி பாடவேண்டும். பரமனும் கண்ணனும் வேறன்றே? ஆகையால் நம் கற்பு நெறிக்குக் குறைவில்லை. பாடவே

வேறொன்றும் நம் மனத்திற்கு உவக்காது. விரித்துக் கூறுவானேன்? நம் மரபிற்கே விருப்பமான நெய் யுண்ணோம். பாலுண்ணோம். நாட்காலே (விடிவேரளை) நீராடிக்கண்களில் மையிட்டெழுந்தோம். நாம் மல ரிட்டு முடியமாட்டோம். செய்யாதன செய்யோம். நம் தோழிகள் மற்றவரையும் இந்நோன்பிற் கலந்து கொள்ளச் செய்யவேண்டும். இன்றேல் செய்யாதன செய்தோமாவோம். நாம் பிறருக்கு இன்னல் இழைக் கும் பொய்யுரைகளைச் சென்றோதோம். நாம் விளையாட் டாக ஏசிக்கொண்டதைக்கூட நம் நாதனிடம் சொல்லக் கூடாது. துர்ஜனங்களான ராக்ஷஸிகளுடைய தர்ஜனத்தையே (அதட்டல்) பிராட்டி பெருமாளிடம் (ஸீதை ராமனிடம்) கூறினாளில்லை. அப்படி நாம் நம் நாதனிடம் கூறினால் தீக்குறளைச் சென்று ஓதினோமா வோம். நற்பாத்திரமறிந் திடும் ஐயமும், பிரம்மசாரி சந்நியாஸிகட்கு இடும் பிச்சையும் அவர்கள் கொண்டு "ஆம், போதும்" என்னுமளவும் இல்லையெனாது கை நீட் டிக் கொடுக்கக் கடவோம். ஏன்? நம் நாதனையே உள்ள படி அறிந்து, ஒருவர் அவனையே நம்மிடம் வந்துகேட் டால், தடையிலாமல் கொடுக்கக் கடமைப்பட்டிருக் கிறோம். நம்மோடு இவ்வுலகமும் உய்யும் வழியிதுவே.

"வையத்துவாழ்வீர்காள்! நாமும் நம்பாவைக்குச்
செய்யும்கிரிசைகள்கேளீரோ பாற்கடலுள்
பையத்துயின்ற பரமனடிபாடி
நெய்யுண்ணோம் பாலுண்ணோம் நாட்காலேநீராடி

மையிட்டெழுதோம் மலரிட்டுநாம்முடியோம்
செய்யாதனசெய்யோம் தீக்குறளைச்சென்றோதோம்
ஐயமும்பிச்சையும் ஆந்தனையும்கைகாட்டி
உய்யுமாறெண்ணி யுகந்தேலோரெம்பாவாய் ”

,, அங்கத்தோடு இந்நோன்பின் விவரத்தைக் கூறியதுபோல, இதன் பயனையும் விரிவாகக் கூறு. கேட்டின்புறுகிறோம்.

தலைவி:— நம்முடைய பயன் கண்ணன் கலவியே. உலகைச் சாரும் பயனைக் கூறுகிறேன். இவ்வுலகம் விரும்பாவிடினும் கருணைகொண்டு எல்லோர் முடியிலுமடியிட்டு ஓங்கிஉலகளந்த உத்தமன்பேர்பாடி நாம்நம்பாவைக்கு (நோன்பிற்கு) நீராடினால், தீங்கின்றி நாடெல்லாம் திங்கள்மும்மாரிபெய்யும். நோய், பஞ்சம் முதலியன இருந்த இடம் தெரியாமல் பறந்து ஓடிப் போம். ஒன்பது நாள் வெய்யிலும் ஒரு நாள் மழையுமாகப் பெய்வதால், நம்மூரோடு இந்நாடெல்லாம் செந்நெற்பயிர்கள் திரிவிக்கிரமனுடன் போட்டியிடுவது போல ஓங்கிவளராநிற்கும். அந்நெற்பயிற்குள் நண்டு போக இடமில்லாமல் துள்ளிவிழாநிற்கும். அவ்வமயம் அந்நெற்பயிறாடே வளர்ந்த குவளைமலர்கள் அசைய, அவைகளில் உள்ள வண்டினங்கள் ஊஞ்சலில் பஞ்சணையிற்றுயிலும் அரசகுமரர் போல் உறங்காநிற்கும். மேலும், தயங்காமல் ஒருப்பட்டு ஒரே நிலையில் பருத்த மடுவினைப்பற்றி வாங்கினால், குடம் குடமாகப் பாலால் நிறைக்கும் வள்ளன்மை வாய்ந்த பெரும்பசுக்கள்

வாய்ந்தவராய் நம்மூராரெல்லாரும் நீங்காதசெல்வம் நிறைந்திருப்பார்கள். புண்ணியமுடியாகவரும் செல்வந் தான் நீங்கும். கண்ணன் கருணையடியாகவரும் செல்வம் நீங்காது. இவையெல்லாம் நமது நோன்பின் பயனும்.

“ ஓங்கிஉலகளந்த உத்தமன்பேர்பாடி
நாங்கள்நம்பாவைக்குச் சாற்றிநீராடினல்
தீங்கின்றிநாடெல்லாம் திங்கள்மும்மாரிபெய்து
ஓங்குபெருஞ் செந்நெலூடுகயலுகள
பூங்குவளைப்போதில் பொறிவண்டுகண்படுப்ப
தேங்காதேபுக்கிருந்து சீர்த்தமுலைபற்றி
வாங்கக்குடம்நிறைக்கும் வள்ளல்பெரும்பசுக்கள்
நீங்காதசெல்வம் நிறைந்தேலோரேம்பாவாய்”

,, நன்கு கூறினை. உன்னுடைய கருத்துள்ள அழகிய மொழிகளால் எங்களுக்கு மிகவும் ஆர்வம் பெருகிவிட்டது. இனித் தாமதிப்பானேன்? வா போகலாம்.

தலைவி :— நமது சகிகள் இன்னும் பலர் வரவில்லையே. போகும் வழியில் அவர்களையும் நாம் எழுப்பிக் கூட்டிக்கொண்டே போகவேண்டும். போவோம், வாருங்கள்.

[எல்லோரும் செல்கின்றனர்].

**நான்காமங்கம் இரண்டாம் களம் முற்றிற்று.**

**நான்காமங்கம் முற்றிற்று.**

சுபம்.

# மார்கழி நோன்பு

அல்லது

# ஸ்ரீ ஆண்டாள் திருமணம்.



## ஐந்தாமங்கம் - முதற்களம்.

ஆய்ப்பாடியில் வெட்ட வெளியான இடம்.

*பர்ஜந்யதேவன் பிரவேசிக்கிறான்.*

*ஆஹா! உபய விபூதிகளுக்கும் நிர்வாஹகனான ஸர்வேசுவரன் தன்னைத் தாழவிட்டு இடைமடவாரது பணியாளாய் இவ்வூரில் எழுந்தருளியிருக்கிறான் எனின் இவ்வூரின் பெருமையை யாவரே அறிவர்? ஸ்ரீமந் நாராயணனது நீர்மை இங்குப் பரமபதமளவும் அலை யெறியும்படி அன்றோ பிரவஹிக்கிறது! இடக்கை வலக்கையறியா ஆயர்சிறுமியர் எங்கே? உலகம் அனைத் தும் ஒடுக்கியாளும் ஒரு தனி நாதன் எங்கே? மறைய வரும் மறைமுடியும் அவ்விறைவனை இறைஞ்சியும் இன்னும் கழலிணை காணாது கலங்குகின்றனவே! அவன் கழலிணை காண எம்போன்ற தேவர்கட்குத்தான் ஓர் அளவுண்டோ? விண்ணுக்கு வெறுஞ்சுமையாக எம்போன்றவர்கள் இருந்தென்ன? போயென்ன? இவ்வூர்ச் சிறுமியரது சீர்மையில் எள்ளளவு கூட எம்மிடமில்லையே. இப் பெண்மணிகள் மழைப் புத் தேளான ஆக்கமில்லா எனக்காக நோன்பு நோற்*

கின்றனராம். உண்மையில் இந்நோன்பு கரியவள்ளலை நோக்கியதென்பதை யானறியாமலில்லை. எந்நோன்பும் அவனது ஆராதனமே என்பது புராதனச் சாஸ்திரங் களின் கருத்து. இம் மடந்தையரோ அவன் நாமம் மறந்தும் புறந்தொழா மாந்தராவர். உலகிற்கேற்ப இவர் கள் எனக்காக நோன்பு நோற்பதாகக் கூறுகின்றனர். இனி நான் வாளாவிருக்க இயலாது. மழை பொழிந் திடல்வேண்டும். இல்லாவிட்டால் மஹாபாகவதைக ளான இம்மடவார் மதிமுகம் மாறுபடும். படவே கருணைவள்ளலது உள்ளங் கலங்கிடும். நான் வெகு விழிப்புடன் இத்தையலாருக்குத் தக்க உதவி செய் திடல்வேண்டும். மானிடர்தானே என்று அவமதித்தல் கூடாது. அடியாராதலின் படி சாய்ந்து முடியால் வணங்கத்தக்கவர்களாகிறார்கள். அவர்களிடமே சென்று நான் செய்யவேண்டிய அடிமை யாது? என்று கேட்கிறேன்.

(ஆய்ச்சியர்கள் சிறிது தூரத்தில் பாடிக்கொண்டு வருகின்றனர்)

ஆஹா! இதோ அவர்கள் வந்துவிட்டனர். இவர் களுடைய கீதம் உள்ளத்தை நவநீதம் என உருக்கு கிறது. உலகிற் சங்கீதத்தைப்போல உள்ளங் கவரு வது ஒன்றுமே இல்லை. வேதங்களிற் கீதத்தாலேயே ஸாமம் சிறந்தது. சொல்லின் சுவைக்குச் சங்கீதம் உரைகல்லானது. ஸங்கீதமும் ஸாஹித்யமுமில்லாத வன் கொம்பும் வாலுமில்லாத ஓர் தாழ்ந்த பசுவாகிவிடு

கிறான். பசுவும் சிசுவும் பாம்பும்கூட ஸங்கீதத்தில் லயித்துவிடுகின்றன. எத்தகைய துன்பநிலையிலும் உள்ளத்தில் களிப்பினை ஸங்கீதம் பொங்கச்செய்யும். தங்கச் சங்கம்போன்ற இவர்தங் கண்டக்குரல், தீய அசுரர் நடலைப்பட முழங்கும் பாஞ்சசன்யத்தின் முழக்கம் பக்தர்தங் குழாத்தைப்போல என்னைப் பாவசமாக்குகிறது. ஸங்கீதமினிது! இவர்தங் குரல் இனிது! மேனியினிது! திருமால் திருநாம மினிது! வேறு இனி என்ன வேண்டுவது? (மெய் மறந்து பாவசமாக நிற்கிறான்).

(ஆய்ச்சியர் நெருங்கிவிடுகின்றனர்)

தலைவி:— (தனக்குள்) இங்கு நிற்கும் பெரியார் யார்? இவர் மெய்மறந்து பகவத்குணாநுஸந்தானம் செய்கிறார்போலும்! பெரியோர்களை வணங்காமற் செல்வது நன்மைகளுக்குப் பங்கமாகும். (வெளியில்) சகிகாள்! இப்பெரியோரை வணங்குங்கள், நம் நோன்பிற்கு இதனால் நன்மையுண்டாகும்.

(எல்லோரும் வணங்குகின்றனர்).

பர்ஜந்யன்:— (கீதம் நின்றுவிட்டதால் உடன் திடுக்கிட்டு) அபசாரம், அபசாரம். (கீழே விழுந்து ஸாஷ்டாங்கமாக வணங்குகிறான்).

தலைவி:— பெரியோய்! நீவிர் யார்? பரோபகாரமே புரியும் தங்கள் தரிசனம் எமக்கு என்நன்மை பயக்கப்போகிறதோ?

பர்ஜந்யன்:— (வணக்கத்துடன்) அம்மணி! என் பெயர் பர்ஜந்யன். மழைபொழிதேவன். உங்களுடைய நோன்பின் உண்மையை யானறிந்துகொண்டனன். அடியாரான உங்களைப் படிசாய்ந்து வணங்கி......

தலைவி:— அபசாரம். அபசாரம்.

பர்ஜந்யன்:— நான் எப்பொழுது என்னவிதமாக அடிமை செய்யவேண்டுமென்று கேட்கவந்தேன். நிய மித்தருள்க.

தலைவி:— பெரியோய்! சிறுமியரான எங்களைக் கணிசித்து வலிய உதவவந்த நினது வள்ளன்மைக்கு ஓர் அளவிலது. திருமால் திருமேனி யொக்கும் யோகம் படைத்த நினது வடிவை யாம் என்றென்றும் மற வோம். எங்களுக்கு உதவவேண்டியவிதத்தை வேண் டிக்கொள்கிறேன். கேட்டருள்க. ஓ ஆழி மழைக்கு அண்ணா! கடல்நிகர் கபீரனே! நின் வள்ளன்மையில் எள்ளளவும் உள்ளடக்கிடாமல், நல்லவர் தீயவர் பாரா மல் நாடடங்க எமக்காக மழை பொழிந்திடல்வேண்டும். இப்பொழுதே பொட்டென புறப்பட்டுப்போய் ஆழி யுள்புக்கு மணலே மீதமாம்படி நீர்முகந்துகொள்ள வேண்டும். எங்கும் பரந்து முகங்காட்டாமல் புரக்கு மரியைப்போல இராமல் உலகமனைத்தும் உன் பேர் முழக்கம் கேட்டுளம் மகிழுமாறு கர்ஜித்து, விண்ணில மேலாப்பு விரித்தாற்போல எங்கும் பரந்துகொள்ள வேண்டும். ஊழிமுதல்வனுருவம்போல் நின மெய் கறுத்திடல்வேண்டும். வலிமையும் பரப்பும் அழகும்

*வாய்ந்த தோள்களுடைப் பற்பநாபன் கையில் துலங்கும் ஆழிபோல மின்னி வலம்புரிபோல் நின்றதிர்க்க வேண்டும். அவனது சார்ங்கம் எனும் வில்விட்ட சர மழைபோல் விடாது மழை பெய்யவேண்டும். சரமழையால் அரக்கர் அடங்க அழிந்தனர். நீ யாரும் வாழ உலகினில் பெய்திடவேண்டும். இவ்விதம் செய்தால் நாம் நின் வடிவைப்போல இந்நன்றியையும் மறவாமல் மார்கழி நீராடுவோம்.*

"ஆழிமழைக்கண்ணே! ஒன்று நீ கைகரவேல்
ஆழியுள்புக்கு முகந்துகொடு ஆர்த்தேறி
ஊழிமுதல்வன் உருவம்போல் மெய்கறுத்து
பாழியந் தோளுடைப் பற்பநாபன் கையில்
ஆழிபோல் மின்னி வலம்புரிபோல் நின்றதிர்ந்து
தாழாதே சார்ங்கமுதைத்த சரமழைபோல்
வாழ உலகினில் பெய்திடாய் நாங்களும்
மார்கழி நீராட மகிழ்ந்தேலோ ரெம்பாவாய்."

பர்ஜந்யன்:— *அம்மணி! நன்று கூறினை, என் கடமைப்படி இதையெல்லாம் நான் செய்துமுடிக்கிறேன். நினது புகழ்ச்சிக்கேற்ப இது ஒரு பெரிய உதவியாமோ?*

தலைவி:— *பெரியோய்! இவை நின் கடமையின் பாற்பட்டன என்பதுண்மையே. ஆயினும் மழை வேண்டும்காலத்திற்செய்த இவ்வுதவி ஞாலத்திலும் மாணப்பெரிதாமன்றோ?*

பர்ஜந்யன்:— *ஆகட்டும். அப்படியே செய்கிறேன்.*

*(இருவரும் வணங்குகின்றனர். பர்ஜந்யன் செல்கிறான்).*

ஒருத்தி:— *என்ன ஆச்சரியம்! இப்பொழுது வந்தவர் யார்? மழைக்குத்தேவனுமே! ஒரு தேவதை சிறுமியரான நமக்கும் வலியவந்து உதவுகிறதே!*

தலைவி:— *நம் நாதனுக்காக நமக்கு உதவ வருகின்றனன். இதென்ன ஆச்சரியம்? நாம் பரிசுத்தராய் தூமலர் தூவி அவனைத் தொழுது, வாயினுற் பாடி, மனத்தினுற் சிந்திக்க, கழிந்த பாபங்களும், இனிவரும் பாபங்களுமே நெருப்பிட்ட பஞ்சுக்குவைபோல உருமாய்ந்துபோமே. இதிலென்ன அதிக விந்தை?*

மாயனை மன்னுவடமதுரை மைந்தனை
தூயபெருநீர் யமுனைத்துறைவனை
ஆயர்குலத்தினில் தோன்றுமணி விளக்கை
தாயைக்குடல் விளக்கம்செய்த தாமோதரனை
தூயோமாய்வந்து நாம் தூமலர் தூவித்தொழுது
வாயினுல்பாடி மனத்தினுல் சிந்திக்க
போயபிழையும் புகுதருவான் நின்றனவும்
தீயினில் தூசாகும் செப்பேலோ ரெம்பாவாய்.

*(மறுபடியும் பாடிக்கொண்டே செல்கின்றனர்).*

**ஐந்தாமங்கம் முதற்களம் முற்றிற்று.**

சுபம்.

# மார்கழி நோன்பு

அல்லது

# ஸ்ரீ ஆண்டாள் திருமணம்.



## ஐந்தாமங்கம் - இரண்டாம் களம்.

இடம்:— திருவாய்ப்பாடி சிறிய கோவில் பக்கம்.

[வஸிஷ்டர், வியாசர், சுகர், நாரதர் ஆக
நான்கு முனிவர்கள் வருகின்றனர்.]

வியாசர்:— *நாரதமகர்ஷே! இவ்வுலகில் மஹான்கள் வசிக்கும் எத்தனையோ புண்ணிய க்ஷேத்ரங்கள் இருக்கின்றனவே. அவைகள் இடக்கை வலக்கையறியா ஆயர்கள் வசிக்கும் இவ்வாய்ப்பாடிக்கு நிகராகுமா? ஸர்வேசுவரனது ஸௌசீல்ய ஸௌலப்ய குணங்கள் இங்கேதானே கங்குகரையின்றிப் பிரவஹிக்கிறது.*

நாரதர்:— *வாரீர் வியாசமா முனிவரே! நீர் சொல்லியதனைத்தும் ஸத்தியமே. முன்பு ஸர்வேசுவரன் அயோத்தியில் இஷ்டரான சிஷ்டருடன் பழகிப் போானந்தம் கொண்டனன். இப்பொழுது இங்கோ ஏதுமறியா இடையருடன் ஏகபோகனாய் (ஸௌசீல்ய குணம் (தாழ்ந்தவருடன் சேர்ந்து பழகுங் குணம்) நிறம் பெறும்படி நடந்துகொள்கின்றனன்.*

வியாசர்:— மஹர்ஷே! இதனால்தானே மற்ற அவதாரங்களைவிட இவ்வவதாரம் சீரியதாகிறது.

சுகர்:— தந்தை கூறுவதுண்மையே. மற்ற அவதாரங்களைவிட ராமாவதாரம் சீரியது. தன்னைத் தசரதகுமாரனான மனிதனாகவே எண்ணி அவன் காரியத்தை நடத்திப் போந்தான். இவ்வவதாரமோ அதைவிடச் சீரியது. ஜாதி, தொழில் முதலியவற்றில் தாழ்ந்தவர்களோடு கலந்து பழகுவதோடு தன் பரத்வத்தையும் பாராறியச் செய்வது இவ்வவதாரத்தில்தானே?

வஸிஷ்டர்:— இரண்டும் சீரிய அவதாரங்கள் தான்.

நாரதர்:— சுகப்பிரம்மர்ஷே! பரத்வம் என்றதினால் எனக்கு நினைவுண்டாகிறது. நெடுநாளாக எனக்குப் பரதத்வ நிர்ணயம்செய்ய வேண்டுமென்ற எண்ணமிருந்தது. காயோடு கனியுண்டு நெடுங்காலம் தவம் செய்தேன். பின்னும் பலவிடங்களில் அலைந்துழன்றேன். பின்னர் கண்ணபிரானால் எனது எண்ணம் நிறைவேறியது. அது முதல் இவ்வுண்மையெனக்குப் புலனாயிற்று. கண்ணன் கழலிணை நண்ணினால்

ஊன்வாட உண்ணாது உயிர்காவலிட்டு
உடலிற்பிரியாப் புலனைந்தும் நொந்து
தான்வாடவாடத்தவம்செய்ய வேண்டா

அது முதல் யான் யாருக்கும் இவ்வுண்மையை உபதேசித்து வருகிறேன்.

திண்ணன் வீடுமுதல் முழுதுமாய்
எண்ணின் மீதிய னெம்பெருமான்
மண்ணும் விண்ணு மெல்லாமுட னுண்டநங்
கண்ணன் கண்ணல்லதில்லை யோர்கண்ணே.

ராமாவதாரத்தி லித்தகைய வரலாறு ஒன்றினையும் காணோம். ஆகையால் அவ்வவதாரத்தைவிடவும் இவ் வவதாரந்தான் சீரியதென்று நானும் நினைக்கிறேன்.

வஸிஷ்டர்:— கண்ணனவதாரம் சீரியதுதான் எனினும் ராமாவதாரத்தைவிடச் சீரியதெனல் தகாது. ஸேதுபந்தனம் முதலிய அதிமாநுஷச் செயல்களினால் அவ்வவதாரத்திலும் பரத்வம் பாரறியப் பரவியிருக் கிறது. கேகயர்கோன் மகளாய்ப்பெற்ற அரும்பாவி சொற்கேட்டு, மெல்லிய அடிகளில் ரத்தம் பீறிட, நேரிழையும், இளங்கோவும் (ஸீதையும், லக்ஷ்மணனும்) பின்னே போக, நெடுங்கானமிடை நடந்து, புகழ் கொண்ட வல்வில் ராமனை இன்றும் மறைமுனிவர் நெஞ்சத்தாமரையிலிருத்தி அருத்தித்து வழிபடுகின்ற னர். ஆஹா! அக்கூற்றுத்தாய், கொடிய வனம் போ என்றிடவும் அச்சீதை மணாளன் சிறிதும் சீற்றமிலாமல் புன்முறுவலுடன் அதை ஏற்றுக்கொண்ட காட்சியா ருடைய மனதை உருக்காது? அப்போது தயரதன்

"பூமருவு நறுங்குஞ்சி புன்சடையாப்
புனைந்துபூந்துகில்சே ரல்குல்
காமரேழில் விழலுடுத்துக் கலனணியாது
அங்கங்கள் அழகுமாறி

ஏமருதோள் என் புதல்வன் யானின்று
சேலத்தக்க வனம்தான் சேர்தல்
தூமறையீர்! இது தகவோ? சுமந்திரனே!
வசிட்டனே! சொல்லீர் நீரே.”

என்று என்னை நோக்கிப் புலம்பிய புலம்பல் என் மனதை உருக்கிவிட்டது. தர்ம ஸ்தாபனத்திற்காக அவதரித்த அம் மைந்தனோ இப் புலம்பலைச் சிந்தனை செய்யாமல் தர்மத்தை ஸ்தாபிப்பதற்காகக் கானகம் சென்றான். தர்மஸ்வரூபி ராமன். குறும்பு செய்வானோர் மகன் கண்ணன். ஏகபத்நீ வ்ரதம் ராமனுடையது. பதினாறு மாயிரவர் தேவிமார் என்கிற கணக்கிலே பஹுபத்நீ வ்ரதம் கண்ணனுடையது. பெண்களைக் களவாடிய வாலியையும் ராவணனையும் வதை செய்தவன் அவன். வெண்ணெயையும் பெண்களையும் களவாடுபவனிவன். தான் சடைமுடி தாங்கிக் குரங்கினையு மரக்கனையும் கொன்று, அவர்தம் தம்பியர்க்குப் பொன்முடி சூட்டினனவன். தன் சொந்த மாமனான கஞ்சன் வயிற்றினில் நெருப்பு என நின்று அவனையே முடித்தவனிவன். இத்யாதி காரணங்களைப் பார்த்தால் ராமாவதாரத்திற்குத்தான் ஏற்றம் கூறவேண்டிவரும். ராமாவதாரத்தில் ராவணவதானந்தரம் பிரமன் சிவன் முதலிய தேவர்களும் அவனைத் துதிசெய்ததால் அவனே பரன் என்பதும் தெள்ளிதில் விளங்கும்.

வியாசர்-சுகர்:— தாத்தா! தாங்கள் ரவிகுல குருவாயிருந்தால் ராமன் தங்களுக்கே உரிய சொந்த

மாகிவிடுவனு? அவனிடம் எங்களுக்கு அபிமானம் அல்லது பக்தியில்லையா? அவனிடமுள்ள அபிமானம் இவ்வவதாரத்தின் உண்மைக்குணங்களைத் தங்களுக்கு மறைத்துவிட்டதுபோலும்!

வஸிஷ்டர்:— (புன்முறுவலுடன் தாடியைத் தடவிக்கொண்டே) குழந்தைகளே! ராமாவதாரத்தை விட இவ்வவதாரத்தில்தான் ஸெளசில்ய ஸெளலப்ய குணங்கள் நிறம் பெறுகின்றன என்று நீங்கள் நினைக்கிறீர்கள். என் அபிமானம் இவ்வுண்மையை எனக்கு மறைத்துவிடவில்லை. ஆகிலும் பாமரர் கருதுவதென்ன? கண்ணன் தீம்பன் கள்வன் பெண்களைக் கற்பழிக்கின்றனன். இவ்வவதாரம் இப்படி எல்லாம் எண்ண இடம் கொடுக்கிறது. ராம அவதாரத்தில் இப்படி நினைப்பதற்கு இடமில்லை. ஆகையால் இவ் விஷயத்தில் ராம அவதாரத்திற்கோர் தனி ஏற்றந்தான்!

நாரதர்:— சுவாமி! தேவரீர் சற்று ஆராய்ந்து கூறிடல் வேண்டும். நானும் ராமாவதாரத்தைப்பற்றிச் சிறிது தெரிந்துகொண்டிருக்கிறேன். ராமனது அரிய குணங்களை உலகெங்கும் பரப்பிய வான்மீகிக்கும் நான்தான் முதன் முதலில் சுருங்க அவ்வவதாரத்தைப்பற்றி உபதேசித்தேன். ராமன் தன்னை மனிதனுக எண்ணி நடந்துகொண்டது உண்மை. கண்ணனே, அவ்விதம் செய்தாலும் அடிக்கடிதானே விண்ணோர் பெருமான் என்பதை மெய்ப்பித்துக் காட்டிவிடுகிறுன். குற்றமற்ற பரம்பொருள் பெண்கள் கற்பையழிக்குமா? பாமரரும் இங்ஙனம் சந்தேகிப்பதற்கு இடமில்லையே.

பெண்களோடு சேர்ந்து விளையாடுகின்றனனேயெனின் அது கற்பை யழிப்பதாக ஆகாது. மற்றவருக்கென்று பேச்சுப்படில் வாழமாட்டாத மங்கையாரகிற ஜீவாத்மாக்களை அனுபவிக்கின்றனன் என்றுதான் இதைக் கொள்ளவேண்டும். கூறை பறிப்பது முதலிய சிருங்காரங்களுக்குக் கருத்தாவது:— அப் பெண்மணிகளுக்கும் தனக்கும் இடையே உள்ள யாராலும் தாண்டுதற்கரிய தன் மாயையைத் தானே விலக்குவதாகும். கூறை பறித்த பின்னர் உண்டாகும் அனுபவம் பிரம்மானுபவமே. ஆடவருக்கும் இவ்வித நிலைமை உண்டேயாயினும் எல்லா ஆத்மாக்களுக்கும் உண்மையில் பெண்தன்மைதான் உண்டென்று சாஸ்திரங்கள் கூறுவதால் பெண்டிரது நிலையே வருணித்துக் கூறப்படுகிறது. •பகவத் விமுகரும் இவ் விஷயத்தில் இறங்கும்படி இவ்வுலகிற்கேற்ப மங்கைமாரது சிருங்காரரசம் பெரியோர்களால் நன்கு வருணித்து கூறப்படுகிறது. நவநீத சௌர்யத்தால் வெண்ணெய் என உருகும் இளநெஞ்சினரது உள்ளத்தைக்கவரும் தன்னுண்மை நிலைமையை உணர்த்துகின்றனன். ஆகவே கண்ணனவதாரத்தில் எத்தகைய உண்மைத் தீம்புகளுக்கும் இடமேயில்லை என்பதை எவரும் ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும்.

வியாசர்:— (சுகர் காதண்டை) சுக! நமது தாத்தாவுக்கு நாரதர் தக்க பதிலளித்தார். நீ யென்ன நினைக்கின்றனை?

சுகர்:— ஆம் அப்பா! தாத்தாவிடம் நாம் என்ன பதில் சொல்ல முடியும்? சொல்வதைக் கேட்டுக்

கொண்டுதான் இருக்கவேண்டும். இந்தக் கிழவருக்கு ஏற்ற வல்கிழவர் நாரதர்தான். கிழவர்கள் சண்டையில் நமக்கென்ன?

*ஆய்ச்சியர்கள் பாடிக்கொண்டு வருகின்றனர்.*

நாரதர்:— (*வசிஷ்டரைப் பார்த்து*) சுவாமி! அடியேன் அதிகத்தனமாக ஏதாவது....

வஸிஷ்டர்:— அபசாரம் அபசாரம், தேவர் கூறியது அவ்வளவும் உண்மையே.

வியாசர்:— இதோ ஆய்ச்சியர் வந்துவிட்டனர் இவர்களுக்கு இடைஞ்சலாக நாம் இங்கே நிற்பது கூடாது. பிரம்மவித்துக்களுக்குப் போல் இவர்கள் முகம், களங்கமில்லாமல் எவ்வளவு அழகாக தெளிந்த நீர் உள்ளேயுள்ள சாமான்களை விளக்கிக் காட்டுவது போல அந்தரங்கசுத்தியை வெளிப்படுத்துகிறது பாருங்கள். நாம் இச் சந்நிதியில் சென்று இறைவனடி இறைஞ்சுவோம் வாருங்கள்.

*எல்லோரும் "ஹரிநாராயண" என்று பாடிக்கொண்டே செல்கின்றனர்.*

**ஐந்தாமங்கம் - இரண்டாம்களம்**

**முற்றிற்று.**

**சுபம்.**

# மார்கழி நோன்பு

அல்லது

# ஸ்ரீ ஆண்டாள் திருமணம்.

---

## ஐந்தாமங்கம் - மூன்றுங்களம்.

இடம்: திருவாய்ப்பாடியில் ஓர் வீதி.

(ஆய்ச்சியர்கள் பிரவேசிக்கின்றனர். சிலர் வந்து கலந்துகொள்கின்றனர்).

ஒருத்தி:— சகி! நேற்று நம்மோடு வந்தவர் பலர் இன்னும் வரவில்லையே.

வந்தவர்:— அவர்களுக்கு இந்நோன்பிற் சிரத்தையில்லைபோலும். இருந்தால் இதற்கு முன்பே எழுந்து வந்திருக்கமாட்டார்களா?

,, ஆம் உண்மைதான். கண்ணனைப் பிரிந்த நமக்கு உறக்கம் வந்ததா? அவர்களும் உண்மையில் பிரிந்து நொந்திடுவரேல் உறக்கம் வருமா?

வந்தவர்:— அவர்களை எல்லாம் இனி எதிர்பார்ப்பதில் பயனில்லை. நேரமாகிறது. நாம் போவோமே. முனிவரின் "அரி அரி" என்ற பேரரவம் கேட்டு உடனே நாங்களே வரவில்லையா?

,, (தலைவியை நோக்கி) என் சகி! நாம் போகலாமா?

தலைவி:— சகி! நாம் அவர்கள் இல்லாமல் தனித்துப் போகக்கூடாது.

,, அவர்கள்தான் இவ்விஷயத்தில் சிரத்தையில்லாதவர்களாயிருக்கிறார்களே.

தலைவி:— ஏன்?

,, சிரத்தையிருந்தால் இவர்களைப் போல அரி அரி என்ற பெரிய சப்தம் கேட்டபிறகேனும் வந்திருக்கமாட்டார்களா?

தலைவி:— அப்படி நினைக்கவேண்டாம். பிரிந்த துன்பம் அவர்களுக்கு இல்லாமலில்லை.

,, பின்னையேன் இன்னம் உறங்குகின்றனர்?

தலைவி:— சகி! நஞ்சு சிலரை இருந்தவிடத்தில் இருக்கவொட்டாமல் துடிக்கப்பண்ணும். சிலரை மயங்கப்பண்ணும். அதுபோல அவர்களைப் பிரிவுத்துன்பம் மயங்கப் பண்ணியிருக்கிறது. இதனால் அவர்களுக்குச் சிரத்தையில்லை என்று கூறிவிடலாமா?

ஒருத்தி:— (ஒரு வீட்டைச் சுட்டிக்காட்டி) இவ்வீட்டுப்பெண் இவ்விஷயத்தில் புதியவளாயிற்றே, அவளையும் எழுப்பிச் செல்வோமா?

தலைவி:— ஆம், அவளைத்தான் முதன்முதலில் எழுப்பவேண்டும். (கதவண்டை வந்து) சகி! பொழுது விடிந்துவிட்டதே. எழுந்திரு சீக்கிரம். நோன்பிற்கு நேரமாகிறதே.

உள்ளிருப்பவள்:— நீங்கள் உறங்காமல் இருக்கிறீர்கள். விடிந்தமைக்கு என்ன அடையாளம்?

தலைவி:— பறவைகள் எழுந்து கூவுகின்றன.

உள்:— உறங்காது அலையும் நீங்கள் அவைகளைக் கிளப்பிவிட்டிருப்பீர்கள் உங்கள் பேரிரைச்சலால்.

(இரைக்குள் சங்கு ஊதும் ஓசை கேட்கிறது).

தலைவி:— கெருடவாகனாரூடனான ஸர்வேசுவரன் சந்நிதியில் திருப்பள்ளி எழுப்பும் சங்கின் பேரரவம் கேட்கவில்லையா? (பதிலில்லாமையால் தனக்குள்) புதியவளிவள். நாம் வந்து நிற்பதையும் லக்ஷியம் செய்யவில்லை. ஆகிலுமிவளை எழுப்பியே தீரவேண்டும். (வெளியில்) சிறுபெண்ணே! எழுந்திரு.

உள்:— உங்களை எல்லாம் எழுப்பியது யார்?

தலைவி:— நீ கூறியது போலச் சிலர் உறங்கவேயில்லை. சிலர் பேய்ப்பாலுண்டு, கள்ளத்தால் வந்த சகடத்தைக் கட்டழிந்து சிதறும்படி சிறு காலால் உதைத்த கோது காதலுடைய பாற்கடலில் பாம்பணை மேல் பள்ளிகொண்டருளும் காரணபூதனை, முனிவர்களும்

யோகிகளும் மனத்தில் த்யானம் செய்து மெள்ள எழுந்து துதிக்கும் 'ஹரி ஹரி' என்ற சப்தம் கேட்டு உளம் மகிழ்ந்து குளிர்ந்து எழுந்தனர்.

புள்ளும் சிலம்பினகாண்...குளிர்ந்தேலோ ரெம்பாவாய்.

(உள்ளிருந்து வந்து கலந்து கொள்கிருள்)

ஒருத்தி:— (ஒரு வீட்டைக்காட்டி) இந்த வீட்டுக் காரி நோன்பில் மிகவுமாவல் உள்ளவளாயிருந்தாளே; இன்னும் ஏன் வரவில்லை?

தலைவி:— ஆம். இவள் இன்னும் எழாதது ஆச்சரியமே.

,, நான் சென்று இவளை எழுப்புகிறேன். இவ்விஷயமெல்லாம் தெரிந்தும், தன்னை மறந்திவள் இன்னு முறங்குகின்றனளே (வாயிற்கதவண்டை வந்து உள் நோக்கி) சகி! போது விடிந்தது எழுந்திரு.

உள்ளிருப்பவள்:— விடியட்டும். அவசரப்படாதே. விடிந்தபின் வருகிறேன்.

வெளியிருப்பவள்:— விடிந்தபின்பா? நன்று யிருக்கிறது. வலியன் குருவிகள் கீசு கீசு என்று பேசும் அரவம் உன் காதில் விழவில்லையோ? விடியாமலோ அவைகளின் பேச்சரவம் கேட்கின்றது?

உள்:— நீங்கள் அவைகளைக் கிளப்பி விட்டிருப்பீர்கள்.

வெளி:— நாங்கள் கிளப்பிவிட்டிருப்போமா? "விடிந்ததே இனிப்பகல் முழுதும் எப்படிப்பிரிவைத் தரிப்போம்" என்று அலை கலந்து பேசும் பேச்சவம் நீ கேட்டிலேயோ? வேறென்ன அடையாளம் வேண்டும்?

உள்:— பிரிந்த நீங்கள் தளர்ச்சியை வலியன் குருவியின் குரலில் உள்ளதாகக் காண்கிறீர்கள். விரஹிகள் இவ்வுலகையே தன்னைப்போல் பிரிந்து வருந்துவதாகத்தான் பார்ப்பார்கள். இது விடிந்தமைக்கு அடையாளமன்று.

வெளி:— அடி அறிவிலி! என்ன சொன்னாய்? எழுந்துவந்த நாங்கள் எல்லாம் பைத்தியக்காரிகளா?

உள்:— நான் அறிவிலி என்பதிருக்கட்டும். விடிந்தமைக்கு வேறு அடையாளமுண்டாகிற் சொல்லு. இதோ வந்துவிடுகிறேன்.

வெளி:— ஆய்ச்சியர் குழல் அவிழ்ந்து பரிமளம் கமழ, அச்சுத்தாலியும் முளைத்தாலியும் கலகலவென்று சப்திக்க, கைசலுக்கும்படி மத்தினால் தயிர் கடையும் ஓசையும் நீ கேட்டிலேயோ?

உள்:— இவ்வூரில் எப்பொழுதும் தயிர் கடைவது சுபாவமன்றோ? இது எவ்விதம் விடிந்தமைக்கடையாளமாகும்?

வெளி:— (சிறிது நேரம் அவள் வரவை எதிர்பார்த்து) எங்களுக்கு எல்லாம் தலைமைவகிக்கும் முறை

இதுதானே? நாயகப்பெண்பிள்ளாய்! சொன்னதற் கெல்லாம் மறுமாற்றம் சொல்லிப் பேசாதே கிடப்பது நாயகத்தன்மைக்குச் சேரும் என்றிருக்கின்றனையோ?

தலைவி:— சகி! இவள் இதற்கும் எழுந்திருக்க வில்லை. நான் ஒரு வழி சொல்கிறேன், இவள் திடுக் கிட்டு இப்பொழுது எழுந்து வர. ஸ்ரீமந் நாராயணன் கண்ணனாக அவதரித்து வளருங்காலத்திலே கேசி என் பானோர் அசுரன் நலியவந்தான் என்று கூறு. உடன் கண்ணனுக்கு என்ன வருகிறதோ என்று துணுக் கென எழுந்திருப்பாள்.

வெளி:— கிருஷ்ணனைக் கேசி வந்து நலியப் புகுந்தான் காண். துணுக்கென எழுந்துவா;

வெளி:— (வரக்காணாமல்) சகி! இன்னும் எழுந்து வரவில்லையே?

தலைவி:— ஆகில் "அவனை அவன் கொன்றான் காண்" என்று கூறு. விஜயக் கணவனை அணைந்து கொள்ள உடன் எழுந்துவருவாள்.

வெளி:— கேசியைக் கண்ணன் கொன்று விட் டான். உடன் அவனை அணைந்து கொள்ளவா.

"கேசி என்பவன் கேளடீ! கண்ணனால்
தேசழிந்து சிதைந்தனன் சீக்கிரம்
ஆசை நாயகன் தன்னையணைந்திட
நேசமுடன் துயில் நீங்கி நெருங்கிவா."

(உள்ளிருப்பவள் இவள் பாட்டைக்கேட்டு மெய் மறந்திருக்கின்றனள்.)

வெளி:— கேசவனைப் பாடுவது உனக்குத் தாலாட்டுவது போலிருக்கிறதோ? எழுந்து விரைந்துவா.

தலைவி:— (வரக்காணுமையால் ஜன்னல் வழியே உள்நோக்கி) ஆம். கேசவனைப் பாடுவதைக்கேட்டு, கிருஷ்ணன் விஜயத்தை அநுஸந்தித்து மெய் மறந்திருக்கின்றனள். ஆஹா! அநுஸந்திக்கும் இவள் முகத்தில் என்ன தேஜஸ்! சகி! நாங்கள் எல்லாம் இந்தத் தேஜஸைக்கண்டு களிக்க வேண்டாமா? உன் அழகைக்காணுமாறு நீயே வந்து கதவைத்திற.

உள்:— சகி! அப்படியே செய்கிறேன். இதோ வந்துவிட்டேன்.

கீசுகீசு............திறவேலோரெம்பாவாய்.

(கதவைத் திறந்து புன்முறுவலுடன் தலைவியோடு சேர்ந்துகொள்கிருள்).

ஒருத்தி:— (மற்றொரு வீட்டைக்காட்டி) இவ் வீட்டுக்காரி இன்னும் வரவில்லையே.

தலைவி:— ஏன் இவள் இன்னும் வரவில்லை? இவள் மிக்க குதூஹலமுடையவளாயிற்று. நாமிவளை எழுப்புவோம். (கதவண்டை வந்து) கோதுகுலமுடைய பாவாய்! எழுந்திரு. கீழ்வானம் வெளுத்து விட்டதே. இன்னும் உறங்கலாமா?

உள்:— கிழக்கு வெளுக்கவில்லை. உங்கள் முக மதியின் ஒளியினால் அங்ஙனம் தோன்றுகின்றது போலும்!

தலைவி:— பனிப்புல் மேய விடிவேளையில் விடப் பட்டு எருமைகள் வயல்கள் எங்கும் பரந்தன. அவற் றின் பின்னே கண்ணன் போய்விடப்போகிறானே, பின்னை யாரைக் காண்பது? எழுந்திரு.

உள்:— உங்கள் முகத்தொளியால் இருள் திரள் போகின்றனபோலும். அவைகளை நீங்கள் எருமை கள் என்று பிரமிக்கிறீர்கள்.

தலைவி:— நாங்கள் பிரமித்ததாகவே இருக்கட் டும். நீ விடியவில்லையென்பதை எப்படி அறிந்து கொண்டாய்?

உள்.— இவ்வூர்ப் பெண்களில் உங்களையொழிய மற்றவர்களின்னும் உணராததினால்.

தலைவி:— உன்னை யொழிய எல்லாரும் முன்பே எழுந்து போய்விட்டார்களே. நீ தான் எழுப்ப வேண்டும்படி தூங்குகின்றனை.

உள்:— அப்படியா போய்விட்டார்களா? போவதையே பெரிய சுகமாக எண்ணி என்னை மறந்து அவர்கள்தான் போய்விட்டார்களே. நான் எழுந்து இனி எங்கே போக?

தலைவி:— அவர்கள் போனாலும் நீ வாயில்லை யென்று அவர்களைப் போகாமல் தடுத்து, உன்னை யெழுப்புவதற்காக உன் வாசலிலே வந்து மேற்போக மாட்டாமல் நிலை நின்றோம். எழுந்திரு.

உள்:— நான் இப்பொழுது எழுந்ததும் என்ன செய்யவேண்டும்?

தலைவி:— நம் நெஞ்சிலே பொங்கி எழுகிற "கிருஷ்ணாநுபவப் பிரவாஹத்திற்குப் போக்கு விடாக நாம் வாயார நினைத்தபடி பாடக்கடவோம். பின்னர் பறைகொண்டு, கேசியின் வாயைப் பிளந்து சாணூராதி மல்லரைக் கொன்ற தேவாதிதேவனான கண்ணனை நாம் சென்று சேவிக்கவேண்டும். விரஹந்தின்ற நம் சரீரத்தைக் கண்டு ஐயோ! ஐயோ! என்று நம் குறைகளை ஆராய்ந்து, "நாம் சென்று இவர்களுக்கு உதவப் பெற்றிலமே" என அவன் இரங்கியே தீருவான். ஆக அவன் அருளுக்குக் காரணபூதையான நீ எழுந்து வா.

கீழ்வானம்.........அருளேலோரெம்பாவாய்.

(உள்ளிருப்பவள் கதவைத்திறந்து கலந்து கொள்கிறாள்).

ஒருத்தி:— (மற்றோர் வீட்டைக் காட்டி) சகி! இந்த வீட்டைப் பார். தூய மணிகளாலாக்கிய மாடம், நாலா பக்கங்களிலும் விளக்குகள் எரிந்துகொண்டிருக்கின்றன. மணிமாடத்திற்கு விளக்குகள் எதற்காக? அழகுக்காக வைத்திருக்கிறார்கள்போலும்! புன்கையைக்

காணோம். பரிமளம் கமகம என்று கமழுகிறது. என்ன ஆச்சரியம்!

(எல்லோரும் ஆச்சரியத்துடன் பார்த்து நிற்கின்றனர்).

தலைவி:— மணிமாடமாகையால் உள் ஜோடிப்பெல்லாம் வெளியில் தெரிகிறது. (வாயிலண்டைவந்து) சகிகாள்! இன்னும் என்ன ஆச்சரியம்! பாருங்கள். நமக்கு மெல்லிய மலர்ப்படுக்கை வெம்பள்ளியாயிருக்கிறது. இவளோ துயிலணையில் பொருந்தி எவ்விதமோ கண் வளருகின்றனள்! "கண்ணன்தானே தேடிவந்த போது வரட்டும் நானவனைத் தேடிப்போகப்போவதில்லை" யென்று இவள் நினைப்புபோலும்.

ஒருத்தி:— சகி! உனக்குத்தான் இவள் மாமான் மகளாயிற்றே. உறவு கொண்டாடிச் சிறிது அதட்டியே எழுப்பு. அப்பொழுதுதான் இவள் சீக்கிரம் எழுந்திருப்பாள்.

தலைவி:— அடி மாமான்மகளே! மணிக்கதவம் தாள் திற.

(உள்ளிருப்பவள் பேசாதிருக்க, அவள் தாய்:— அவள் எழுப்புகிறாள், நீ யேன் பேசாதிருக்கிறாய்).

தலைவி: — மாமி! அவளைச் சீக்கிரம் எழுப்பிவிடு.

தாய்:— அவள் எழுப்புகிறாள். நீ யேன் பேசாதிருக்கிறாய்?

தலைவி:— (எழுந்திருக்காததைக்கண்டு) மாமி உன் மகளென்ன ஊமையா? பேசாதிருக்க. அல்லது! செவிடோ? எங்கள் சப்தம் கேட்காதிருக்க. சோம் பேறியா? அசையாதிருக்க. இவள் எழுந்திருக்கக் கூடாதென்று காவலிட்டு வைத்திருக்கிறதோ? அல்லது மந்திரவாதம் செய்திருக்கிறதோ?

தாய்: – (உள்ளிருந்தே) அவள் உணரும்படி திருநாமங்களைச் சொல்லுங்கள். எழுந்துவிடுவாள்.

தலைவி:— என் தோழிகள்தான் "மாமாயன் மாத வன் வைகுந்தன்" என்று இவ்விதமாகப் பல நாமங் களைப் பாடிக்கொண்டேயிருக்கிறார்களே. நாமம் பலவும் நவின்றோம். அவளை எழுப்பு.

## தூமணிமாடம்......நவின்றேலோரெம்பாவாய்.

ஒருத்தி:— சகி! நேரமாகிறது. அவன் போய் விட்டால் நாம் என் செய்வோம்?

தலைவி:— (உள் நோக்கி) அழகாயிருக்கிறது. நீ எமக்குத் தலைவியன்றோ? அச்செறுக்காலே விடிந்த பின்னும் கிடந்துறங்குகின்றனைபோலும்! நோற்று அழ காய்ப் பலம் பெற்றுவிட்டனை. தூக்கத்தைவிட வேறு என்ன பலனிருக்கிறது? தூக்கம்தான் உனக்குச் சுவர்க் கம்! நீ எழாவிட்டாலு மங்கிருந்தே ஒரு வார்த்தையாயி னும் தாக்கூடாதா? மாற்றமும் தாராரோ வாசல் திற வாதார்? ஆமாம். எஜமானியாயிருப்பார் பேசுவரோ?

ஒருத்தி:— சகி! இங்கே கம் என்று திருத்துழாய் வாடை வீசுகிறது. கண்ணனோடு கலந்தனளோ என்னவோ? அதனால்தான் இப்படி உறங்குகிருள்.

தலைவி:— ஆம். அவனோடு கலந்தாலும் கலக்காவிட்டாலும் இதைப்பற்றி பிரஸ்தாவித்தால் உடன் சடக்கென எழுந்திருப்பாள். (உள் நோக்கி) அம்மனுய்! இரவெல்லாம் கண்ணனோடு கலந்தனைபோலும்! அதனால்தான் விடிந்தும் உணர்ந்திலே. நீ மட்டும் அநுபவித்தால் போதுமா? கண்ணனுக்கு உடம்பு கொடுத்தால் எங்களுக்கு ஒரு வார்த்தையாயினும் தரக்கூடாதா?

உள்:— நீங்கள் ஏன் பழியிடுகிறீர்கள்? ஏற்கனவே அவனைப் பிரிந்து வருந்தும் என்மீது ஏன் புண்ணில் புளிப்பெய்தாற்போலப் பழியைச் சுமத்துகிறீர்கள்? அவனிங்கு இருக்கிருனு பாருங்கள்.

தலைவி:— நீ யவனை மறைத்திருப்பாய். துழாய் வாசனை கம் என்று இங்கு வீசுகிறதே. அவனை மறைத்தாலும் வாசனையை மறைக்கமுடியுமா?

உள்:— இரவில் தோட்டத்தில் நாமவனை அணைந்துகொள்ளவில்லையா? அவ்வாஸனையாய் இருக்கலாம். அவன் ஒரு சமயம் அணைந்துவிட்டால்தான் பரிமளம் ஐந்தாறு தடவை குளிக்கும்வரை நிற்குமே. மேலும் இவ்வளவு கட்டும் காவலுமாயுள்ளவிடத்தில அவனையுள்ளே விடுவார்களா? என் தாயைத் தவிர மற்றவர்களெல்லாம் கண்ணன் கலவிக்கு விரோதிகளாயிற்றே.

தலைவி:— அவன் கதவைத் திறந்துதான்வர வேணுமோ? ஒரே காலத்தில் எங்குமிருந்து பல லீலை புரிபவனன்றோ அவன்.

உள்:— உங்களை என்றால் பதில் சொல்லி வெல்ல முடியாது. அவன் என்னவோ இங்கில்லை.

தலைவி: — பின்னை யேன் நீ விடிந்தும் உணர்ந்திலை?

உள்:— எனக் கென்னவோ மிகவும் தூக்கம் வந்துவிட்டதம்மா!

தலைவி:— (புன்னகையுடன்) உனக்குமட்டுமில்லை பண்டொரு நாள் கும்பகாணுக்கும் இப்படி உறக்கம் வந்திருக்கிறது. நீ இதிலே பெருமை கொள்ள வேண்டாம். கும்பகாணன் நமக்குப் பறைதரும் புண்ணியனிடம் வீரத்தால் தோற்று கூற்றுக்கு இரையாயினன் அவனே உறக்கத்தில் உனக்கு தோற்று, தன் உறக்கத்தைக் கப்பம் கட்டி விட்டனன் போலும்! உன்னது அவனது இரண்டும் சேர்ந்துகொண்டால் உனக்கேன் பேருறக்கம் வாராது?

உள்:—சகி! என்மீது பழி சுமத்தவேண்டாம் இதோ எழுந்திருக்கிறேன், (எழுந்து சோம்பல் முறிக்கிறாள்).

தலைவி:— ஆஹா! என்ன அழகு! இவள் சோம்பல் முறிக்கும்போது. (மற்றவர்களெல்லாம் வந்து பார்க்கிறார்கள்) அடி அணி போன்றவளே! எங்கள் நிலையைக்கண்டும் இன்னுமேன் தாமதம்?

(உள்ளிருப்பவள் அரை குலையத் தலை குலையக் கதவைத் திறக்க விரைந்துவருகிறாள்).

தலைவி:— சகி! தடுமாறால் நெகிழ்ந்த உடையை நன்றாக உடுத்து தூக்கம் தெளிந்தவளாய் வந்து கதவைத் திற. படுக்கையில் கிடந்தபடியே வெளியே வாராதே கலவிச் சின்னத்துடன்.

**நோற்றுச் சுவர்க்கம்......திறவேலோரெம்பாவாய்.**

(கதவைத் திறந்து கலந்துகொள்கிறாள்).

ஒருத்தி:— ஒரு பட்டுக்கு இவளை எழுப்பினோம். (ஒரு வீட்டைக்காட்டி) இவ்வில்லத்தாள் குலத்தாலுமழகாலும் குணத்தாலும் நம் கண்ணனுக்கு நிகராவள். இவளை முன்னிட்டன்றோ நாம் செல்லவேண்டும்?

தலைவி:— ஆம் சகி! இவளை நானே எழுப்புகிறேன். செல்வமும் வீரமும் வாய்ந்து குற்றமிலாதது இவள்தன்குலம். அழகும் குணமுமோ அளவிடற்கரியவை.

,, சகி! அதோ பார். இவள் தந்தை எழுந்து பால் கறந்துகொண்டிருக்கிறார். இவள்மட்டும் ஏன் இன்னும் எழுந்திருக்கவில்லை?

தலைவி:— சகிகாள்! நான் இவள் குலம் செல்வமும் வீரமும் வாய்ந்ததென்று கூறியது எவ்வளவு பொருந்தியிருக்கிறது பாருங்கள். என்ன ஆச்சரியம்! கன்றுகளாயினும் பால் கறக்கும் பசுக்கூட்டங்கள்தான்

எத்தனை! இவை இத்தனையு மிவர் ஒருவரே நின்று கறக்கிறார் எனின் இவர் வலிமையை என்னென்பது!

,, சகி! நம் கண்ணன் பெருமையைப் பொருத சில சத்ருக்களிருக்குமிடம் சென்று, அவர்கள் திறலழிய, யுத்தமுறை தவறாமல் குற்றமின்றிப் போர் புரிபவரான இவர் இத்தனை பசுக்களைக் கறப்பது போராச்சரியமில்லையே?

தலைவி:— (உள் நோக்கி) குற்ற மொன்றில்லாக் கோவலர்தம் நற்குலத்தில் தோன்றிய பொற்கொடியே! துயிலெழு. பாம்பின் படம்போலகன்று அழகிய நிதம்பம் வாய்ந்த மயில்போன்றவளே! துயிலெழு. எங்களோடு புறப்படு நோன்பிற்காக.

உள்:— எல்லோரும் வந்துவிட்டனரா?—நான் புறப்பட.

தலைவி:— ஆம், நின் சுற்றமான தோழிமார் எல்லாரும் வந்து நின் முற்றம் புகுந்து, முகில்வண்ணன் பேர் பாடவும் நீ அசையாமல் பேசாமல் கிடக்கின்றனையே,—ஏன்? கண்ணன் கலவியெனும் செல்வம் வாய்ந்த பெண்ணே! நீ அச்செல்வத்தைவிட்டு என்ன பயனுக்காக இப்படி உறங்குகிறாய்? புறப்படு சீக்கிரம்.

**கற்றுக்கறவை......போருளேலோரெம்பாவாய்.**

(வந்து கலந்துகொள்கிறாள்).

ஒருத்தி:— (மற்றோர் வீட்டண்டை வந்து) சகிகாள்! இந்தத் தொழுவைப் பாருங்கள். பால் கறப்பார் ஒருவருமில்லையா? இவ்விளங்கற்றெருமைக் கூட்டங்களெல்லாம் பால் கறவாமையால் முலை கடுத்துக் கதறி, தன் கன்றுக்கு இரங்கி, அக்கன்றுகளையே நினைந்து, அதனால் முலைவழியே இடைவிடாமல் பாலைப் பெருக்கிக்கொண்டே இருக்கின்றனவே!

மற்றவள்:— ஆம். இது யார் வீடு? இந்த இல்லம் முழுதும் பால் பெருகச் சேறாகிவிட்டதே. கன்றுகளையும் ஊட்டாமல் பாலையும் வீணாக்கி இவ்வீட்டுக் கோபாலர் எங்கே போனார்?

தலைவி:— இது நற்செல்வன் வீடு. நமது நாதன் கண்ணனுக்கு இவன் உற்ற துணைவனல்லவா? இவன் தானே கண்ணன் விடுதலை அடைந்த செய்தியை நமக்குத் தெரிவித்தவன். தூங்கி எழுந்ததும் தன் துணைவன் கண்ணனுக்காக ஏதேனும் செய்யவேண்டியிருக்கும், அதற்காகப் போயிருப்பான். தன் காரியத்தைக் கூடவிட்டு, அவன் கண்ணனுக்காக முன்பே எழுந்து போயிருக்கின்றனனே, அவன் தங்கையும் அதுபோல் எழுந்து வந்திருக்கின்றனளா?

,, இல்லை இல்லை.

தலைவி:— (வாயிலண்டை வந்து) சகி! நற்செல்வன் தங்காய்! உன் தமையன் கண்ணனுக்காகப் பால் கறப்பதுபோன்ற தன் காரியங்களைக்கூட விட்டுப்

போய்விட்டனனே, நீ — அவன் தங்கை இன்னும் உறங்கலாமா? நாங்கள் உன்னை எழுப்ப வந்திருக்கிறோம். உடன் எழுந்திரு மேலே தலையில் பனி கொட்டுகிறது. கீழே பால் பெருகச் சேறான இடத்தில் நிற்கிறோம். இதற்கிடையே மயக்கம். நாங்கள் என்ன செய்வோம்? நிற்கவும் முடியவில்லை. உன் வாயிற்கடையிலுள்ள தண்டியத்தைப் பிடித்துக் கொண்டு நிற்கிறோம், உடன் எழுந்து எங்களைத் தேற்று.

ஒருத்தி:— சகி! இவள் நற்செல்வன் போலில்லை. "பெண்களின் வருத்தமறியாமல் அவர்களைப் பிரிய விடுகிறான்" என்று கண்ணன் மேல் இவளுக்குக் கோபம். இவள் மனத்திற்கு இனியான் ஸ்ரீராமன் தான். உண்ணாது உறங்காது ஒலிகடலை ஊடறுத்து ஒரு பெண்ணிற்காகவன்றோ அவன் பெரும் பாடுபட்டான். அதனால்தான் ராமன் மீது இவளுக்குப் பிரியம். அவனைப் பாடினால் இவள் உடன் எழுந்து வந்துவிடுவாள் என்று நினைக்கிறேன்.

தலைவி:— ஆம் சகிகாள்! பாடுவோம் ராமனைப் பற்றி:—

உண்ணாதுறங்காது ஒலிகடலை ஊடறுத்து
பெண்ணாக்கையாப்புண்டு பேதுற்று வெஞ்சினத்தால்
திண்ணார்மதிள்சூழ் தென்னிலங்கைக் கோமானை
புண்ணாகவாளி தோளைத்தானைப் போற்றுவமே.

தலைவி:— (வாக் காணமையால்) நாங்கள்தான் கண்ணனைவிட்டு உன் மனத்திற்கு இனியானைப் பாடி

விட்டோமே. அப்படிப் பாடவும் நீ யேன் வாய்திறக்க வில்லே. நாங்கள் "பனித்தலேவீழ" என்று எங்கள் நிலைமையை உணர்த்திய பின்பும் நீ எழுந்திருக்க வில்லேயே. இனித்தானென்ன? எழுந்திரு இதென்ன பேருறக்கம்! உலகத்திலில்லாதது. பெண்கள் எல்லாரும் வந்து உன்வாசலில் நின்று அழைப்பது ஊரார் களெல்லாருக்கும் தெரியட்டும் என்றிருக்கிருயோ? ஆகில் அவர்களெல்லோரும் தெரிந்துகொண்டார்கள். இனிமேலேனும் எழுந்திரு.

கனைத்திளம்......அறிந்தேலோரெம்பாவாய்.

(வந்து கலந்துகொள்கிருள்)

ஒருத்தி:— (ஒரு வீட்டைக் காட்டி) இவ்வீட்டுப் பெண்மணி இன்னும் எழுந்து வரவில்லே.

தலேவி:— என் இன்னும் இவள் எழுந்து வர வில்லே? கண்ணனே அநுபவிப்பதில் இவள் வல்லவ ளாயிற்றே.

,, இரவில் உத்யானத்தில் விளேயாடிவிட்டு நானுமிவளும் வீட்டுக்கு வரும்போது இவள் சொன் ஞள்:— "கண்ணன் என் கண்ணழகை இன்று கொண் டாடினனே, இது உள் கருத்துடன் இருக்குமா? அல்லது கபடத்தாலா"? என்று. நான் உண்மையாகத் தான் கூறியிருக்க வேண்டும் என்று சொன்னேன். அதற்கு இவள் "இதை நான் பார்த்துவிட வேண்டும். நான் விடிவோரை நோன்பிற்கு எழுந்து அவனிடம்

வரப்போவதில்லை. என் கண்ணழகில் உண்மையில் ஈடு பட்டிருந்தால் அவன்தான் இங்கு வரட்டுமே." என்று சொன்னாள். அவ்வபிப்பிராயத்துடன்தான் இன்னும் இவள் எழுந்திருக்கவில்லை என்று நினைக்கிறேன்.

தலைவி:— அப்படியா? ஆகில் நீங்கள் பாடிக் கொண்டே மெல்ல முன்னே போங்கள். நான் இவளை எழுப்பிக்கொண்டு வந்து சேர்ந்துவிடுகிறேன்.

(எல்லோரும்:—

கள்ளக்கருத்தோடுவந்த வக்காதகப்
புள்ளைப்பிளந்தானைப் பொல்லாவரக்கனைக்
கிள்ளிக்களைந்தானைக் கீர்த்திமைபாடிப்போய்
குள்ளக்குளிரக் குடைந்து நீராடுவாம்.

என்று பாடிக்கொண்டே செல்கின்றனர்).

தலைவி:— (வீட்டண்டை வந்து) சகி! மலர்போன் றும் மான்போன்று மழகிய கண்ணுடையவளே! பெண் கள் எல்லோரும் பகாசுரனையும் ராவணனையும் வதை செய்த வீரத்தை வாயாரப்பாடிக்கொண்டே நோன்பு நோற்குமிடத்திற்குப் போய்விட்டார்களே. நீ சென்று எழுப்பவேண்டிய பிள்ளைகள் (இளம்பெண்கள்) கூட உனக்கு முன்பே எழுந்து புறப்பட்டார்கள். நீ மட் டும் என் இன்னும் உணரவில்லை?

உள்:— போது விடிந்ததோ? எல்லோரும் போவதற்கு.

தலைவி:— ஆம், விடிந்தது. சுக்கிரன் எழுந்தது. குரு நக்ஷத்திரம் அஸ்தமித்துவிட்டது.

உள்:— எதையோ பார்த்து நீ சுக்கிரனும் குருவுமாக நினைக்கிறாய்.

தலைவி:— பறவையினங்கள் காலையானவாறே சிலும்புகின்றன பார். (சிறிது நேரம் எதிர்பார்த்தும் அவள் வாராமையால்) (தனக்குள்) சகி சிறிது முன்பு கூறியது உண்மைதான். தன் கண்ணழகால் அவன் தான் இங்கு வரட்டுமே என்று இவள் இறுமாந்திருக்கிறாள். (வெளியில்) அடிபோதரிக் கண்ணிணாய்! தன் கண்ணழகால் அவனை வரவழைத்துத் தனியே அவனை அநுபவிக்கலாமென்றிருக்கிறாயோ? அவனைத் தனித்து அநுபவிக்கவேண்டும் என்கிற கள்ள எண்ணத்தைவிட்டு எங்களோடு கலந்து காலையில் குளிரக்குடைந்து நீராடாமல் படுக்கையிலேயே படுத்துக்கிடக்கின்றனையே. அவ்வின்பவெள்ளத்தைத் தனியே நீ அநுபவிக்கமுடியாது. மெல்லிய இயல்பினையுடையவளே! இன்று நல்ல நாள். அவனை நாமெல்லோரும் கூடி அநுபவிக்கக் கோபர்கள் கூட ஒப்புக்கொண்ட நாள். வந்து சீக்கிரம் கலந்துகொள்.

## புள்ளின்வாய்......கலந்தேலோரெம்பாவாய்

(உள்ளிருப்பவள் வெளியே வர, அவளும் தலைவியும் வேகமாக முன்னே செல்லும் கூட்டத்தோடு கலந்துகொள்கின்றனர்).

ஒருத்தி:— (ஒரு வீட்டைக் காட்டி) சகி! இந்த வீட்டுக்காரி நேற்று என்ன சொன்னாள்?

தலைவி:— ஓஹோ! இன்னுமவள் வாவில்லையோ?

,, நான்தான் சொன்னேனே. மாமி, வீட்டுவேலை எல்லாம் பார்த்தபிறகுதான் இவள் எழுந்திருப்பது வழக்கம். ஆம்பல்வாய் மூடுமுன்பு எழுந்து விடுவாளாம். என்ன சமர்த்தியம்!

தலைவி:— சகி! இவள் சொல்லியதைச் சுட்டிக் காட்டி நீயே இவளை எழுப்பு.

,, அடி எங்களை முன்பே எழுப்புவதாக வாய்வீச்சு வீசின பொய் சொல்லாத உத்தம நங்காய்! உங்கள் புழக்கடைத் தோட்டத்தில் உள்ள குளத்திலே செங்கழுநீர் மலர்ந்தது. ஆம்பல் மொட்டாகி விட்டது. நீயே பார்த்துக்கொள், ஸத்ய சீலையான நீ பொய் சொல்லும் எங்கள் வார்த்தையை நம்பா விட்டால்.

உள்:— இனித்தான் செங்கழுநீர் அலரப் போகிறது. ஏன் ஆத்திரப்படுகிறாய்?

வெளி:— காஷாயமுடுத்து வெளுத்த பற்களை உடைய தவசிகள் கோயிலில் பூசை பண்ணப் போகிறார்களே, அதற்கென்ன சொல்லப்போகிறாய்? தான் சொன்னபடி நடக்கமுடியவில்லையே என்று வெட்கம் சூடு சுணை கொஞ்சம்கூடக் கிடையாது.

பேச்சில்மட்டும் குறைச்சலில்லை. அடி நாவுடையாய்! எழுந்திரு.

உள்:— என்னை இவ்வளவு கோபித்துக்கொள்ளுகிறயே. நான் வந்து என்னசெய்யப் போகிறேன்?

தலைவி:— நீ ஒன்றும் செய்யவேண்டாம். பங்கயக் கண்ணனை உன் நாவால் பாடவேண்டும். அதுவே போதும்.

உங்கள் புழக்கடை......பாடேலோ ரெம்பாவாய்.

(உடன் வந்து கலந்துகொண்டு பாடிக்கொண்டே அவர்களோடு செல்கின்றனள்).

சங்கொடு சக்கரமேந்துந்தடக்கையன்
பங்கயக்கண்ணன் பவளச்செவ்வாயினன்
திங்கள் திருமுகச் சேயிழையாருடன்
மங்களமூர்த்தி மகிழ்வெய்தி வாழி.

தலைவி:— சகிகாள்! சிறிது சந்தடியில்லாமல் நில்லுங்கள். இங்கு இளங்கிளியினுடையதுபோல இனிய குரல் கேட்கின்றதே.

வெளிவந்தவள்:- (சிறிது நேரம் காது கொடுத்து) ஆம் சகி! என்னைப்பாடவேண்டுமென்றனையே. இவளல்லவா பாடவேண்டும். இவள் குரலைக்கேட்டால் கிளியும் குயிலுமினிவாயே திறக்காமல் போய்விடும். சிறிது

அமைதியாய்க் கேளுங்கள். என்ன பாடுகிறாள்? அப் பாட்டு எப்படியிருக்கிறதென்பது தெரியவரும்.

(எல்லோரும் சாவதானமாய்க் கேட்கின்றனர்).

சங்கோடு சக்கரமேந்துந் தடக்கையன்
பங்கயக்கண்ணன் பவளச்செவ்வாயினன்
திங்கள் திருமுகச் சேயிழையாருடன்
மங்களமூர்த்தி மகிழ்வெய்தி வாழி.

தலைவி.— (வெளிவந்தவளை நோக்கி) சகி! நீ பாடிய பாட்டைத்தான் பாடுகிறாள். என்ன இனிமை! என்ன குளிர்ச்சி! என்ன உருக்கம்!

வெளி:— அடுத்த வீடுதானே. இதைக் கேட்டு அநுபவித்து உருக்கமாகப் பாடுகிறாள்.

தலைவி:— (வீட்டண்டை வந்து) இளங்கிளியே! உன் குரலில்தான் என்ன இனிமை! ஆஹா—

ஒருத்தி:— சகி! எழுப்பச் சென்று குரலைக் கொண்டாடிக்கொண்டிருந்தால்? எழுப்பி அவள் நம் முன்னிலையில் பாடிய பின்பல்லவா நாம் புகழவேண்டும்.

தலைவி:— இளங்கிளியே! நாங்கள் உனக்காக வாசலில் காத்துநிற்கிறோமே, நீ படுக்கையைவிட்டு இன்னம் எழுந்திராமலிருக்கலாமா?

உள்:— நான் தனக்குள் பாடிக்கொண்டிருக்கும் போது அதற்கு இடைஞ்சலாக சில் என்று அழையாதீர்கள்.

தலைவி:— என் பேச்சைக்கூடக் கேட்கக்கூடாமல் உனக்கு என்ன மேன்மையடியம்மா! வந்து விட்டது.

உள்:— எனக்கு ஒரு மேன்மையுமில்லை. நீங்கள்தான் மேன்மையுள்ளவர்கள். நங்கைமீர்! சிறிது பேசாதிருங்கள். இதோ வந்துவிடுகிறேன்.

தலைவி:— நங்கைமீர் என்று எங்களையா மேன்மையுள்ளவர்களாகச் சொல்லுகிறாய். நீ வெட்டொன்று துண்டு இரண்டாகப் பேசுவதிற் கெட்டிக்காரி என்பது எங்களுக்கு இன்றுதானா தெரியும்? உன் வாயைப் பண்டே நாங்கள் தெரிந்துகொண்டிருக்கிறோம்.

உள்:— நீங்கள்தான் வெட்டொன்று துண்டு இரண்டாகப் பேசுவதில் கெட்டிக்காரிகள். அப்படியில்லாமலா இப்படிப் பேசுகிறீர்கள்.

தலைவி:— சில் என்று அழையாதீர்கள் என்று முதன்முதலில் நீதானே சொன்னாய்.

உள்:— அது ஒரு குற்றமா? நீங்கள் பாடிய பாட்டின்படியே கண்ணன் குணங்களை அநுபவிப்பதினால் உங்கள் வார்த்தையைக் கேட்க முடியாவிட்டால் அது என் குற்றமா? ஆனால் நீங்கள் பாடியதும் குற்றமாகத்தான் முடியும். இது எதற்கு? நானே கெட்டிக்காரியாயிருந்தால் இருந்துவிட்டுப் போகிறேன். நான் இப்பொழுது எழுந்ததும் என்ன செய்யவேண்டும்?

தலைவி:— தாமதியாமல் எங்களோடு கலந்து கொள்ளவேண்டும். நாங்களெல்லாருமிருக்க, எங்களுக்கில்லாத வேறென்ன உனக்குமாத்திரமிருக்கிறது? எங்களை விட்டுத் தனியே பாடி அவனை அநுபவிக்க.

உள்:— எல்லாரும் வந்துவிட்டார்களா?

தலைவி:— ஆம். வந்துவிட்டார்கள்.

உள்:— ஆனால் எல்லாரும் உள்ளே வாருங்களேன்.

தலைவி:— நீ வெளியே வந்து எல்லாரும் வந்துவிட்டார்களா என்று எண்ணிப் பார்த்துக்கொள்.

தலைவி:— நான் வெளியே வந்தும் செய்யவேண்டிய காரியமியாது?

தலைவி:— நின்குழலை வென்ற குளிர்வாயால் நாதமாயனைப்பற்றிப் பாடவேண்டும்.

**எல்லேயிளங்கிளியே......பாடேலோ ரெம்பாவாய்.**

நல்லஎன்தோழிகாள்! நலமெய்த வாரீர்
வெல்லற்கரியவோர் வேழத்தைக்கொன்று
மல்லரை மல்லினில் மாற்றழியச்செய
வல்லனைமாயனை வாயினால்வாழ்த்துவாம்.

(பாடிக்கொண்டே வெளியேவந்து கலந்துகொள்கிறாள்)

**ஐந்தாமங்கம் மூன்றுங்களம் முற்றிற்று.**

**ஐந்தாமங்கம் முற்றிற்று.**

சுபம்.

# மார்கழி நோன்பு

அல்லது

# ஸ்ரீ ஆண்டாள் திருமணம்.



## ஆறாமங்கம் - முதற்களம்.

இடம்:— நந்தகோபன் அரண்மனை.

"வாயிலில் ஓர் சேவகன் நின்றுகொண்டிருக்கிறான்."

அப்ப அப்பா! அரண்மனையில் வேலைபார்ப்பது கத்தி நுனியை நாக்கால் நெருடுவது போலாம் என்பர்கள். அது உண்மை. சூரியனுக்காவது ஓய்வு இருக்கும். அரண்மனைச் சேவகர்கள் அப் பெயரையே கேட்டறியார்கள். இரவு முழுதும் தினந்தோறும் விழித்திருப்பது என்றால் அது இலகுவான காரியமா? ஒரு நாளா இரண்டு நாளா? வருஷம் முன்னூற்றறுபது நாளுமே இப்படித்தான். இப்பொழுதோ விடியுங் காலமாகிவிட்டது. இனிப்பயமில்லை. அதோ தோரண வாயிற்காப்போன் உறங்கவில்லையா? அதுபோல் நானும் சிறிது சாய்ந்துகொள்ளுகிறேன் (சாய்ந்து கொள்ளுகிறான்).

"ஆய்ச்சியர்கள் பிரவேசிக்கின்றனர்."

ஒருத்தி:— வாயிற்காப்பவன் உறங்குகிறான். நாம் அவனறியாமல் உள்ளே நுழைந்துவிட்டால் என்ன?

மற்ருெருத்தி:— ஆம் சகி! அதுதான் நல்லது. அவன் விழித்துக்கொண்டால் முதன்முதலில் சகுனத் தடைபோல் ஒருவேளை தடுத்தாலும் தடுத்துவிடுவான்.

தலைவி:— சகிகாள்! இவன் தடுத்தாலும் சரி, தடுக்காவிட்டாலும் சரி, இவனுக்குத் தெரியாமல் நாம் உள்ளே நுழைவது நியாயமாகாது. நந்தகோபன் கோயில்காப்பானே! எழுந்திரு.

வாயிற்காப்போன் (விழித்தவாக்கில்) யாரது?

தலைவி:— உள்ளே செல்லவேண்டும்.

வா:— பெருமூச்சுடன் போர்படி ஜாடைகாட்டி விடுகிறன்.

(எல்லாரும் தோரணவாயிலை அடைகின்றனர்.)

தலைவி:— தோரண வாயிற்காப்போனே! மணிக் கதவந் தாள்திறக்கவேண்டும். எழுந்திரு.

தோ காப்பவன்:— (திடுக்கிட்டு எழுந்து) யாரது? என்னையேன் எழுப்புகிறீர்கள்?

தலைவி:— உள்ளே போகவேண்டும்.

தோ:— இரவு நேரத்தில் உள்ளே விடமுடியாது.

தலைவி:— நாங்கள் ஆயர் சிறுமிகள் தான்.

தோ:— நீங்கள் எதற்காக வந்தீர்கள்?

தலைவி:— நோன்பிற்குப் பறை பெறுவதற்காக.

தோ:— விடிந்தபின் வாருங்கள் பறை பெறலாம்.

தலைவி:— நாங்கள் இப்பொழுதே பறை பெறுவதற்குப் போத்திரம் கொண்டுளோமே.

தோ:— உங்களுக்குப் போத்திரம் இருந்தால் நான் என்ன செய்யமுடியும்? எஜமானன் உத்தரவின்றி உங்களை உள்ளே விடமுடியாது.

தலைவி:— மாயனார்மணிவண்ணன் நேற்றே எங்களை விடிவோரை வரும்படிக்குத் திருவாய் மலர்ந்தருளியிருக்கின்றனனே.

தோ:— அதெல்லாம் எனக்குத் தெரியாது. விடிந்தபின் வாருங்கள். ஆக்ஷேபிக்கவில்லை.

தலைவி:— தன்னைத் துயில் எழுப்பிப் பறைகொள்ளும்படி கூறி இருக்கின்றனனே. விடிந்தபின் வந்தால் நாங்கள் எப்படி அவனை யெழுப்பமுடியும்?

தோ:— உங்களை நான் எப்படி நம்பமுடியும்?

தலைவி:— வேறொரு காரியத்திற்காக நாங்கள் வரவில்லை. நோன்பு நோற்கும் நாங்கள் பொய் சொல்ல மாட்டோம் தூயோமாய் வந்தோம்.

தோ:— நீங்கள் பொய் சொல்லமாட்டீர்கள் என்பதையும் உங்கள் வார்த்தை கொண்டுதானே நம்ப வேண்டியிருக்கிறது.

*தலைவி:— (கெஞ்சிய முகத்துடன்) முதன் முதலில் நோன்பிற்குச் சகுனத்தடைபோல் தடுத்து விடாதேயப்பா! உனக்குப் புண்ணியமுண்டு. சகிகாள்! இவரைப் பிரார்த்தியுங்கள்.*

எல்லோரும்:—

நாயகனாய்நின்ற நந்தகோபனுடைய
கோயில்காப்பானே! கொடிதோன்றும் தோரண
வாயில்காப்பானே! மணிக்கதவம் தாள்திறவாய்
ஆயர்சிறுமியரோமுக்கு அறைபறை.
மாயன் மணிவண்ணன் நென்னலேவாய் நேர்ந்தான்
தூயோமாய் வந்தோம் துயிலெழப்பாடுவான்
வாயால் முன்னமுன்னம் மாற்றாதே யம்மா! நீ
நேயநிலைக்கதவம் நீக்கேலோரெம்பாவாய்

*(தோ.— வாயற்காப்போன் கதவைத்திறக்க ஆய்ச்சியர்கள் உள்ளேநுழைகின்றனர்).*

*தலைவி:— சகிகாள்! நாம் முதன் முதலில் கண்ணனை யெழுப்பிவிடக்கூடாது. முந்துற, நமக்குக் கண்ணனை அநுபவிக்கத் தந்துதவிய நந்தகோபனையும் அசோதையையும் எழுப்பவேண்டும். பின்னர் கண்ணனையும் பலதேவனையும் எழுப்புவோம்.*

,, *அப்படியே செய்வோம் (பாடுகின்றனர்)*

அம்பரமேதண்ணீரே சோறே அறஞ்செய்யும்
எம்பெருமான்! நந்தகோபாலா! எழுந்திராய்
கொம்பனார்க்கெல்லாம் கொழுந்தே! குலவிளக்கே!
எம்பெருமாட்டி! யசோதாய்! அறிவுறாய்

அம்பரமூடறுத்தோங்கி உலகளந்த
உம்பர் கோமானே! உறங்காது எழுந்திராய்
செம்பொற்கழலடிச் செல்வா! பலதேவா!
உம்பியும் நீயும் உறங்கேலோரெம்பாய்.

*தலைவி:— சகிகாள்! நாம் ஆத்திரப்பட்டு எழுப்பும் முறையிற்சிறிது பிசகிவிட்டோம். பெரியோர்களை எழுப்பியபின்னர் நப்பின்னையை நாம் எழுப்பியிருக்க வேண்டும். முந்துறவே "உம்பர் கோமானே! உறங்காதெழுந்திராய்" என்று கண்ணனை யெழுப்பி விட்டோம். நப்பின்னையினுடைய புருஷகாரமில்லாவிட்டால் நாம் கண்ணனை அநுபவிக்க முடியாது. ஆகையால் புருஷகாரத்திற்காக அவளை முதலில் எழுப்புவோம்.*

*ஒருத்தி:— ஓஹோ! நப்பின்னையை முன்பு எழுப்பாததற்காகக் கள்ள உறக்கம் கொள்கின்றானோ?*

*தலைவி:— ஆம். சகி! அவன் சுபாவமே இது தான். இப்பொழுது மட்டும் அன்று. எப்பொழுது ஆயினும் அவன் தன்னைப் புருஷகாரமில்லாமல் அநுபவிக்கவிடமாட்டான்.*

*,, ஆகில் அவளைச் சீக்கிரம் நீயே எழுப்பு நேரமாகிறதே?*

*தலைவி:— சகி! நப்பின்னாய்! கந்தங்கமழும் குழலி! எப்பொழுதும் மதஜலத்தைப் பெருகவிடும் கரியினைப் போன்றவனும் எதிரிகளிடமிருந்து ஓடவேண்டா தோள்வலிமை படைத்தவனுமான நந்தகோபன் மரு*

மகளே! எழுந்து கதவைத்திற. பொழுது விடிந்தது. கோழி கூவியாகிவிட்டது. பந்தல்போல் படர்ந்த குருக்கத்திக்கொடியின் மேலிருந்து விடிந்தமைக்கடையாளமாகக் குயிலினங்கள் காலையில் விருதாவளிபடித்தெழுப்பும் பாடகர்கள் போலப் பலகாலும் கூவுகின்றன கேள். (பதிலில்லாமையால் ஜன்னலண்டை வந்து உற்று நோக்கி) சகிகாள்! நப்பின்னை நமதுற்ற பந்துவான கண்ணனுடன் பந்தாடிக் கொண்டிருந்தனள் போலத் தோன்றுகிறது. அவள் பந்தாடியதால் மிகவும் அயர்ந்து உறங்குகின்றனள்.

ஒருத்தி:— நம்மைப்போலப் பிரிந்திருந்தாலன்றோ உண்ணுதுறங்காதிருக்கப்போகிறாள் பந்துகைப் புகுந்த பின்னர் அவள் உறங்குவதற்கென்ன?.

தலைவி:— அடி பந்தார் விரலி! நீயுமவனும் மைத்துன்மையாடி ஒருவருக்கொருவர் ஒன்றுக்கு ஒன்பது சொல்லி விளையாடும்போது, உன் பக்கத்திலே நின்று அவன் தோல்விக்கு வசை பாடுவோம். அழகிய மென்னடை யன்னம்போல் வந்து, நின் சொந்தாமரைக் கைகளிலணிந்த வளைகள் குலுங்கக் கதவைத் திற.

உந்துமதகளிற்றன் ஓடாத தோள்வலியன்
நந்தகோபாலன் மருமகளே! நப்பின்னாய்!
கந்தங்கமழும் குழலீ! கடைதிறவாய்
வந்தெங்கும் கோழியழைத்தனகாண்—மாதவிப்
பந்தல்மேல் பல்கால் குயிலினங்கள் கூவினகாண்
பந்தார் விரலி! உன்மைத்துனன் பேர்பாடச்
செந்தாமரைக்கையால் சீரார்வளை யொலிப்ப
வந்துதிறவாய் மகிழ்ந்தேலோரெம்பாவாய்.

ஒருத்தி:— சகி! இனி நாம் கண்ணனை யெழுப்ப வேண்டியதில்லையோ?

தலைவி:— ஏன் வேண்டாம்? இனித்தான் அவனை எழுப்பவேண்டும்.

,, அவன் நப்பின்னையிட்ட கட்டளைப்படி நடப்பவன் என்றனையே. அவளை யெழுப்பினலே அவன் எழுந்து வந்துவிடுவனே என்று நினைத்தேன்.

தலைவி:— நான் சொல்வது பொய்யா? ஜன்னல் வழியே உள்ளே உற்று நோக்கிப் பார், அவன் அவளிடம் எவ்வளவு மயங்கி மண்டிக்கிடக்கிருன் என்பது தெரியவரும்.

,, (அவ்வண்ணமே உற்றுநோக்கி ஆச்சரியத்துடன்) ஆம் சகிகாள்! உள்ளே பாருங்கள். என்ன ஆச்சரியம்! படுக்கையறைக்குத்தான் என்ன ஜோடிப்பு! தந்தத்தினுல் அழகுபடச் சித்திரித்து வேலைகளமைக்கப்பட்ட நல்ல கால்களுடன் கூடிய ஓர் கட்டில். அருகே குத்துவிளக்கு எரிந்துகொண்டிருக்கிறது. கட்டிலின்மேல் மெத்தென்ன பஞ்சசயனம் விரிக்கப்பட்டுள்ளது. அப்பஞ்சசயனத்தில் தேனெழுகு பூங்குழலினளும், செவ்வாயினளும், சிற்றிடையினளுமான நப்பின்னையின் செப்பெனத் திகழும் கொங்கைகளில் தன்னையே பதியவைத்து, தாமரைமொட்டில் வண்டுபோலும், மாணிக்கச் செப்பில் சிமிள்போலும் படிந்து கிடக்கின்றனன். (எல்லோரும் ஆவலுடன் ஜன்னலண்டை வந்துள்ளே உற்றுநோக்குகிறார்கள்.)

தலைவி:— (ஜன்னல்வழி உற்றுநோக்கி) அகன்ற மார்பினனே! நாங்கள் வந்தவுடன் சடக்கெனத் துயிலெழுந்து வாராவிடினும் அங்கிருந்தே ஒரு வார்த்தை யாயினும் கூறக்கூடாதா? உன்கூட இருக்குமவள் புறப்பட்டுவரவொட்டாளாகில் அங்கிருந்தே "வருந் தேல்மின்" என்று ஒரு வார்த்தை கூறுவதுமரிதோ? (சகிகளை நோக்கி) சகிகாள்! நப்பின்னையுடன் அவன் சேர்ந்திருப்பதால் நமது காரியம் விரைவில் நிறை வேறுமென்றிருந்தோமே? நப்பின்னையே யிப்பொழுது நம் காரியம் தாமதிப்பதற்குக் காரணமாயிருக்கிறாள். என் வார்த்தைக்கு மறுமாற்றம் சொல்லப் புகுந்த அவனை அவள் தன் கண்ணால் ஜாடைகாட்டிப் பேசவொட்டுகிறிலள். நாம் மையிட்டெழுதோம் என்று இருக்கிறோம். அவளோ கண்ணில் மையிட்டு அவ்வழகால் அவனை அகப்படுத்திக்கொண்டு இறுமாந் திருக்கின்றனள். (உள் நோக்கி) மையிட்டழகாய் அகன்ற கண்ணுடையவளே! நீ உன் கண்ணழகால் சொன்ன சொற்கேட்டு நடக்கும் உன் மணாளனை எழுப்பித்தருவாய் என்றிருந்தோம். நீயோ அவனைப் பேசவும் ஒட்டுகிறிலை. க்ஷணகாலம்கூட நீ யவன் பிரி வைப் பொறுக்கமுடியாதவளாயிற்றே. உன்னைப் போலத்தானே நாங்களும்? ஒரு க்ஷணநேரம் எங்க ளுக்காக அவனை யெழுப்பி, அவன் எழுந்திருக்கும் போதுண்டான பிரிவைப் பொறுத்துக்கொள்ளக் கூடாதா? இதுகூட நீ செய்கிறதில்லை. உண்மை யாகச் சொல்லுகிறேன். இது உனக்குத் தகாது.

குத்துவிளக்கேரிய......தகவேலோரெம்பாவாய்.

ஒருத்தி:— சகி! ஆச்ரிதரக்ஷணம் பண்ணுவதே சுபாவமாகவுடைய நம் நாதன் இனியும் ஏன் வரவில்லை? நப்பின்னையை "இது தகாது" என்று நீ சிறிது சினந்து கூறியதை அவன் பொறுக்கவில்லைபோலும்! ஆகையால் இப்பொழுது நீ நப்பின்னையழகைப் புகழ்ந்து இருவரையும் ஒரே சமயத்தில் எழுப்பிப்பார் அவன் அவசியம் வந்துதிருவான்.

தலைவி:— அப்படிச் செய்தாவது பார்ப்போம். முப்பத்துமுக்கோடி தேவர்களுக்கும் துன்பம் வரும் முன்பே சென்று அவர்களது நடுக்கத்தைத் தொலைக்கும் பலமுடையோய்! துயில் எழு. கடல்படா வமுதான உன்னைவிட்டு கடல்படு அமுதம் விரும்பும் தேவர்கட்கே உதவும் நீ, உன்னையன்றியிலாத அபலைகளான எங்களைப்பிரிந்துநோவுபட்டபிறகேனும் வந்து ரக்ஷிக்கக்கூடாதா? அண்டினோரைக் காப்பதும், விரோதிகளுக்குத் தீமைகள் செய்வதுமன்றோ? உன் சுபாவம். இப்பொழுது நீ அண்டினோருக்கும் தீமைசெய்யும் சிரீதானோ? எங்களுக்காக நீ செய்யவேண்டிய காரியமியாது? ஒன்றுமில்லையே. விமலா! துயிலெழு. அதுவே போதும். செப்புப்போன்ற மென்கொங்கையும், செவ்வாயும், சிறிய மருங்குலும் படைத்த நப்பின்னை நங்காய்! இலக்குமி போன்றவளே! துயிலெழு.

நப்பின்னை:— (உள்ளிருந்தே) நான் எழுந்திருந்து உங்களுக்குச் செய்யவேண்டியதென்ன?

தலைவி:— (தனக்குள்) ஒருமட்டுக்கு எழுந்தாளம்மா! (வெளியில்) நீ எழுந்து விசிறியும் கண்ணாடியும் உன் மணாளனும் தரவேண்டும். தந்து இப்போதே பிரிந்து வருந்தும் எங்களை உன் கணவனோடு கூட்டி நீராட்டவேண்டும். அவன் அழகில் நாங்கள் ஈடுபட்டவர்களானாலும், நீ அவனைத் தந்தால் "நீ தந்த கண்ணன்" என்று அவனிடம் நாங்கள் மிகவும் ஈடுபடுவோம்.

"முப்பத்துமூவ ரமரர்க்குமுன்சென்று
கப்பந்தவிர்க்கும் கலியே! துயிலெழாய்
செப்பமுடையாய்! திறலுடையாய்! செற்றார்க்கு
வெப்பம்கொடுக்கும் விமலா! துயிலெழாய்
செப்பென்ன மென்முலைசெவ்வாய் சிறுமருங்குல்
நப்பின்னை நங்காய்! திருவே! துயிலெழாய்
உக்கமும் தட்டொளியும் தந்துஉன்மணாளனை
இப்போதேஎம்மை நீராட்டேலோரெம்பாவாய்."

(நப்பின்னை கதவைத் திறந்து வெளியே வருகின்றனள். ஆய்ச்சியர் புன்முறுவலுடன் அவளை வரவேற்கின்றனர்)

தலைவி:— சகி! நீ யிருந்தும் என் இவ்வளவு தாமதம்?

நப்பின்னை:— நானும் மூங்களிலே ஒருத்தி தானே? நாம் எல்லோரும் சேர்ந்து கண்ணனை எழுப்ப வேண்டியிருக்க, நீங்கள்மட்டும் நானில்லாமல் அவனை

எழுப்ப ஆரம்பித்தீர்களன்றோ? அதனால்தான் இது வரை தாமதிக்கும்படி செய்தேன். இனி நாம் எல்லோ ரும் சேர்ந்து அவனை எழுப்புவோம் வாருங்கள்.

(எல்லோரும் உள்ளே செல்கின்றனர்)

தலைவி:— கறக்கும் கலங்கள் பொங்கும்படி பால் சொரியும் வள்ளல் பசுக்கள் வாய்ந்த நந்தகோபன் திரு மகனே! அண்டினவரை ஆதரிப்பதில் திண்மையுடைய பெரியோய்! உலகினில் காணக் கூசாமல் வந்து அவதரித்த சுடரே! துயிலெழு. சத்ருக்கள் வலியிழந்து தோற்று உன்னடிக்கீழ் வீழ்வதுபோல நாங்களும் உன் குணத்திற்குத் தோற்றுவந்தோம். மாற்றார் உனது அம்புகளுக்குத் தோற்றனர். நாங்கள் உன் குணங்களுக் குத் தோற்றோம். தோற்ற நாங்கள் எல்லோரும் ஆற்ற கின்றிலோம். தோற்கடித்த நின் குணங்களைப் பாடி யுனக்குப் பல்லாண்டுபல்லாண்டாகமங்களங்கள் உண் டாகவேணும் என்று ஆசாஸிக்கவந்தோம். உன்னிட முள்ள நசையால் உயிரைவிடமுடியவில்லை. பிரிவாற் றுமையிருந்தவிடமிருக்கவொட்டுகிறதில்லை. ஆகையால் நீ வந்து எங்களைக் கைகொடுக்கவேண்டியிருக்க, நாங் களே வந்து நின் புகழ்பாடாநின்றோம். கண் விழித் தருள்வாயாக. பங்கயலோசன! அகன்று அழகிய விப்பார் முழுதும் தார்வேந்தராய் அரசாண்ட மன்ன ரெல்லாம் தம் தமது அபிமானங்களை விட்டு ராஜ்யாதி காரத்தைத் துறந்து உன் பாணங்களுக்குத் தோற்று உன் ஸிம்ஹாஸனத்தின் கீழே கும்பிப்படுகொடு கிடப் பதைப்போல நாங்களும் எங்கள் பெண்தன்மையழிந்து

வேறு சுகாநுபவங்களை இறையும் எண்ணுமல், நின் பள்ளிக்கட்டில்கீழே கிட்டிவிட்டோம். "கணவன் வந்து கை கொடுக்கிடில் வாழ்வோம்" என்று இருந்த விடத்திலிருப்பே பெண்தன்மைக்குச் சேரும். எங்கள் ஆற்றுமை அப்படியிருக்கவொட்டுகிறதில்லையே? கிண்கிணி (சலங்கை) போல் பாதி மலர்ந்த தாமரைமலர் போன்ற கண்களைச் சிறுகச்சிறுக விழித்து எம்மேல் கடாக்ஷ அமிருதத்தைப் பொழியக் கூடாதா? நீரிலாமல் வாடிய பயிர்களில் ஒரே தடவையாக வெள்ளத்தைப் பாய்ச்சினுல் அவை பயிராகாவன்றே? அதேபோல் முதல் தடவையிலேயே நினது கடாக்ஷ அமிருதத்தை முழுதும் எம்மேல் பொழிந்திடில் அதை எங்களுக்கு அநுபவிக்கு மாற்றல் கிடையாது. வாடும் பயிருக்குக் கொஞ்சம் கொஞ்சமாக ஜலம் பாய்ச்சுவதைப் போலச் சிறுகச்சிறுக எங்கள்மேல் விழிக்கவேண்டும். பின்னர் நாங்கள் முழுப்பார்வையும் தரிக்கும் ஆற்றல் படைத்தனம், கோபகாலத்தில் சூரியன்போலும் குளிர்ந்த காலத்தில் சந்திரன்போலுமுள்ள இரண்டு கண்களாலும் எங்கள்மேல் நோக்குவாயாகுல், நாங்கள் அவஸியம் அநுபவித்தேவிடவேண்டிய எங்கள் துக்கம் எல்லாம் தொலைந்துபோம். ஆகையால் கடிதிற் கண்பார்த்தருள்வாயாக.

ஏற்றநலங்கள்......எங்கள்மேல் சாபமிழுக்தேலோ ரெம்பாவாய்.

**கண்ணன்:—** (எழுந்து உட்கார்ந்து) வாருங்கள் வாருங்கள். நீங்கள் வெகுநேரம் காத்து நிற்கிறீர்களோ?

நான் பெரிய குற்றம் செய்துவிட்டேன். நீங்கள் வரு முன்பே நான் எழுந்து உங்கள் காரியத்தை—இல்லை இல்லை—நமது காரியத்தைச் செய்யவேண்டியிருக்க, நீங்கள் எல்லோரும் வந்து பலபடிப்பட எழுப்பும்வரை யிலும் நான் பேசாதே கிடந்தேனே? நீங்கள் இக் குற்றத்தைப் பொறுத்துக்கொள்ளவேண்டும். நான் செய்யவேண்டிய காரியத்தைச் சொல்லுங்கள், அப் படியே செய்து சடுதியில் முடிக்கிறேன்.

தலைவி:— பூவைப்பூவண்ணா? தூங்கி எழுந்த நீ இங்கிருந்தே எங்கள் காரியத்தை ஆராயக்கூடாது. அழகிய ஆஸ்தானமண்டபத்தில் ஸிம்மாஸனத்திலிருந்து யாம் வந்த காரியம் ஆராய்ந்தருளவேண்டும். மழைக் காலங்களில் மலைக்குகைகளில் படிந்துகிடந்துறங்கும் சீரியசிங்கம், உறங்கி எழுந்து, தீப்பொறி பறக்கச் செங்கண் விழித்து, பிடரிமயிர் (கேசரம்) சிலும்பும்படி நாலாபக்கத்திலும் புடைபெயர்ந்து தன் உடம்பை உதறி நிமிர்ந்து, கருச்சித்துப் புறப்பட்டுப் போவதுபோல நீயும் நின் கோயில் நின்றும் இதோ இந்த மணி மண்டபத்துக்கு எழுந்தருளி வெற்றியாஸனத்தில்மர்ந்து எங்கள் காரியத்தை ஆராய்ந்தருளவேண்டும்.

மாரிமலை.........ஆராய்ந்தருளேலோரெம்பாவாய்.

கண்ணன்:— (புன்முறுவலுடன்) நன்கு வருணித்தனை. அப்படியே செய்வோம்.

(கண்ணன் முன்பும் கோபியர் பின்புமாக நடந்து செல்கின்றனர்)

நப்பின்னை:— சகிகாள்! நம் நாதனுடைய நடையழகைப் பாருங்கள்! முன்னவதாரத்தில் இவன் உலகிழந்த இந்திரன் ஆர்த்திதீரும்படி, இவ்வுலகை யெல்லாம் கல்லும் கானும் பாராமல் நாம் கூடக் கூசிப்பிடிக்கும் மெல்லியவடியிட்டதுபோல, இப்பொழுது நமது ஆர்த்திதீரும்படி தன்னடிகளின் மென்மைபாராதே நடந்து செல்கின்றனனே! முன்பாவது இரண்டடி. இப்பொழுது எட்டுப்பத்தடி அன்றோ? இவ்வடிகளுக்கு மங்களமுண்டாகட்டும்.

ஒருத்தி:— சகி! முன் அவதாரத்தில் பிராட்டியைப்பிரித்த பாபியிருந்த தென்னிலங்கையை, ப்புலி கிடந்தபுதரை அடைவதுபோலக் கானகத்தில் எவ்வாறோ இம் மெல்லடியிட்டு நடந்து சென்று திறல் காட்டினனே! இதற்கு மங்களமுண்டாகட்டும். அங்கே ஒருத்திக்காக நடந்தான். இங்கே பலருக்காக நடக்கிறான்.

தலைவி:— ஏன் வேறு அவதாரத்திற்குப் போக வேண்டும்? இவ்வவதாரத்திலேயே பாருங்கள். இம் மெல்லடி கொண்டுதானே சகடாசுரனின் உருக்குலைய உதைத்தனன். அப்புகழுக்கு மங்களம் பாடுவோம். இதுமட்டுமா? கன்றுருவெடுத்து நலிய வந்த அசுரனைக் கருவியாகக் கொண்டு கபித்தாஸுரன் மேல் வீசினனே. என்ன துணிவு! அவ்விருபகைவரும் சேர்ந்து கொண்டுவிட்டால் என்ன ஆகும்? அவ்வமயம் எறியும் பொழுது மடித்த பாதத்திற்கு மங்களம் பாடுவோம், குன்று குடையாக வெடுத்தானே! அப்

பொழுது அப்பாரத்தையெல்லாம் இம்மலரடிகள் தானே தாங்கின! இவன் கையிலுள்ள பகை கெடுக்கும் வேல் தானே "பகைவருள்ளவிடம்" என்று கூடப்பாராமல் இவனது பாதங்களை நடக்கச் செய்கிறது. இவ் வேலும் கையுமாயிருப்பதற்கு யாதொரு தீங்கும் வாராம லிருக்க வேண்டுமே! இதற்கெல்லாம் மங்களம் பாடுவோம்.

(கண்ணன் ஆஸ்தான மண்டபத்தண்டை செல்கிறார்)

தலைவி:— நாதா! இவ்விடத்தில் தான் எங்கள் காரியத்தை ஆராயவேண்டும். உண்மையாக எங்கள் காரியத்தைச் சுருக்கிக் கூறிவிடுகிறேன். என்றைக்கும் உன் வீர சரிதம்பாடி உன்னை அநுபவிக்க வசிசைந்த இன்று வந்தோம். இதற்கு இசைந்திரங்க வேண்டும்.

அன்றி.........இரங்கேலோரெம்பாவாய்.

எல்லோரும் உள்ளே செல்கின்றனர்.

ஆறும் அங்கம் முதற்களம் முற்றிற்று.

# மார்கழி நோன்பு

அல்லது

# ஸ்ரீ ஆண்டாள் திருமணம்.

---

## ஆறுமங்கம் - இரண்டாங்களம்,

இடம்:— நந்தகோபன் அரண்மனை. ஆஸ்தான மண்டபம்.

[ஸிம்ஹாஸனத்தில் கண்ணன் அமர்ந்திருக்கிறான் அருகே ஆய்ச்சியர்கள் நிற்கின்றனர்].

கண்ணன்:— சிறுமியர்காள்! உங்களுக்கு வேண்டுவதென்ன? நீங்கள் வந்த காரியத்தைச் சொல்லுங்கள்.

தலைவி:— எங்களிடம் பெருமயக்குடை மணிவண்ணா! மார்கழி நீராடவந்தோம். அந்நோன்பிற்கு உபகரணங்கள்வேண்டும். எங்கள் பிரதிபந்தகத்தைப் போக்கிவிடு. கூடவே நாங்கள் உன் சேவகம்பாடி மகிழ வேண்டும்.

கண்ணன்:— மார்கழிநீராட்டம் என்றால் என்ன?

தலைவி:— இது தெரியாதா? இது பிரஸித்தமான நோன்பு அன்றோ?

கண்ணன்:— யாகம் முதலியவைபோல இது எங்கே கூறப்பட்டிருக்கிறது?

தலைவி:— அவைபோலல்லகாண் இது, நம் பெரியோர்கள் செய்வது. சிஷ்டாசாரத்தைவிட மேற் பிரமாணமேது?

கண்ணன்:— ஆகில் வேண்டுவது சொல்லுங்கள். (இவர்கள் கட்டழகைக் கண்டு இமை கொட்டாமல் பார்த்தவண்ணம் மெய் மறந்திருக்கிறான்).

தலைவி:— நாதா! எங்களிடம் பெருமயக்கென்று நான் கூறியதுண்மையாயிற்றே. சதுரங்கமாடுபவர் போல எங்கள் மதுர அங்கத்தைக் கண்டு அதே கவனமாய் மற்றவற்றை மறந்துவிட்டால் நாங்கள் எப்படி வேண்டிக்கொள்வது? நாங்கள் வேண்டுவதை நீ கவனமாய்க் கேட்பாயாகில் கூறுகிறேன்.

கண்ணன்:— (புன்னகையுடன்) உங்கள் வடிவம் என் கண்ணுக்கு இனிதாயிருப்பதுபோல உங்கள் இனிய வடிவத்தில் உண்டாகும் குரலும் என் செவிகட்கு இனிதாமன்றோ? கூறுங்கள். கேட்டு இன்புறுகிறேன்.

தலைவி:— கேட்டு இன்புற்றால் போதுமா? நாங்கள் வேண்டுவன கொடுக்கவேண்டுமே?

கண்ணன்:— அப்படியே கொடுக்கிறேன்.

தலைவி:— ஞாலத்தை எல்லாம் நடுங்க முழங்கும் பால்போன்ற நிறமுள்ள உன் பாஞ்சஜன்யத்தை ஒத்த சங்கங்கள் வேண்டும்.

கண்ணன்:— வேறு என்ன வேண்டும்?

தலைவி:— மிகவும் பெரிய பறை என்ற வாத்தியம் வேண்டும்.

கண்ணன்:— வேறு.

தலைவி:— பல்லாண்டு பாடி மங்களாசாஸனம் பண்ணுபவர் வேண்டும்.

கண்ணன்:— இன்னும்.

தலைவி:— மங்களதீபம் வேண்டும். கொடிகள் விதானம் முதலியவைகளும் வேண்டும்.

கண்ணன்:— பாஞ்சஜன்யத்தை ஒத்த சங்கங்கள் உலகில் கிடையா. ஆகையால் என் பாஞ்ஜசன்யத்தையே வாங்கிக்கொள்ளுங்கள். பாரோர்களெல்லாம் மகிழக்குடக் கூத்தாடினபோது நான் அரையில் கட்டின பறையைப் பெறுங்கள். பல்லாண்டு பாட நம் அந்தரங்கரில் ஒருவரைத் தருகிறோம். விளக்குக்கு நப்பின்னைப் பிராட்டியையும், கொடிக்குக் கருடக் கொடியினையும், மேற்கட்டிக்கு அத்தாளத்தையும் (உத்தரீய வஸ்திரம்) கொண்டு செல்லுங்கள்.

தலைவி:— ஓரொன்று போதாது. இப்படி இருப்பன பல வேண்டும்.

கண்ணன்:— ஒவ்வொன்று தானே உளது இல்லாதவைக் கெங்கே போவது?

தலைவி:— உனக்குக் கிடையாததொன்றுண்டோ?

கண்ணன்:— எனக்கு என்றால் எளியதாகி விடுமோ?

தலைவி:— ஆலினிலையாய்! ஒரு பாலகனாய் ஆலிலைமேல் மேலொருநாள் உலகெல்லாம் உண்டு வயிற்றிலடக்கிக் கண்வளர்ந்தருளும் அகடிதகடநா ஸாமர்த்தியம் வாய்ந்த உனக்குக் கிடையாதது எது? எங்களுக்காகவாவது அவைகளை உண்டாக்கித் தந்தருள வேண்டும். உன்னை அடைந்தாரைத் தன்னைப்போல ஆக்குவதே உன் சுபாவமன்றோ? அப்படியே உன் பாஞ்சசன்யம் போன்றவைகளைத் தந்தருளவேண்டும்.

## ஒருத்தி...அருளேலோ ரெம்பாவாய்

கண்ணன்:— நீங்கள் இந்த நோன்பினால் என்ன பலன்பெறப் போகிறீர்கள்?

தலைவி:— கூடாரை (சத்ருக்களை) வெல்லும் குண முடைக் கோவிந்தா! உன்தன்னைப் பாடிப்பறை பெறு வதே எங்கள் நோன்பின் பலனாம். பின்னர் நாங்கள் உன்னிடமிருந்து கீழ்வரும் சம்மானம் பெறுவோம். நீ கொடுக்கும் சம்மானம் இந்நாடு புகழும்படி இருக்க வேண்டும். சம்மானமாவன:— கைகளுக்கு இடும் சூடகம், தோள்வளை, காதுக்கு இடும் தோடு, செவிக்கு அலங்காரமாக வைத்துக்கொள்ளும் பூ காலுக்கு இடும் பாடகம்.

கண்ணன்:— சரி. இவ்வளவுதானே?

தலைவி:— இவ்வளவுமட்டுமல்ல. எவ்வளவு அணிகள் உண்டோ, அவ்வளவும் வேண்டும். பல் கலனும் யாமணிவோம்.

கண்ணன்:— சரி. அணிந்துகொள்ளுங்கள்.

தலைவி:— நாங்களணிவதாவது! தனித்திருக்கும் போது நாங்கள் மலரிட்டுக்கூட முடியோம். நீயும் நாங்களும் சேர்ந்த காலத்தில் பல்கலனும் நீயும் நப்பின்னையுமாகப் பூட்ட நாங்களணிவோம்.

கண்ணன்:— பிறகு?

தலைவி:— ஆடை யுடுப்போம்.

கண்ணன்.— (புன்னகையுடன்) ஏன்? இப்பொழுது ஆடையில்லாமலா வந்திருக்கிறீர்கள்?

தலைவி:— நாணத்தால் மௌனமாயிருக்கின்றனள்.

நப்பின்னை:— இதுவரை தாங்களே ஆடை யுடுத்துக்கொண்டனர். நீ உடுத்து உடாகதது உடையன்று என்று இவர்க ளபிப்பிராயம்போலும்.

கண்ணன்:— இரவில் தோட்டத்தில் யான் உன் உடையுடுத்து உங்களை ஏமாற்றினேனன்றோ? அது போல் இவர்கள் என் ஆடையை (பீதாம்பரத்தை) உடுக்கவேண்டுமென்கின்றனர். (தலைவியை நோக்கி)

நாம் ஆடை மாற்றிக்கொள்ளவேணும். அப்படித் தானே?

தலைவி:— (நாணத்துடன்) நோன்பு நாளாகையால் நல்லாடை யுடுப்போ மென்றேன்.

கண்ணன்:— நல்ல ஆடையாவது?

நப்பின்னை:— உடுத்துக் களைந்த நின் பீதக வாடை.

தலைவி:— நீங்களிருவரும் என்னைப் பரிஹஸிக்கிறீர்கள்.

கண்ணன்:— இல்லை இல்லை. உன் உண்மையான ஆசையைக் கூறினோம். மேலே சொல்லு.

நப்பின்னை:— சகி! கூறை பறித்தோடும் கள்வனிடம் கூறை உடுப்போம் என்கின்றனையே! கோழியழைப்பதன் முன்னம் குடைந்து நீராடப்போன போதே இவனும் மறைந்துவந்து, கூறை பறித்துக் குருந்திடை யிருந்து கூறை கொடாமல் வேதனைப் படுத்தியதை நீ மறந்துவிட்டனையா?

கண்ணன்:— (புன்னகையுடன்) தோட்டத்தில் இரவு வேளையில் நீயு மிவளுமாகச் சேர்ந்து ஓர் புதிய பெண்ணின் துகிலைப் பறிக்கவில்லையா? அதுமட்டும் நியாயமா?

நப்பின்னை:— ஆம் ஆம். இரவில் நல்ல காரியம் செய்தனை. புதுப்பெண்ணை இயற்கையிலேயே பெண்ணாகப் பிறந்தவள்போன்றே நடித்துவிட்டனை!

தலைவி:— ஆடை யுடுப்பதோடு முடிந்துவிட வில்லை. அதன் பின்னே எங்கள் கூடவே யிருக்க வேண்டும்.

கண்ணன்:— கூடவே இருந்து நான் செய்ய வேண்டியதென்ன?

தலைவி:— நாம் எல்லோரும் கூடி புஜிக்க (உண்ண) வேண்டும்.

கண்ணன்:— புஜிக்க என்ன வைத்திருக்கிறீர் கள்?

தலைவி:— நினது கைங்கரியமும், பாரதந்திரிய மும்போல ருசிகரமான பாற்சோறும் நெய்யுமிருக் கின்றன.

கண்ணன்:— அவைகளை எப்படிப் புஜிக்க வேண்டுமென்று தெரியுமா?

தலைவி:— ஆம் அறிவோம். நின்றனக்கும் எங்கள் மரபினில் அவதரித்த பின்னர்தானே இவை களை நன்கு அநுபவிக்கத்தெரிந்தது. நாங்கள் தனித் தால் நெய்யுண்ணோம். பாலுண்ணோம். உன்னோடு கூடி, பாற்சோறே தெரியாமல் மூடும்படி நெய்பெய்து, கையில் எடுத்தால் நெய் முழங்கைவரை பெருகலாம்படி அக்கார அடிசில் ஆக்கி, ப்பிரிந்த துன்பத்தை மறந்து குளிர்ந்திருப்போம்.

கூடாரை ..குளிர்ந்தேலோ ரெம்பாவாய்

கண்ணன்:—அப்படியே செய்வோம். என்னையே ப்ராபகமாக (உபாயம்) ப்பற்றி நிற்கும் நீங்கள்தான் எனதாத்மா. ஆகவே உங்கள் விருப்பை நிரப்ப நான் கடமைப்பட்டிருக்கிறேன்.

தலைவி:— குறைவொன்றுமில்லாத கோவிந்தா! எங்களிடம் அறிவு என்பதே இல்லை. ஞான பக்திகளுடைய வாஸனையே வீசினதில்லை. கறவைப் பசுக்களோடு பசுக்களாய்க் காடுமேடு திரிந்து தின்னும் அறிவொன்றுமில்லா ஆயர்தங்குலம் எங்களுடையது. நாங்கள் இக்குலத்தில நீ பிறக்கும்படிக்கு என்ன புண்ணியம் படைத்தோமோ!

கண்ணன்:— (புன்னகையுடன்) நன்றாயிருக்கிறது. முரண்படப் பேசுகின்றனையே. புண்ணியமுளதாம், அறிவில்லையாம். புண்ணியமுடையோருக்குத்தான் அறிவு இருந்து தீருமே.

தலைவி:— நான் முரண்படப் பேசுவதாலேயே அறிவின்மை விளங்கவில்லையா? நாங்கள் அறிவிலிகளேயாயினும் நீ குறைவற்ற கோவிந்தனன்றோ? உன் குறையின்மை (பூர்ணதை) எங்கள் அறிவின்மைக் குறையைப் போக்குமன்றோ? குறைவற்றவ(பூர்ண)னை நீ நிரபேக்ஷனாய் இக்குலத்தில் அவதரித்து, எங்கள் அறிவின்மைப் பள்ளத்தை உன் குறையின்மை மேடுகொண்டு நிரப்பிவிட்டனை யென்கிறேன்.

கண்ணன்:— நீ வழக்காடுவதில் வல்லவள் அன்றோ? அறிவிலாத நீ எப்படி இவ்விதம் வழக்காடு கின்றனை? இதைச் சொல்லு.

தலைவி:— இதுவும் நினது இன்னருளால்தான்.

கண்:— எனக்கு நிறைவுண்டாயினும் இதைக் கொண்டு உங்கள் அறிவின்மைப்பள்ளத்தை எப்படி நிரப்பமுடியும்? மேட்டுக்கும்பள்ளத்திற்கும் நெருங்கிய சம்பந்தம் வேண்டாமோ நிரப்ப?

தலைவி.— நீ யெங்களுக்கு உறவன்றோ? நிறை வாளனான நீ குறைவாளரான எங்களுக்குக் கொடுக்கக் கடமைப்பட்டிருக்கிறாய்.

(கடப்ரஹாம் என்னும் கர்மத்தில் ஒரு நீருள்ள குடத்தை உடைக்க நாயிகாநாயக ஸம்பந்தம் விட்டுப்போம் என்று சாஸ்திரத்தில் கூறப்பட்டிருக் கிறது. இது பழைய காலத்து விவாஹரத்தாகும்)

தலைவி:— போகாது. உன்தன்னோடு உறவு உன் னாலோ நாம் எல்லோராலுமோ போக்கடிக்கமுடியாதது.

கண்:— ஏன்?

தலைவி:— பெரியோர் கூறக் கேள்விப்பட்டிருக் கிறேன்.

கண்:— பெரியோர் கூறியதென்ன?

தலைவி:—

"இன்றாகநாளையேயாக இனிச்சிறிது
நின்றாகநின்னருள் என்பாலதே—நன்றாக
நானுன்னை யன்றியிலேன் கண்டாய் நாரணனே!
நாரணனே நீ, யென்னையன்றியிலை".

கண்:— அப்பெரியார் உன்னைச் சேர்ந்தவர். ஆகையால் இப்படிக் கூறியிருக்கிறார்.

தலைவி:— ஆகில் உன்னாலேயே வெளியிடப்பட்ட திருமந்திரத்தைப் பார். அதின் முதல் எழுத்தான "அகரம்" இவ்வுண்மையை உணர்த்தும்.

கண்:— எப்படி?

தலைவி:— அவ்வெழுத்து ரக்ஷகன் என்கிற அர்த்தத்தைக் காட்டி எமக்கும் உனக்குமுள்ள ரக்ஷ்ய ரக்ஷக ஸம்பந்தத்தை (காப்பாற்றுமுறவு) உணர்த்துகின்றதன்றோ?

கண்:— (தலையை அசைத்து) நன்கு வழக்கறிந்து கூறினை.

தலைவி:— இறைவ! நாங்கள் சிறுமியர். அன்புடையோர். சிறுமையாலும் அன்பினாலும் வந்த அக்ஞானத்தால் செய்த குற்றங்களை எல்லாம் பொறுத்தருளவேண்டும். நீர்மைகுடிகொண்ட உன்னை பரத்வத்தைக் காட்டும் நாராயணன் முதலிய பெயரிட்டுச் சொன்ன குற்றத்தையும் பொறுத்தருளவேண்டும். நீர்

மை ப்ரகாசிப்பதற்கெனப் பிறந்த உனக்குப் பாத்வத்தைக் காட்டும் சொற்கொண்டு கூறுவதைப் பொறுக்க முடியாததுதான். அன்பினால் அறிவின்மையால் அச் சிறு பேர் அழைத்தனம் சீறியருளாதே. நாங்கள் விரும்பிய பறை தருவாயாக.

கறவைகள்......தாராய் பறையேலோரெம்பாவாய்.

கண்:— திங்கள் திருமுகத்துச் சேயிழையீர்! நீங்கள் என்னைப் பெறுவதற்குப் போராத்திரங்கொண்டிருப்பதுபோலத்தான் நானு மிருக்கிறேன். போவோம் வாருங்கள், நமது மனோரதத்தை நிறைவேற்றிக்கொள்ள.

தலைவி:— கோவிந்தா! எமது முடிவைச் சுருக்கமாகக் கூறிவிடுகிறேன். அதன்படி அருள் செய்திடவேண்டும். சிற்றஞ்சிறுகாலையில் வந்து உன் பொற்றாமரை அடி போற்றும் காரணமியாதெனின்?

கண்:— (மெய் மறந்து தனக்குள்) ஆஹா! இம் மங்கை பேசும்போது என்ன அழகு! கோவைச்செவ்வாய்! அமுத ஊற்று! வெளுத்த பற்களின் ஒளி, அச் செவ்வாய்மீது பவளத்தரைமேல், பனிமதி ப்ரகாசிப்பதுபோன் றிருக்கிறது! நான் இந்தச் சந்திரிகையை அநுபவிக்கும் ஓர் சகோரபக்ஷி......

தலைவி:— நான் சொல்வதை நீ கேட்கவில்லையே. நீ வேறு கவனமாயிருக்கின்றனை. என் சொல் காட்டில் காய்ந்த நிலாத்தானோ?

கண்:— செஞ்சொற்கிளியே! நான் ஓர் சகோர பக்ஷி. நீ பேசும்போது நின் செவ்வாயில் வீசும் நிலாவை நான் அனுபவித்துக்கொண்டு இருக்கிறேன். ஆஹா! என்ன அழகு!

நப்:— நாதா! என் சகி தன் விருப்பத்தைத் தெரிவிக்கும் பொழுது அவள் அழகில் நின்மனம் சென்றுவிட்டால் அவள் வார்த்தையை எப்படிக்கேட்டு அதன்படி செய்ய முடியும்?

கண்:— மனம் நிலை நில்லாதது. எனினும் நான் அதையடக்கிக் கேட்க முயலுகிறேன்.

நப்:— என் சகியின் வார்த்தையை ஓர்த்த மனத்தனைய் ஐந்து (பஞ்ச இந்திரியங்கள்) அடக்கி ஆராய வேண்டியிருக்கிறதோ? யோகீசுவரர் போல.

கண்:— ஆம். இவள் அழகு படுத்தும் பாடு இது. (தலைவியை நோக்கி) அழகுக் களஞ்சியமே! மேலே சொல். கேட்கிறேன். (கண்ணை மூடிக்கொள்கிறார்)

நப்:— இது என்?

கண்:— ஒன்று பார்க்கவேணும் அல்லது கேட்க வேண்டும். இப்பொழுது கேட்கப்போகிறேன். கண்ணைத்திறந்தாலிவள் அழகைக் காண்பேனேயன்றி கேட்க முடியாது.

தலைவி:— நான் சொல்வதைக் கவனித்துக் கேட்கவேண்டும்.

கண்:— அப்படியே.

தலைவி:— கன்றுகள் மேய்த்துப் பிழைக்கும் காடு வாழ் சாதியான இடைக்குலத்திலே பிறந்த நீ எங்களைக் கொண்டு அடிமை கொள்ளாமலிருக்கக் கூடாது.

கண்:— நீங்கள் நோன்பிற்கு உபகரணமான சங்கும் பறையும் கொடியும் விளக்கும் விதானமுமன்றோ கேட்டீர்கள். அவைகளைக் கொண்டு போங்கள். வேறு அடிமையாவதென்ன?

(முக்கியமான பறையைக் கொடுக்கிறார்)

தலைவி:— நாங்கள் இன்று இப்பறை கொள்ள வந்தவர்களில்லை. எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்னோடு எல்லா உறவும் கொண்டவர்களாகவே நாங்களிருக்க வேண்டும். அவ்வுறவைத் தெரிவிக்க வந்தோம்.

கண்:— மற்றும் வேண்டுவதென்ன?

தலைவி:— நாங்கள் செய்யுமடிமை உனக்கேயாக விருக்கவேண்டும். உனக்கும் எங்களுக்கும் உவப்பான அடிமை எங்களுக்கு வேண்டாம். மற்ற எங்கள் விருப்பங்களை இதோடு மாற்றிவிடவேண்டும். அடிமை செய்வது எங்களுக்காக என்ற நினைப்பை மாற்ற வேண்டும். இதற்காகவே நாங்கள் வந்தோம்.

கண்:— பின்னையேன் கொடி விதானம் பறை முதலியவற்றைக் கேட்டீர்கள்?

தலைவி:— நாங்கள் நோன்பு என்பதொருவியாஜம் கொண்டுவந்தபடியால் உலகத்தோடு ஒட்டொழுக வேண்டி அவைகளை வேண்டினோம். "நோன்பு நோலுங்கள்" என்று அநுமதித்த கிழவர்களிடம் இவைகளைக் காட்டினால்தான் உன் முகங் கண்டுகளிக்கக் கூறுவர். இந்நோன்பினாலன்றோ உன்னோடு நாங்கள் சேரமுடிந்தது. அதற்காக அவைகளை நாங்கள் வேண்டினோம். உண்மையில் எங்களுக்குப் பறை உனக்காகச் செய்யும் அந்தரங்ககைங்கரியமே.

## சிற்றஞ்சிறு.........யிற்றேலோரெம்பாவாய்.

கண்:— நல்லது, செல்வோம் வாருங்கள். (எழுந்திருக்கிறார்).

தலைவி:— நாதா! முடிவில் ஓர் வேண்டுகோள். அதற்கும் அருளவேண்டும். இவ்வாய்ப்பாடியில் நாங்கள் பறை கொண்ட வழியை, இப்படியே நோன்பு நோற்போரும் பாடுவோரும் நடிப்போரும் கேட்போரும் நினது திருமுகத்துச் செங்கணிறைக் கருணைப்பார்வைக்கு இலக்காகி இன்புறவேண்டும்.

கண்:— அப்படியே ஆகுக.

எல்லோரும் செல்கின்றனர்.

## ஆறுமங்கம் இரண்டாங்களம் முற்றிற்று.

சுபம்.

# மார்கழி நோன்பு

அல்லது

# ஸ்ரீ ஆண்டாள் திருமணம்.



## ஆறுமங்கம் - மூன்றுங்களம்.

இடம்:— திருவரங்கம்.

[ரங்கராஜனும் கருடனும் தனித்துப் பேசிக்கொண்டு இருக்கின்றனர்].

ரங்கராஜன்:— நண்ப! இவ்வுலகில் காமத்தீயை விடக்கொடியதொன்றுமேயில்லை. தீதன்னைத் தொட்டாமல்தான் சுடும். காமத்தீயோ பிரிந்தால் சுடுமதாயுள்ளது. தீயினும் கொடிய இதை நான் எப்படி ஆற்றுவேன்?

கருடன்:— அரசே! தாங்கள் காமத்தை அவ்வளவு இழிவுபடுத்தி விடக்கூடாது. காமத்தைப்போலினிது இவ்வுலகின்கண் உளதோ?

ரங்க:— ஆம், காமம் இனிதானதுதான். அமிருதமாவது அருந்தும்போதுதான் இனிமை பயக்கும். இதுவோ அநுபவத்தை நினைத்தாலே அளவிலா மகிழ்ச்சியூட்டுகிறது. ஆயர் கோலத்திலேனும் அம்மங்கையை நான் அநுபவித்ததை நினைத்தால் இப்பொழுது என்ன ஆநந்தம் உண்டாகிறது!

கருட:— அப்படியிருக்கத் தாங்கள் மிகவும் கவலைப்படுகிறீர்களே?

ரங்க:— கவலையில்லாமல் எப்படி இருக்கமுடியும்? முன் அநுபவத்தைமட்டும் நினைத்துக்கொண்டிருந்தால்போதுமா? பழங்கணக்குப் பசி யாற்றுமா? அவ்வநுபவத்தை இப்பொழுது நினைத்துச் சிறிது மகிழ்வதால்தான் பிரிந்து வருந்து மிந்நிலையிலும் உயிர்வாழ முடிகிறது. இனி அதுவும் முடியாதுபோலிருக்கிறது.

கருட:— ஏன்?

ரங்க:— இதோ பங்குனி போக இன்னும் சில நாட்கள்தான் இருக்கின்றன. பின்னர் என்ன காலம் வரப்போகிறது தெரியுமா? நினைக்கும்போதே உடல் நடுங்குகிறது!

கருட:— வஸந்தகாலம் வரப்போகிறது.

ரங்க:— அப்பா! என்ன கஷ்டம்! அது மதனன் செங்கோல் நடாத்தும் காலம். கூற்றுப்போல் குயில் கூவுங்காலம். ஐயோ......

கருட:— அரசே! அஞ்சவேண்டாம். அக்காலத்திற்குள் தாங்கள் அம்மங்கையைக் கைப்பிடித்துவிடுவீர்கள்.

ரங்க:— இப்பங்குனிக்குள்ளேயா?

கருட:— ஆம்.

ரங்க— எனக்கென்னவோ நண்பன் வார்த்தையில்கூட நம்பிக்கையுண்டாகவில்லை. தைரியத்தை மாசி

யிலும் தூக்கமிலாமல் படுக்கையில் புரண்டுகொண்டே காலம் கழித்தேன். இம்மாதத்திலோ அதுவும் முடியாது. உயிரிருந்தால்தானே இந்தக் கவலையெல்லாம் (பெருமூச்செறிந்து) ஆஹா! அப்பெண்மணியின் அழகை நான் மறுமுறை காணமலா போகவேண்டும்? நல்லது. அடே மாரனே! வஞ்சக! இரும்புகள்தான் உன் பாணங்கள். பூ அரும்புகள் அன்று. அடே பாதக! அவள்மீது மிதுபோல நீ அம்பு எய்கின்றனையோ இல்லையோ? ஐயோ! என் ஆண்மை எல்லாம் மாயமாய் எங்கு மறைந்தன? நண்ப! எனக்கு நம் ராஜ்யம் கைவிட்டுப்போய்விட்டால் எவ்வளவு வருத்தமுண்டாகும்!, அதைவிடப் பன்மடங்கு இப்பொழுது வருத்தம் பொங்கி எழுகின்றது. என்ன செய்யலாம்? (கருடன் மீது சாய்ந்துகொள்கிறார்).

கருட:— (தனக்குள்) நம் அரசனின் நிலைமை மிகவும் மோசமாகிவிட்டது. இவ் வருத்தத்தை எப்படியாவது நாம் மறக்கடிக்கவேண்டும் (வெளியில்) அரசே! தாங்கள் முன்பு பாணன் என்பானோர் அசுரனைவென்று பெரும் புகழ் படைத்திருக்கிறீர்கள். ஆனால் இப்பொழுது இங்கே பஞ்சபாணர்போராட்டம் பொறுக்கக் கூடியதாயில்லை. தாங்கள் கூட அவரை வெல்லமுடியாது போலிருக்கிறது.

ரங்க:— (எழுந்து) பஞ்சபாணரா? ஒருவன் போனான், ஐந்துபேர் முளைத்திருக்கிறார்களா? எங்கே அவரை? (வில்லெடுத்து நாணேற்றுகிறார்)

கருட:— தாங்கள் அவரை வெல்வது அரிது.

ரங்க:— ஏன் நீயே இப்படிச் சொல்லுகிறாய்?

கருட:— தாங்கள் உள்பட மூவுலகையும் அடக்கு மாற்றல் படைத்தவரவர். ஆகலின் இவ்விதம் கூறினேன்.

ரங்க:— (கோபத்துடன்) என்னையடக்கும் ஆற்றலா? இனிமேலல்லவா அது தெரியப்போகிறது காண்பி, அவரிருக்குமிடத்தை. இவருக்கும் பரமசிவன் ஸஹாயத்திற்கு வந்திருக்கிறானோ?

கருட:— இல்லை இல்லை. அவன் இவர் உடலை எறித்துவிட்டான்.

ரங்க:— எறித்தது மன்மதனையன்றோ?

கருட:— ஆம். அவரைத்தான் பஞ்சபாணர் என்று கூறினேன். அவருக்கு ஐந்து பாணங்களுண்டன்றோ?

(ரங்கராஜன் நாணித் தலைகுனிகிறார்)

கருட:— (புன்னகையுடன்) வீரனுக்கும் வில்லுக்கும் சேர்ந்தாற்போல் நாண் (வெட்கமுமாம்) ஏறிவிட்டதே!

ரங்க:— நண்ப! நீ கூட என்னைப் பரிஹஸிக்கின்றனையே. நல்லதருணம் பார்த்தனை. ஐயோ! அந்த சுந்தரிக்காக நான் என்ன பாடெல்லாம் படவேண்டியிருக்கிறது! அடி சுந்தரி! உனக்குக் கொஞ்சமும் தயவில்லையா?

(கையிலிருந்து வில் நழுவுகிறது. சோர்ந்து உட்கார்ந்துவிடுகிறார்)

கருட:— (தனக்குள்) சிறிது மறக்கடித்தேனு யினும் மறுபடியும் அந்நினைவுக்கே நம் அரசன் வந்து விட்டான். ஆகட்டும். சமாதானப்படுத்திப் பார்க் கிறேன். (வெளியில்) ஆழ்மனமுடையீர்! தங்கள் மனத்திலும் துக்கம் தலைதூக்கலாமா? கப்பல் சென்று லும் கடல் கலங்குவதுண்டோ?

ரங்க:— நண்ப! கப்பல் சென்றால் கடல் கலங்கா தென்பதுண்மையே. ஆனால் மலைகொண்டு அலைகடல் கடைந்தபோது கடல் எவ்விதம் கலங்கியது! மலைபோல் வந்த இப்பிரிவினால் என் மனக்கடல் ஏன் கலங்காது?

கருட:— அரசே! தாங்கள் இனி அம் மங்கை யைச் சேர சங்கைகொள்ள வேண்டாம். ஏனெனில் இம் மங்களப் பங்குனிக்குள் அவள் தங்களைச்சேர்ந்தா லொழிய உயிருடன் இருக்கமுடியாத நிலைக்கு வந்து விட்டனள்.

ரங்க:— அப்படியா? அவள் என்னைத் தேடி இங்கு வரப்போகிறாளா?

கருட:— வந்துவிட்டதாகவே தீர்மானித்துக் கொள்ளுங்கள்.

ரங்க:— (ஆச்சரியத்துடன்) வந்துவிட்டனளா? எங்கே? (நாலாபக்கங்களிலும் பார்த்து) ஆம். நண்ப! நீ கூறியதுண்மையே. அப்பெண்மணி இதோ வந்து

விட்டனள். என்ன ஆச்சரியம்! புன்முறுவலுடன் அவள் காணுமழகைப் பார். ஆஹா! இந்நுண்ணிடை பெருத்த இரு கொங்கைகளையும் எப்படித் தாங்குகிறது!

மையோகுழல்மழையோ முகமதியஞ்சிருள்திரளோ
வெய்யோன்மதன்வளைவில் விடுகணையோவிழிவேலோ
ஐயோஇருபெருமாமலை அழகாருமோர்கோம்பின்
பொய்யோவெனும் இடைதன்னிடைபொருகின்றதே
[அம்மா!

எனது உயிரே வா! மயிலே வா! குயிலே வா! கொஞ்சு கிளியே வா! இதுகாறும் விரஹத்தால் வெந்த எனது நெஞ்சினை குளிரச் செய். எனது ஆசைக்களஞ்சியமே! உயிரைப்போல நமது உடலையும் ஒன்றாகச் செய்துவிடு, இனிப் பிரியமுடியாதபடி. (சுவரண்டை ஓடுகிறார்).

கருட:— (விரைந்து முன் சென்று) அறிவுடை மேலோய்! அப் பெண்மணி இன்னும் வந்து விடவில்லை. நினது கைகொண்டு வரைந்த சித்திரமிது.

[ரங்காஜன் திடுக்கிட்டு பிரமித்து நிற்கிறார்.
கருடன் கை கொடுத்து ஆஸநத்தில் அமர்த்துகிறார்]

ரங்க:— (சிறிது நேரம் கழித்து) நண்ப! இது சித்திரமா? என்ன விசித்திரம்! சித்திரத்திலேயே இவ்வளவு வனப்பும் கவர்ச்சியும்! நேரில் கண்டால்?

கருட:— ஆல் எதற்கு? தாங்கள் நேரே கண்களாலா அம்மங்கையின் வனப்பைக் கூடிய சீக்கிரத்தில் பருகப் போகிறீர்கள்.

ரங்க:— நண்ப! நான் நினைக்கின்றேன், என்னைப் போலவே ஓர் சித்திரம் எழுதி, பிரமனால் உயிர்ப்பிக்கப் பட்டவள் தான் அவ்வனிதாமணி என்று.

கருட:— அப் பெண்மணியைப் பிரமன் சிருஷ்டிக்கவில்லை. இந் நானிலத்தின் ஸாரமே உருவெடுத்தாற் போல, இவ்வுலகத்தில் தானே வந்துதித்தனள்.

ரங்க:— ஒக்கும். பிரமனுக்கு இத்துணை வனப்புவாய்ந்த ஓர் பெண்மணியைப் படைக்கும் திறமேது? நண்ப! இச் சித்திரத்தை எடு. (சித்திரத்தைப் பெற்று) என் நண்ப! இச் சித்திரத்தில் அவளழகில் கோடியில் ஒரு பங்கேனும் காணப்படுகிறதோ?

கருட:— முழு அழகும் காணப்படுகிறது. அதனால்தானே அப்பெண்மணியை நேரிற் கண்டாற்போல தங்களுக்குப் பிரமம் உண்டாயிற்று.

ரங்க:— அவளும் சித்திரத்தில் வல்லவளாயிருப்பாளல்லவா?

கருட:— ஆம். அதை அவள் எழுதிய எழுத்துக்களே உணர்த்துகின்றனவே.

ரங்க:— உண்மைதான். சுசீலையின் மூலமாகவந்த கடித எழுத்துக்கள் என் கண் முன்பே நிற்கின்றன. அக்கடிதம் எனக்குச் சிறிது ஆற்றல் அளிக்கிறது. அதனால் அக்கடிதத்தை நான் கீழே வைப்பதே கிடையாது. (கடிதத்தை எடுக்க, காணாமல்) அந்தோ! என்செய்வேன்? (அழுகிறார்)

கருட:— அரிய வீரனே! இதென்ன செயல்? நான் கடிதத்தைக் கண்டுபிடித்துத் தருகிறேன். தைரியத்தைக் கைக்கொள்க.

(இதற்குள் சபை கூடுவதற்காக மணி அடிக்கப்படுகிறது)

ரங்க:— நண்ப! சபைகூட மணி அடித்தாகி விட்டது இச்சித்திரத்தைப் பத்திரமாய் மறைத்துவை.

(கருடன் அவஸரத்தோடு மறைத்துவைக்கிறார் சபையோர்கள் வந்து வணங்கி, தக்க ஆஸநத்தில் அமருகின்றனர். பிராட்டி ரங்கராஜனுடன் ஸிம்மாஸனத்திலமருகிறாள்).

(இதற்குள் ஓர் சேவகன் வாயிலில் பெரியாழ்வார் வந்திருப்பதாகத் தெரிவிக்கிறான்)

ரங்க:— உடன் அவரை அழைத்துவா.

சேவகன்:— உத்திரவுப்படி. (செல்கிறான்).

[பெரியாழ்வாரும் ஆண்டாளும் வருகின்றனர். ரங்கராஜன் முதலிய யாவரும் எதிர் கொண்டு வரவேற்கின்றனர். யாவரும் ஆஸநத்தில் அமருகின்றனர். ஆண்டாள் மட்டும் நிற்கிறாள் தந்தை பக்கத்தில்.]

பெரியாழ்வார்:— அரங்கச் செல்வமோங்கட்டும்.

ரங்க:— (தனக்குள்) நான் இதுகாறும் எவளுக்காக அளவிலாமல் அல்லல்பட்டேனோ, அந்நங்கை இதோ வந்து விட்டனள். பிராட்டியென் மார்பில்

தான் வஸிக்கின்றனள். இப் பெண்மணியோ என் நெஞ்சினுள்ளேயே நித்யவாஸம் செய்கின்றனள். ஆனால் பிராட்டி முன்னிலையில் இவளை நான் எப்படி ஏற்பது? (வெளியில்) அந்தணரேறே! எங்களைச் சன்மானிக்க இங்கு எழுந்தருளிய காரணத்தை அறிய விரும்புகிறேன்.

பெரி:— இவ்விடத்து ஸ்ரீ முகப்படி இப் பெண்மணியை இங்கு ஸமர்ப்பிக்க வந்தேன்.

ரங்க:— (ஆச்சரியத்துடன்) ஸ்ரீமுகமா? எது ஸ்ரீமுகம்?

பெரி:— (திடுக்கிட்டு) என்ன அதற்குள் மறந்து விட்டீர்களா?

ரங்க.— நான் தங்களுக்குக் கடிதமெழுதவில்லையே.

பெரி:— இதோ தங்கள் கடிதமிருக்கிறதே.

(கடிதத்தைக் காட்டுகிறார்)

ரங்க:— இது என் கடிதம்தானா?

பெரி:— ஆம். தங்கள் கையெழுத்துக்கூட இருக்கிறது.

ரங்க:— நான் தங்களுக்குக் கடிதம் எழுதியதாக ஞாபகமில்லையே.

பெரி:— தங்களுக்கு ஞாபகமில்லை அரசராதலின். நான் கடிதத்தை நேரே காட்டுகிறேனே, அதற்கென்ன செய்வது?

ரங்க:— கருட! அதை வாங்கிப் பார், நான் கையெழுத்திட்டிருக்கிறேனோ என்று.

கருட:— (வாங்கி) ஆம். இது தங்கள் கை யெழுத்துத்தான்.

ரங்க;— (ஆச்சரியத்துடன்) அப்படியா? அதைப் படி கேட்போம்.

கருட:—

ரங்கராஜன்,
திருவரங்கம்.

அன்புமிகுந்த பட்டர்பிரானுக்கு,

நாம் தங்கள் புதல்வியின் காதற்பக்தியில் கட்டுண்டோம். திருமகளும் இசைந்தனள். நிகழும் பங்குனியில் உத்தரநாள் பௌர்ணமிதிதி வெள்ளிக் கிழமை அன்று அன்புமிக்காளை அழைத்து அவைக்கண் வரவும். நாம் மனமுவந் தேற்றுக்கொள்வோம்.

இங்ஙனம்,
தங்கள்
அழகியமணவாளன்.

ரங்க:— ஆஹா! இதென்ன ஆச்சரியம்! நான் இப்பெண்மணியை அழைத்துவரும்படி எழுதினேனோ, இல்லவே இல்லை. இது ஏதோ சூழ்ச்சியாயிருக்கிறது.

பெரி:— (கோபத்துடன்) சூழ்ச்சியா? வெகு அழகாகச் சொல்கிறீர்கள். பிறந்தது முதல் சபடம்

என்பதையே கேட்டறியா எம்போன்றார் செய்கை ஓர் பெரிய ராஜ்யாதிகாரிக்குச் சூழ்ச்சியாகத்தான் தோன்றும்.

ரங்க:— அந்தணரே! சினம் கொள்ளக்கூடாது. நான் கடிதம் எழுதியிருந்தால் கணக்கிலிருக்கும் அல்லவா?

பெரி:— இதென்ன ராஜீய விஷயமா? கணக்கில் வரிசை எண்ணம், நகல் காப்பி முதலியவை யிருப்பதற்கு.

ரங்க:— ராஜீயக் கணக்கில் இல்லாது போனாலும் சொந்தக் கணக்கிலாவது இருந்தே தீரும்.

பெரி:— சொந்தத்திலும் இது ரஹஸ்யமானதாயிற்றே.

ரங்க:— இது ரஹஸ்யமானால் கடிதத்தில் அவைக் கண் வரும்படி எழுதியிருக்குமா? தாங்கள் தான் சபைக்கு வருவீர்களா?

பெரி:— அப்படியானால் கணக்கைப் பாருங்கள்.

ரங்க:— கருட! கணக்கைப் பார்.

கருட:— (கடிதக் குறிப்புக்கணக்கைப் பார்த்து) இதில் தாங்கள் கடிதம் எழுதியதாகக் காணவில்லை.

ரங்க:— நாம் பொய் சொல்கிறோமா?

பெரி:— (பிராட்டியை நோக்கி) ஏனம்மா! தாங்களும் இசைந்ததாகக் கடிதத்தில் காண்கிறதே, தாங்க

ளாவது இவ்விஷயத்தில் நியாயம் கிடைக்க வழிசெய்ய லாகாதா?

ரங்கநாயகி:— (தனக்குள்) என் கணவன் இப் பெண்மணியிடம் காதல்கொண்டதை எனக்காக மறைக் கின்றனன். இனிப் பொறுத்துப் பார்ப்போம். (வெளியில்) பிராம்மணோத்தமரே! இதுவரையிலும் என் கணவன் இப் பெண்மணியிடம் காதல்கொண்ட தாகவே தெரிவிக்கவில்லை.

பேரி:— இதென்ன? அரசனே இவ்விதம் செய் தால் கேட்பது யார்? இது இருக்கட்டும். தாங்கள் இப் பெண்மணியை விரும்பியதற்கு வேறு சில சான்றுகளும் இருக்கின்றன. அவைகளை இப் பெண்மணியைக் கொண்டே சொல்லச் சொல்கிறேன். (ஆண்டாளை நோக்கி) இனி நீ அஞ்சுவதில் பயனில்லை. முன்னர் நடந்தவைகளை இப்பொழுது தெரிவித்துவிடு.

ஆண்டாள்:— (நாணிக்குனிந்து) நான் இச் சபையில் கூசாமல் எப்படித் தெரிவிப்பேன்?

ரங்க:— (தனக்குள்) அந்தோ! நான் எவ்வளவு வன்னெஞ்சன்! வலியவரும் மணியைத் தெருவில் எறிவாருண்டோ? இப் பெண்மணி பிராட்டி மூலமாக என்னை அடையலாகாதோ? இவள் தன் செஞ்சொற் கள் நெடுநாள் தேனில் ஊறினபோலும்! ஐயோ! தேனுள்ள இடம் தெரிந்தும் செல்லமாட்டா வண்டினம் போல் தவிக்கின்றேனே.

பெரியாழ்வார்:— குழந்தாய்! பயப்படாதே. தைரியமாக [illegible]

(ஆண்டாள் [illegible]கத்தால் சொல்லமாட்டாது குழறுகின்றனள்)

ரங்கநாயகி:— (தனக்குள்) எனக்காக எனது நாதன் காதல்கொள்ளாதவன்போல் நடிக்கின்றனன். இந்நங்கையோ நாணத்தால் சொல்லமாட்டாது தவிக்கின்றனள். இந்நிலையிலும் நான் வாளா இருத்தல் தகாது. (வெளிப்படையாக) நாத! தங்கள் மனம் இப்படிக் குழப்பம் அடைந்தால் என்ன செய்வது? இப்பெண்மணியிடம் அடங்காக் காதல் கொண்டும் நீங்கள் ஏன் மறுக்கின்றீர்கள்? உங்கள் காதலை இக்கடிதம் தான் நன்கு வெளிப்படுத்துகின்றதே.

ரங்க:— நான் இக்கடிதம் எழுதவில்லையே.

ரங்கநாயகி:— நாத! ஏன் மறைக்கவேண்டும்? உங்கள் இருவர் காதலையும் நான் நன்கு அறிவேன். இப்பெண்மணியிடமிருந்து வந்த கடிதமும் என் கை வசமே உளது. (கடிதத்தைக் காட்டுகிறாள்) தங்களது சயனஅறையில் இரு மூன்று தினங்கட்கு முன்பு இதைநான் கண்டெடுத்தேன். இக்கடிதத்தில் "அலர் வாழ்மங்கை—அலகிலா அகன்மார்போனே" என்று குறிப்பிட்டிருப்பதைக் கண்டு பெரும் மகிழ்வுகொண்டேன். மேலும் இவள் என்னைப் புருஷகாரமாகப் பற்றி இருக்கின்றனள். ஆதலின் இவள் பேரின்ப முற யான் முயற்சித்தேன். உடன் தங்கள் கையெழுத்

திட்டு நானே இக்கடிதம் எழுதி அனுப்பினேன். இப் பெண்மணி யெழுதிய கடிதத்தைக்கண்டேனும் ஆறி இருக்கும் தங்களுக்கு, இதைக்காணுமல் பிரிவுத்துன்பம் அதிகமாகிவிடப்போகிறதேயென்று, இறையும் பிரியாது இரு மூன்று தினங்களாக விநோதமாகப் போது போகும்படி செய்தேன். இதற்குள் எவ்விதத்திலேனும் இன்று இப்பெண்மணியை இங்கு அழைத்து வரும்படி பணியாட்களையும் அனுப்பினேன். இன்று இவள் வரும் நாளாகையால் நான் தங்களை நெருங்கவில்லை. ஆகையால் கபடத்தை விட்டு இம்மாலைதை ஏற்றருளுங்கள்.

ரங்க:— (புன்முறுவலுடன்) உன் அனுமதிக்காகத்தான் இவ்வளவு தாமதம்.

[ரங்கநாயகி கீழ் இறங்கி ஆண்டாளையும் ஆஸநத்தில் ஏற்றி அரியனது அருகே அமரச்செய்து தானும் அமருகின்றனள்.]

பெரியாழ்வார்:— (மெய்மறந்து) ஆஹா! என்ன ஆநந்தம்! எனக்கு எத்துணைப் பெருமை கிடைத்து விட்டது! இத்தகைய பெண்மணியைப் பெற்றதனுலன்றோ சர்வலோக சரண்யனைக் கண்ணாரக்கண்டு களிக்கும் பெற்றிமை பெற்றேன். கடும் தவம் புரிந்தும் நெடுங்காலனை அடுக்கமாட்டாது இடர்படும் மானிடருக்கு ஓர் அளவுண்டோ? முள்ளுடைத்தேனும் மணமுள்ள மலர்தருவதால் அன்றோ தாழையை மாந்தர் மதிக்கின்றனர். அந்தே போல் யானும் கோதை

(மாலை ஆண்டாளுமாம்) கொடுப்பதால் அன்றோ அரங்க னரால் மாமனர் என மதிப்பிடப்பெற்றேன். ஆஹா! என் பெண்மணி மணவாளாவனைப் பள்ளிகொள் மண வாளரொடு மணம்புணர்ந்து கூடிவிட்டனள். இவ் வுயரிய தம்பதிகட்குத் திருஷ்டி வாராமே பல்லாண்டு பாடுவோம்.

பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு
பல்கோடி நூறுயிரம்
மல்லாண்டதிண்டோள் மணிவண்ணு உன்
செவ்வடி செவ்வி திருகாப்பு
அடியோமோடு நின்னேடும் பிரிவின்றி ஆயிரம்பல் [லாண்டு
வடிவாரு நின்மலராளும் இம்மலர்சூடியும் பல் [லாண்டு
வடிவார் சோதிவலத்துறையும் சுடராழியும் பல் [லாண்டு
படைபோர்புக்கு முழங்கும் அப்பாஞ்சசன்னியமும் [பல்லாண்டே.

ஆஹா! அவ்வருணிறைச் செங்கண்மாலினைக் கண்டுகொண்டே இருந்தாலும் போதாதோ? ஆரா வமுதன்றோ அவன்! (கண்ணை விழித்துப் பார்த்து அங்கொருவரையும் காணுது ஏங்கி) அந்தோ! அம்மாயப் பிரான் மறைந்தான்போலும். ஞானப்பிரானை இவ் வூனக் கண்ணுல் எவ்வளவு நேரந்தான் காணமுடியும்? கோதாய்! நீ நெடுநாள் சேவைதந்தவளாயிற்றே. நீயுமோ மறைந்தனை? கோதாய்! உன்னைச் செங்கமலச் செல்விபோல் வளர்த்தேனே. அதுபோல் அங்கும் நீ

வளருவாயா? அந்தோ! எனக்கு வேறு ஒரு மகவு மில்லையே. நீ அஞ்சு குடிக்கு ஒரு சந்ததியாயிற்றே. இனி யார் முகம் கண்டு மகிழுவேன்.

ஒருமகள் தன்னையுடையேனுலகம் நிறைந்தபுகழால்
திருமகள்போல வளர்த்தேன் செங்கண்மால்தான்
[கொண்டுபோனான்
பெருமகளாய்க்குடிவாழ்ந்து பெரும்பிள்ளைபெற்ற
[வசோதை
மருமகளைக்கண்டுகந்து மணாட்டுப்புறம் செய்யுங்
கொலோ?

அசரீரி:— மாமா! வருந்தவேண்டாம் நாம் வில்லி நகரில் நின் மகளுடன் அரங்கமன்னாரெனப் பெயர் பூண்டு மணமகனாய்ச் சேவை சாதிக்கிறோம். மகிழ் வுடன் செல்லுவீராக.

பெரி:— தங்யோஸ்மி. முன்பும் நின் மகள் என்ற அமிழ்தைச் செவி மடுத்தேன். இப்பொழுதும் அஃதே போல்! ஆஹா! அரங்கன் நாணிருக்கும் இடம் தேடி வரப்போகிறான்! வேறு இனி என்னவேண்டுவது?

வாழ்கவழகிய மாமணவாளனார்
வாழ்கமலரிடை வாழ்மணவாட்டியும்
வாழ்கமலர்முடி வைத்தமணாட்டியும்
வாழ்கவிறைகழல் வாழ்த்துமவர்களே.

செல்கிறார்.

**ஆறுமங்கம் மூன்றுங்களம் முற்றிற்று.**

**ஆறுமங்கம் முற்றிற்று.**

வாழ்கவாழ்கடல் வையகம் எல்லாம்
வாழ்கவாழ் கருத்துள்ளுடைக்கவிவார்
வாழ்கவாழ்வார்க ளிம்மண்மிசை வாய்மொழி
வாழ்கவாழ்க இம்மார்கழி நோன்புமே.




சுபம்.